உரிமை பதிவு
யுவ ஆவணி
திருவள்ளுவராண்டு 2026
1995 ஆவணி

ஆறு பகுதிகள் கொண்ட ஒரு
தொகுதியின் விலை.

இலங்கையில் : ரூபா 2700|-
இந்தியாவில்: ரூபா 1200|-
பிறநாடுகளில் அமெரிக்க டாலர் 60|-

பாட்டு முதற் குறிப்பு அகராதி
பாட்டுடைக் கோவில் அகராதி
பாட்டுத் தலைப்பு அகராதி
ஆசிரியர் அகராதி
என்பன
பன்னிரண்டாம் பகுதியில்
இறுதிப் பக்கங்களாக உள.
தொகுப்பின் பொருளடக்கம்
முழுமையும் எல்லாப் பகுதிகளிலும்
முன் பக்கங்களில் உள.

ஒளிஅச்சுக்கோப்பு, அச்சிடல்:
காந்தளகம், 4, முதல்மாடி, 834, அண்ணாசாலை,
சென்னை-600 002. தொலைபேசி: 834505, 8250050.

யாழ்ப்பாணத்து நல்லூர்
அருள்மிகு கந்தசுவாமி கோவில்

# பொருளடக்கம்

## ஒன்பதாம் பகுதி



## பத்தாம்பகுதி

## பதினோராம் பகுதி



## பன்னிரண்டாம் பகுதி

உ

# குறுக்குத்துறை குமரன் பிள்ளைத்தமிழ்

## வித்துவான் தி. சு. ஆறுமுகம்

### கணபதி காப்பு

காராரும் மெய்யன் கணபதிபொற் றாட்பணிந்து
சீரார்பிள் ளைத்தமிழும் செப்புவேன் — நீராருந்
திண்பொருநை சூழுந் திருவுரு மாமலையன்
விண்புகழன் வேலவன் மீது.

### கலைமகள் காப்பு

குறுக்குத் துறைவாழ் குமரனைப் பிள்ளை
உருக்காட்டி யித்தமிழ்யா னோதப் — பெருக்காருங்
கல்விக் கிறைவி கலைமகள் தன்னருளை
நல்விதமா யீவாள் நயந்து. 2

### தமிழ்ப்புலவர் காப்பு

நக்கீர ராதி நலமார் தமிழ்ப்புலவர்
எக்கேடுஞ் சூழா தெனைக்காப்பர் — சொக்காரும்
வேலவன் மீது வியனார் தமிழுரைக்கும்
பாலக னென்பால் பரிந்து. 3

### அவையடக்கம்

முத்துக் குமார சாமிமிசை
மொய்ம்பார் குமர குருபரனும்
முருகார் சேயூர் முருகனுக்கு
முனைந்தே வீர ராகவனும்



சுத்துங் கடல்சூழ் செந்திலுக்குக்
கவிஞன் பகழிக் கூத்தனும்வேற்
கந்தன் திருவி டைக்கழிமேல்
கலையார் மீ.சு.பிள்ளையரும்

தெத்தும் பாலாற் றணிகரைசேர்
திருவி ரிஞ்சை முருகனுக்குத்
திறனார் மார்க்க சகாயனெனுந்
தேவ னவனுந் திருமலைவாழ்

சத்துக் குமரன் மீதுபண்டா
ரத்தை யாவும் பக்தியுடன்
சாற்றிப் பிள்ளைத் தமிழினிதாய்ச்
சகமேற் கொண்டார் பெரும்புகழே. 4

புகழ்சேர் தூய பாவலர் தம்
பெருமை யறியா தன்னவர் போல்
பிள்ளைக் கவியான் பாடுவது
பெரிதும் நகைப்பிற் கிடமாமே

இகழ்சேர்ந் திடினு மெதுவரினும்
எண்ணா திந்தத் தமிழ்க்கூறல்
இகலார் புலியின் வரிமான
எளிய பூனை யிடலொக்கும்

அகழ்சேர் பொருநை யணிகரைபால்
அழகார் பதியாம் நெல்வேலி
யணித்தாங் குறுக்குத் துறைதங்கி
அன்பர்க் கருளுந் திருக்குமரன்

திகழ்சேர் சேயோன் புகழ்பேசும்
திறமார் பனுவ லிதுநோக்கிச்
சிறியே னெளிமை பாராது
தெளிவா ரறிஞர் கொள்வாரே. 5

## 1. காப்புப் பருவம்

### திருமால்

பூதங்கு நான்முகன் பெருமிதத் தோடன்று
பொற்கயிலை புகுந்து மூலப்

பிரணவ மறியாது பொறிகலங்கி நின்றிடப்
பிடித்தவனைச் சென்னி குட்டிக்

காதங்குக் கிள்ளியே காவலிடு வேலவன்
கடைவாய்நீ ரொழுகு பாலன்
காமலியுந் திருவுரு மாமலைவாழ் சேயவன்
கந்தனெனுங் குழவி தனையே

மாதங்கு மார்பினன் மழைமுகில் நிறத்தவன்
மாமுனிவர் பாற்பி ழைத்து
மாசிலா ஜயவிஜயர் மண்மீது வந்துழலு
மாறருள் செய்த தூயன்

சேதங்கு சிவனடி தேடியுங் காணாத
செங்கண்ண னாய திருமால்
தீதொன்றும் நேராது தினங்காக்கு மாறவன்
திருவடிக ளேது திப்பாம். 6

## சந்தி விநாயகர்

கானிலுறு வள்ளியெனும் காதலார் மான்மகளைக்
கடிமணஞ் செயவி ழைந்து
காட்டாத வடிவெலாங் காட்டித்தன் முன்னவன்
கருணையால் வென்ற கோவை

ஊனிலவும் வேலணி யுன்னதனைத் தந்தைக்கும்
உபதேசஞ் செய்த குருவை
உருவாருந் திருவுரு மாமலையின் நாதனாய்
ஒளிர்சேயைக் காக்க வென்றே

மாநிலமென் பதுதனது மாதாபி தாவென
மாண்புட னுணர்ந்து மன்னார்
மலரடிகள் வலம்வந்து வணங்கியோர் நொடிதனில்
மாங்கனி யடைந்த பாலன்

தேனிலவு மோதகச் செங்கையன் அருகுசேர்
திருமுடிய னைங்க ரத்தன்
திருநெல்லை சந்திவி நாயகனின் சீரடி
சிரமீது கொள்வ மாதோ. 7



## நெல்லையப்பர்

நெஞ்சமதை யோர்நிலை நிறுத்தாமற் கீரனும்
நியமமதில் தவறி நின்ற
நேரமதி லோர்பூதம் நாடிச்சி றையிட்டு
நீராடு மாற தேச

தஞ்சமென அன்னவன் சாற்றுமுரு கேற்றங்குச்
சார்பூதம் கொன்று மஃதால்
தளைப்பட்ட ஆயிரவர் தமைமீட்டி யருளிய
சண்முகனைக் காக்க வென்றே

கஞ்சனொடு மாயனுங் காணாத மேலவன்
கணுவரை யுதித்த முத்தன்
காயவிடு சாலியைக் கடுமழைப் பெருக்கினிற்
காத்துலற அருள்பு ரிந்தோன்

பஞ்சனைய சீரடிப் பாவையாங் காந்திமதி
பாகமுறு பரம நாதன்
பழனஞ்சூழ் திருநெல்லைப் பதிநெல்லை யப்பனின்
பாதமலர் சிந்தை செய்வாம். 8

## காந்திமதி

புழைதங்கு நெடுங்கரப் பிள்ளையாம் யானைக்குப்
பின்வந்த சிறிய பிள்ளை
பேரானை யென்னுமயி ராவதம் பெறுயானை
பின்தொடரு மிளைய களிறு

மழைதங்கு திருவுரு மாமலையில் மேவிய
மயிலேறு தூய காளை
மானீன்ற மான்மிசை மையலுறு வேடுவ
மதலைதனைக் காக்க வென்றே

கழைதங்கு முத்தருளங் களிநடங் கொளுமாறு
கவின்பெறு தூய முத்தும்
கருநீல மணியெனுங் கண்டனிடப் பாகமே
காணலுறு நீல மணியும்

உழைதங்கு பவளநிற ஓங்கல்பாற் றாவியணை
உயர்பசுங் கொடியு மாகி

உலகீன்றுங் கன்னியாய் ஒளிர்காந்தி மதிபாதம்
உரிமையுடன் சிந்தை செய்வாம். 9

## இலக்குமி

மாங்கனிக் காகமுனம் மாதாபி தாவிட்டு
மலைதேடிச் சென்ற ஆண்டி
மண்டையோட் டினையேந்திப் பலியேற்று
வாழாண்டி
மகனாய சிறிய ஆண்டி

தீங்கனி யெனவள்ளி நாயகியை நாரதன்
செப்புமுரை கேட்டு மயங்கித்
திணறிடும் மூதாண்டி தானெனவே மாறிய
சேயவனைக் காக்க வென்றே

சேங்கமல நாண்மலர் சேர்நங்கை பாற்கடல்
தோன்றியநற் பேடை யன்னம்
திண்டாடு மேழையர் சேமிப்பி லின்றியவர்
சிந்தையுறு செல்வ மங்கை

பூங்கணை யனங்களைப் பெற்றதிரு மாதுகலை
பெற்றவரை யிகலுந் தேவி
புயல்வண்ணன் மார்புறை பொன்மக ளிலக்குமி
பொன்னடியை வாழ்த்து கிற்பாம். 10

## நான் முகன்

உந்திக் கமலந் தனதகமாய்
உறைந்தே யுலகைப் படைப்பவனும்
ஓதி மப்புள் ளுடையவனும்
ஒருநான் குசிரங் கொண்டவனும்

சந்தி ரனைச்சூ டரன்முடியைச்
சற்றும் அறியாப் பொய்யவனும்
சகல கலையாள் நாதனுமாம்
சதுர்வே தனையே போற்றிடுவோம்

தந்திக் கருமைத் தம்பியுமாய்த்
தந்திக் கினிய நம்பியுமாய்த்
தந்தைக் குயர்ந்த தேசிகனாய்த்
தாசர்க் கெளிய தாசனுமாய்



மந்தி குலவும் மாம்பொழில்சூழ்
மல்லல் குறுக்குத் துறைமேவும்
மயிலோன் சேவற் கொடிகொண்ட
மதலை தன்னைக் காத்திடவே. 11

## கலைமகள்

ஆய கலைகள் நான்கினோடும்
ஆறு பத்துக் குந்தலைவி
அயனின் திருநா அமர்தேவி
அணிசேர் வெண்டா மரையன்னம்

மாய வுலகில் மாந்தரகம்
மண்டு மிருள்தீர் பெருஞ்சோதி
மாண்பார் தூய கலைமகளை
வாழ்த்தி வாழ்த்தி வணங்குதுமே

தூய தமிழின் தனித்தெய்வம்
துகள்தீர் தெய்வம் பரதெய்வம்
சிவனின் நுதற்கண் சோதியெனத்
துள்ளிக் குதித்தே வருதெய்வம்

சேய வடிவ முறுதெய்வம்
செகத்துக் கெல்லாம் பெருந்தெய்வம்
திருவார் குறுக்குத் துறைதெய்வம்
சேயோன் தன்னைக் காத்திடவே. 12

## கார்த்திகைப் பெண்கள்

ஏந்தி யெடுத்துச் சீராட்டி
இணைசேர் நகிலின் பாலூட்டி
இதழார் நளினத் தொட்டிலிலே
இனிதாய்க் கிடத்தித் தாலாட்டிக்

காந்தி விளங்கும் மகவாறைக்
கங்கை தனிலோர் பொய்கையிலே
கருத்தாய் வளர்த்த இருமூன்று
கார்த்தி கைப்பெண் ணடிபணிவாம்

சாந்தி திகழும் ஓராறு
சவியார் முகத்தன் பெருமுத்தன்

சரண மடைந்தார்க் கருள்புரியும்
சத்தா மிருமூன் றக்கரத்தன்

மாந்தித் தேனை மதிமயங்கும்
வரிவண் டினங்கள் முரல்சோலை
வளமார் குறுக்குத் துறைமேவும்
வடிவே லவனைக் காத்திடவே. 13

## சக்திவேல்

தொடரும் வினைகள் தீர்த்திடவே
துள்ளி வருங்கூர் வடிவேலை
சூரன் மயக்கம் தொலைத்தாங்குத்
தோகை மயிலாக் கிடும்வேலை

படரும் வரையாந் தாருகனின்
பண்டி கிழித்த பணிவேலை
பாவை சக்தி யருள் வேலைப்
பணிந்து பணிந்து போற்றுவமே

சுடரும் பாலன் ஆறுமுகன்
சோதி ரூபன் வடிவழகன்
துய்யன் மெய்யன் நறுங்கடம்பன்
துடிசேர் முருகன் மால்மருகன்

அடருஞ் சோலைப் பசுஞ்சினையில்
அலரோ டளியும் முகிலுந்தூங்
கணிசேர் குறுக்குத் துறைமேவும்
அயிலோன் தன்னைக் காத்திடவே. 14

## முருகனடியார்

சங்கத் தலைவன் நக்கீரன்
சந்தப் புகழ்பா டருணகிரி
சாரும் புராணக் கச்சியப்பன்
சதுர்வே தியன்ப கழிக்கூத்தன்

துங்கக் கலிசெய் குமரகுரு
தொண்டன் வீர வாகெனுமித்
தூயர் தொடர்பா வலர்பாதம்
தொழுது தொழுது வாழ்த்துவமே



பங்கப் பழனத் துழுசாலில்
பணில் நிரைகள் குவிமுத்தால்
பகல்போ லிரவில் ஒளிவளரும்
பதியாம் நெல்லைக் கழகுதரும்

புங்கத் திருவா றாம்பொருநை
பொன்னைக் கொழிக்குங் கரைமேவும்
பொழிலார் குறுக்குத் துறையான்நற்
புனிதன் றனையே புரந்திடவே. 15

## 2. செங்கீரைப் பருவம்

கந்தமு றுஞ்சுண முங்கலந் துன்னுடல்
மின்னிட நன்றுனை நீராட்டிக்
காய்ந்திட நின்சிறு குஞ்சியைப் பஞ்செனக்
காரகில் தந்திடு புகையூட்டிக்

கொந்தமு றுஞ்சிறு கொண்டைமு டிந்துகு
லுங்கிட அன்னதிற் பூச்சூட்டிக்
குஞ்சம ணிந்தது தொங்கிட நின்னுதற்
கோலமு றும்படி நீறோடு

செந்துரப் பொன்றில கம்தரித் துன்மிசை
செம்பொனி லாம்பல பூண்பூட்டிச்
சிந்தைம கிழ்ந்திட நின்மருங் கொன்றியுன்
செம்மொழி யெம்செவி கொண்டிங்குச்

சந்ததம் எங்களின் நெஞ்சுக னிந்திடச்
சந்தமோ டாடுக செங்கீரை
சங்கணி யும்பொரு நைத்துறை தங்கிய
சண்முக ஆடுக செங்கீரை. 16

பாணியி ரண்டினைப பார்மிசை யூன்றியுன்
பாதம தொன்றினைப் பின்நீட்டிப்
பாங்குட னோர்முழங் காலினை யூன்றிநின்
பால்வடி யும்முகம் நேர்தூக்கிச்

சோணித மென்சிறு வாய்தனி லூறலுஞ்
சிந்திடக் கொன்னையும் நீபேசிச்
சிந்தை கனிந்திட எம்கலி தீர்த்திடச்
செங்குக ஆடுக செங்கீரை

வேணியு றுங்கடி தொங்கல விழ்ந்திட
வேலவ ஆடுக செங்கீரை
வேதன கந்திகில் கொண்டிட முண்டிய
வித்தக ஆடுக செங்கீரை

சேணிய னின்மகள் குஞ்சரி கொஞ்சிய
செங்குக ஆடுக செங்கீரை
செங்கயல் சேர்பொரு நைத்துறை தங்கிய
தெய்வமே ஆடுக செங்கீரை. 17

செங்குவ ளைச்சுனை மண்டுப ரங்கிரிச்
செங்குக ஆடுக செங்கீரை
செந்திலெ னுந்திருச் சீரலை வாய்தனிச்
செல்வனே ஆடுக செங்கீரை

மங்குல டர்ந்திடு நன்குடி தங்கிய
மஞ்ஞைய ஆடுக செங்கீரை
மாமறை யந்தணர் மண்டிய ஏரக
மைந்தனே ஆடுக செங்கீரை

கொங்குநி றைந்திடு குன்றுதொ றாடிய
குன்றவ ஆடுக செங்கீரை
கொந்தவி ழுங்கனி சிந்திடு சோலையு
கந்தவ ஆடுக செங்கீரை

சங்குத னிற்சிவன் தன்னிடம் வந்தவ
சரவண ஆடுக செங்கீரை
சங்கணி யும்பொரு நைத்துறை தங்கிய
சண்முக ஆடுக செங்கீரை. 18

சின்னவ னென்றுனைப் பன்னுவ தென்சில
சின்னவ ரும்புவி தன்மீது
சேய்மையு றுஞ்சுர ரின்னுல கெங்கணும்
செங்குக நின்நிகர் வாருளரோ

நன்னல ராம்மகி ழுஞ்சிறி தென்னினும்
நன்மண மன்னதின் வேறுண்டோ
நாயக னேயிது மேனறி யாரவர்
நாடுமுன் கீர்த்தியும் மேலன்றோ



மன்னணி யம்பரந் தன்னிலு டுக்களும்
எண்ணில வாயினும் வெண்ணிலவு
மங்கல மாயொளி தந்திட லொக்குமோ
மந்தர வர்சொலும் மாய்ந்திடவே

சன்னமு றுந்துணர் தொங்கல சைந்திடச்
சரவண ஆடுக செங்கீரை
சங்கணி யும்பொரு நைத்துறை தங்கிய
சண்முக ஆடுக செங்கீரை. 19

குஞ்சியு றுந்தர ளம்புனை தொங்கலுங்
குஞ்சமும் நெற்றிபு ரண்டாடக்
குண்டல மின்னொளி தந்திரு கன்னமுங்
கொஞ்சியு னஞ்செவி நின்றாட

நெஞ்சிலு றங்கிடு மைம்படைப் பொன்னணி
நின்றுக லைந்தது நான்றாட
நின்கரம் மண்டுப சுந்தொடி யுங்கலீ
ரென்றுகு லைந்துகு லைந்தாட

கொஞ்சிடு கிண்கிணி பொன்னரை ஞாணுடன்
கூடிய திர்ந்தும சைந்தாடக்
கோதறு தண்டைசி லம்புகி டந்திசை
கொண்டுபு ரண்டுபு ரண்டாடச்

சிஞ்சித இன்னொலி யுங்குத லைச்சொலுஞ்
சிந்திட ஆடுக செங்கீரை
செந்தமிழ் சேர்பொரு நைத்துறை தங்கிய
சேவல ஆடுக செங்கீரை. 20

**வேறு**

பொதிகைப் பொருப்பின் குதித்திறங்கிப்
புனஞ்சேர் குறிஞ்சி வளம்பெருக்கிப்
புலத்தி யன்றன் சுதன்பெருமை
புவிக்கே காட்டித் தனைச்சேர்ந்தார்

விதியாம் பாவ வினைதீர்த்து
வியனார் முல்லை வளங்கண்டு
விளைசெய் மருதம் புகுந்துலவி
விரிந்தே தேங்கி நெல்விளைத்துக்

குதியா தேகி வைகுண்டங்
கூடி நீங்கி நெய்தலிலே
குழைவாய்த் தூங்கி விழுந்துருண்டு
கோலக் கடலின் கரத்தணையும்

நதியாம் பொருநை யலைமுழக்கில்
நயந்தா டிடுக செங்கீரை
நலமார் குறுக்குத் துறைநாதா
நன்கா டிடுக செங்கீரை. 21

விடஞ்சேர் கண்டன் மிசையன்பு
மிகவே கொண்டு தூய்மையுடன்
வெண்ணீ றணிந்து வீடுபெற்ற
மெய்யர் வாழ்ந்த நாட்டினிலே

உடம்பெல் லாம்வெண் ணீறணிந்தும்
ஒற்றைக் காலில் தவமிருந்தும்
உறுவார் தம்மை ஏய்த்தொழிக்கும்
ஒழுக்கங் கெட்ட வஞ்சகர்போல்

சடஞ்சேர் நாரை நின்றுறங்கிச்
சமயம் நோக்கிக் காத்திருந்து
தரமாய்ச் சிக்கும் கயல்விழுங்கிச்
சாருங் களிப்பால் நடமாடுந்

தடஞ்சேர் பொருநை யலைமுழக்கில்
சார்ந்தா டிடுக செங்கீரை
தண்ணங் குறுக்குத் துறைவாழும்
தகையா டிடுக செங்கீரை. 22

ஒருசார் செந்நெல் விளைந்துவிழும்
ஒருசார் கன்னல் பருத்தோங்கும்
ஒருசார் மஞ்சள் அடர்ந்துவிழும்
ஒருசார் சேம்பு போட்டியிடும்

ஒருசார் மாவின் கனிசொரியும்
ஒருசார் நெல்லிச் சரங்குலுங்கும்
ஒருசார் பெண்ணை பழமுதிர்க்கும்
ஒருசார் தெங்கின் குலைபெருக்கும்



ஒருசார் முல்லை முறுவலிக்கும்
ஒருசார் பிச்சி மணங்கமழும்
ஒருசார் அரளி கொந்தவிழும்
ஒழியா வளமும் வளர்ந்தோங்கித்

திருசார் குறுக்குத் துறைவாழும்
தேவே ஆடாய் செங்கீரை
தேவர் குறைதீர் ஆறுமுகச்
சேயா டிடுக செங்கீரை. 23

அள்ளக் குறையா அமுதேநீ
அருளோ டிங்கு வீற்றிருக்க
அறியா துன்னைத்தொழவேசீ
ரலைவாய் நாடி மன்பதைகள்

வள்ளல்' தூய சுலோசனனிவ்
வளமார் பொருநை மீதமைத்த
வாரா வதியின் வழியாயும்
வலிவா ரிருப்புப் பாதையினும்

வெள்ளம் போன்று விரைந்தோடும்
விந்தை தன்னை நீகண்டு
வெறித்தே யிங்ஙன் நின்றாயோ
விரைந்தா டிடுக செங்கீரை

தொள்ளக் கழனி சூழ்துறைவாழ்
துரையா டிடுக செங்கீரை
தேவர் குறைதீர் ஆறுமுகச்
சேயா டிடுக செங்கீரை. 24

அளிநல் லிசையை யிசைத்துவர
அலைகள் முழவா யொலிகிளப்ப
அலவன் கரையில் நடனமிட
அணிசேர் குமுதம் தலையாட்ட

நளினம் விரிந்து விளக்குயர்த்த
நானா விதமாய்ப் பலகயல்கள்
நனிவான் துள்ளிக் கீழ்விழுந்து
நலமே வர்ண வெடிமுழக்க

ஒளிசேர் நாரை மேதிமிசை
உவப்பா யேறித் தடங்கயத்துள்
உலவிப் பவனி வருமெழில்கண்
டுவந்தா டிடுக செங்கீரை

தெளிநீர்ப் பொருநைத் துறைமேவுந்
துரையா டிடுக செங்கீரை
தேவர் குறைதீர் ஆறுமுகச்
சேயா டிடுக செங்கீரை. 25

## 3. தாலப்பருவம்

உளமா ரன்புட னுனையே ஆடக
வுயர்பொன் தொட்டிலிற் றான்கிடத்தி
உவந்தே யாமிவண் தாலாட் டிடவினும்
உறங்கா தேனழு கின்றாயோ

வளமார் மேதிகள் வதியார் கயத்திடை
வந்தே நீலமும் மேய்ந்தலைய
வாகார் மீன்பல மருண்டே துள்ளியும்
வானில் பாய்ந்துதி ரும்பிவிழ

நளமார் பாசிலை நடுவண் வீழ்ந்தொரு
நலிவார் வெண்கயல் தான்துடிக்க
நாடும் ஓதிமப் பேடொன் றன்னதை
நலமா யாட்டியு றங்கவிடும்

வளமார் பேரெழிற் குறுக்குத் துறையுறை
வயவா தாலல தாலேலோ
வண்ணக் குறமகள் நண்ணுந் திருவுரு
வள்ளால் தாலல தாலேலோ. 26

தரணி நாயகன் தந்தை மற்றுமித்
தரணி நாயகி தாயலவோ
தனய னன்னவர்க் காயு நின்னுளந்
தயங்கக் காரண மேதுளதோ

தரணி முழுவதுந் தாய்மா மன்முனந்
தாங்கி யுண்டதை யெண்ணினையோ
தார மெனஅவன் பெண்கள் நீகொளத்
தரணி சீதனம் நினக்கன்றோ



அரணி யத்தவ னேகி வாடியும்
ஆடு மாடுகள் பின்சென்றும்
அல்லற் படுபவ னன்றோ இஃதுநீ
அறிந்தே தாலல தாலேலோ

பரணி யடுத்தவர் பரிவாய்ப் போற்றிய
பாலா தாலல தாலேலோ
பாங்கார் தொல்பதி குறுக்குத் துறையுறை
பவனே தாலல தாலேலோ. 27

ஒருகால் தொட்டிலை யெட்டி யுதைத்திட
ஒருகா லைக்கரம் பற்றியதன்
உருவார் பெருவிர லுன்வாய் தன்னுற
உவந்து குதப்பிநீ தாலேலோ

அருகால் நெஞ்சும கிழ்ந்தோ னைங்கரன்
ஆனை முகத்தவ னோடிகலி
அகட விகடமும் புரிந்த சோர்வற
அன்பே தாலல தாலேலோ

பெருகால் கள்பல பொழிய நீர்பொழி
பொருநைச் செல்வனே தாலேலோ
பிறையைச் சூடிய இறைவர்க் கோதிய
பெரும தாலல தாலேலோ

மறுகார் மங்கலக் குறுக்குத் துறையுறை
மன்னா தாலல தாலேலோ
வண்ணக் குறமகள் நண்ணுந் திருவுரு
வள்ளால் தாலல தாலேலோ. 28

சங்க மமர்ந்திடுந் தகைசா லேழெழு
சதுர ரன்றொரு நாட்கூடிச்
சடையோன் செய்தருள் தரமா ரகப்பொருள்
தனக்கே ஒவ்வொரு வுரையெழுதித்

துங்க முடையதெம் முரையே யெனவவர்
சொல்லித் தமதுளு மிகல்புரிந்து
துய்யோ னருளிய வாறுன் றுணைதனைத்
தேடி வந்திட அன்னவர்தம்

பங்க மொழிந்திட வாய்பே சாமலே
பரமாம் மெய்யுரை காட்டியருள்
பரமே வணிகனின் பால னெனவரு
பவனே தாலல தாலேலோ

வங்க முறுபொரு நைசேர் திருவுரு
மலைவே லாயுத தாலேலோ
வண்ணக் குறமகள் நண்ணுந் திருவுரு
வள்ளால் தாலல தாலேலோ. 29

பாசார் தாமரை யிலையின் மீதொரு
பசுமண் டூகமுந் தான்பதுங்கிப்
பாங்கார் குவளையி லாடோர் தும்பியைப்
பற்றி விழுங்கிடப் பக்கமொரு

தேசார் வெண்ணிற நாரை கண்டதைத்
தேட்ட மோடுவி ரைந்துகவ்வத்
தேடி யலையொரு வேடன் நாரையைச்
சுட்டு வீழ்த்தியெ டுத்தேக

மாசார் தாரணி மீதோ ருயிரினை
மற்றோ ருயிர்பிடித் துண்டலையும்
மகிமை யீதென மகிழும் மாந்தருன்
மலரார் சேவடி தொழவந்தார்

ஆசா ரவருறும் ஆனந் தந்தனை
அறியா துறங்குநீ தாலேலோ
அளியார் காவுயர் குறுக்குத் துறையுறை
ஐயா தாலல தாலேலோ. 30

கண்ணே மணியே தாலேலோ
கரும்பே தேனே தாலேலோ
கண்ணின் சுடரே தாலேலோ
கற்பகத் தருவே தாலேலோ

விண்ணோர் முதல்வா தாலேலோ
வியனார் தமிழே தாலேலோ
வேலா யுதனே தாலேலோ
வேடர் மருகா தாலேலோ



மண்ணோர்க் கிறைவா தாலேலோ
மயில்வா கனனே தாலேலோ
மாலின் மருகா தாலேலோ
வளர்சே வலனே தாலேலோ

பண்ணார் கிளிகள் பயில்சோலை
படருங் குறுக்குத் துறைவாழும்
பால குமரா தாலேலோ
பரம குருவே தாலேலோ. 31

தேடக் கிடையாத் திரவியமே
தின்னத் தெவிட்டாத் தேன்பாகே
தொட்டால் மணக்கும் சவ்வாதே
சொன்னா லினிக்கும் திருப்பெயரே

நாடக் கிடையாப் பரம்பொருளே
நலிவோர்க் கென்றும் நன்மருந்தே
நால்வே தத்தி னுட்பொருளே
நாவல் லோரின் நற்றுணையே

வேடக் குமரி மணவாளா
வேழக் குமரித் திருநாதா
வினைதீர்த் தருளும் வேளாளா
விரும்பும் அடியார்க் குயர்தோழா

பாடக் குயில்கள் பயில்சோலை
படருங் குறுக்குத் துறைவாழும்
பால குமரா தாலேலோ
பரம குருவே தாலேலோ. 32

சுனைகள் முற்றுந் தாமரையே
சோலை யெங்குந் தாமரையே
சூழக் கரையிற் குருகாரே
தூய்மை யில்லார் குறுகாரே

வினைகள் தீர்க்குந் திருவடிவேல்
வியனார் தாமரைத் திருவடியே
விண்ணிற் றிரளுங் கரும்புயலே
விளையும் செந்நெல் கரும்பயலே

மனைகள் தோறும் மங்கலனே
மாதர் கற்பே மன்கலனே
மக்க ளுள்ளந் தண்ணளியே
மலர்கள் மேவும் பண்ணளியே

பனைகள் சூழும் பசுஞ்சோலை
படருங் குறுக்குத் துறைவாழும்
பால குமரா தாலேலோ
பரம குருவே தாலேலோ. 33

நாடிப் புனத்தே வேடுவனாய்
நங்கை வள்ளி தனைவிரும்பி
நளின மென்வா யைக்கிளறி
நடுவே வேங்கை மரமாகிக்

கூடிக் குலவிக் குமரனெனுங்
கோலம் மாறிக் கிழமாகிக்
கொம்புத் தேனுந் தினைமாவுங்
கொடுக்க வுண்டு விக்கலொடும்

ஆடிச் சென்று சுனைநீரில்
அவளை யிழுத்து நீவிழுந்தே
ஆடும் ஆட்டத் தயர்வொழிய
அன்பே தாலே தாலேலோ

பாடிக் களிக்கும் பைங்கிளிகள்
பகிலுங் குறுக்குத் துறைவாழும்
பால முருகா தாலேலோ
பரம குருவே தாலேலோ. 34

தந்தை மார்பிற் காலூன்றித்
தடந்தோ ளேறி யன்னவர்தம்
தலையார் கங்கை நீர்மொண்டு
தடங்கைத் தீயைப் பெய்தணைத்தும்

சிந்தை யன்பால் தொண்டரிடும்
சிரமா ரருகம் புல்லெடுத்துச்
செவ்வி யிளமான் வாய்கொடுத்தும்
சிறிய பிறையாங் குணில்கொண்டு



தொந்தொ மென்று தமருகத்தின்
தொனியைக் கிளப்பிக் களிகூர்ந்தும்
தோணி யாகப் பிறைமதியைத்
தூய கங்கை தனில்விடுத்தும்

சந்த மோடு நீயாடுஞ்
சலிப்பே தீரத் தாலேலோ
சவியார் குறுக்குத் துறைவாழும்
சண்மு காநீ தாலேலோ. 35

## 4. சப்பாணிப் பருவம்

சாந்தினா லேமெழுகிச் சதுராகக் கோலமிடு
தரைமீது நீய மர்ந்து
சதங்கையணி நின்னிரு தாளகல நீட்டியே
சவியாரும் முகம்நி மிர்த்தி

காந்திசேர் நின்குமுத வாயொழுகு தேறலால்
கலவையணி மார்பு நனைய
கனிவாருங் குதலைமொழிக் கேற்பவே கரத்திலணி
கடகங்கள் தாமொ லிக்கச்

சேந்தனே வாலையருட் செல்வனே கரந்தூக்கிச்
சப்பாணி கொட்டி யருளே
சேவலங் கொடிநாத சிகிவாக னாநீயும்
சப்பாணி கொட்டி யருளே

சாந்திசேர் திருவதனச் சண்முகக் குமராநீ
சப்பாணி கொட்டி யருளே
சந்ததஞ் சாறுநிறை திருவுரு மாமலையாய்
சப்பாணி கொட்டி யருளே. 36

கொக்கரக் கோவென்று கோழியுஞ் சப்பாணி
கேற்பவே கூவி யொலிக்கக்
கோலமயில் திமிதிமியென் றேகுதித் தாட்டமிடக்
கோதிலாக் கங்கை மீதுன்

பக்கரில் தங்கியுனைப் பாங்குடன் பேணாறு
பாவையரும் பண்ணி சைக்கப்

பாலனுன் துணைவீர வாகாதி யாவரும்
பார்த்துனையே பாணி கொட்ட

அக்கரம் ஐந்தானும் அம்மையுந் தலையாட்டி
அகங்களி கூர்ந்து நோக்க
ஆனைமுகன் தன்கரம் ஆட்டியுனைச் சுற்றிவந்
தாடிமகிழ்ந் தார்ப்ப ரிக்க

சக்கரப் படையானும் சதுர்முகனுந் தலையாட்டச்
சப்பாணி கொட்டி யருளே
சந்ததஞ் சாறுநிறை திருவுரு மாமலையாய்
சப்பாணி கொட்டி யருளே. 37

எட்டாத தூரத்தி லிளமிரவி தோன்றிட
எழுந்தோடி யலைமங் கையர்
எட்டிப்பி டித்தவனை யிழுத்தணைத் திடுவமென
எகிரிமென் மேற்கு திக்க

மட்டாருந் தாமரையின் மீதுமனங் கொண்டிரவி
மாண்புறு கரங்கள் நீட்டி
மகிழ்ந்தணைத் தன்னவளின் முகமலரச் செய்ததை
மாறாமற் பார்த்து நொந்து

கிட்டாத பொருண்மீது கொண்டதம் ஆசைதனின்
கேட்டினை நினைந்து வெட்கிக்
கிட்டியுறு பாறைமேல் மோதித்தம் ஆவிவிடுங்
கிளர்ச்சிநிறை பொருநை யோரம்

தட்டாது கார்மொழியுந் திருவுரு மாமலையாய்
சப்பாணி கொட்டி யருளே
சந்தனக் களபமுறு தடமார்பு வேலவா
சப்பாணி கொட்டி யருளே. 38

கரங்கொண்ட காசினைக் கண்டுமதற் கேற்பவே
காமுகர்கள் தம்மைக் கூடிக்
கலவியெனும் பொய்ப்பொருள் கடிசாக விற்றிடுங்
கணிகையரை நாடி நொந்தே

உரங்கொண்ட நல்லுடல் உள்ளபொருள் யாவுமே
ஒழிந்திடவும் உள்ளம் மாறி



உன்பாதம் நாடியே உயிர்விடமு யன்றிட
ஒளியாருன் னருள டைந்து

வரங்கொண்ட வாக்கினால் வண்டமிழிற் சந்தமும்
வரையாது பெய்த மைத்து
வண்ணமுறு கிள்ளையாய் வளரருண கிரிபாடும்
வண்புகழிற் கேற்ப நீயும்

சரங்கொண்ட மாவடருந் திருவுரு மலைநாதா
சப்பாணி கொட்டி யருளே
சந்தனக் களபமுறு தடமார்பு வேலவா
சப்பாணி கொட்டி யருளே. 39

கூடின்றி யெங்குமே கோலாக லத்தோடு
கொஞ்சமுங் கவலை யின்றிக்
குலைதொங்கு மாமரக் காவுள்ளே மாங்குயில்
கூவியிசை பாடி மகிழ

வீடின்றித் தாவியலை வான்கவிகள் தேன்பொழி
வருக்கைய வீர்ந்தெ டுத்து
வாய்முட்ட இட்டுக்கு தப்பியுண் டானந்த
வாரிவீழ்ந் தாடி மகிழக்

கேடின்றி விண்தடவு கிளைமருத வங்கினிற்
குஞ்சுகளுந் தாமு மாகக்
குலவியே வாழ்கின்ற கிள்ளைகள் பயமின்றிக்
கொஞ்சியிசை பாடி மகிழச்

சூடின்றிச் சோலையடர் திருவுரு மாமலையாய்
சப்பாணி கொட்டி யருளே
சுந்தரா களபமுறு சுடர்மார்பு வேலவா
சப்பாணி கொட்டி யருளே. 40

கல்லெனுந் தோளுடை மள்ளரும் முன்னரே
காரெனும் மேதிகளைக்
கட்டிய டித்துழு தேமரங் கொண்டுசீ
ராக்கிய கம்பலையில்

அல்லெனும் வண்ணமு டன்பொலி வாருமு
மூத்தியர் தாம்கூடி

அணியணி யாகவே நட்டுமு டித்தபின்
அண்மையி லோர்மருதம்

மெல்லென மாருதம் மேவிய நீழலில்
மொய்த்துவி டாயொழித்து
முழவினை யாடவர் முழக்கிடப் பண்ணொலி
மிக்குறு மாறிசைக்கச்

கொல்லெனப் புள்ளொலி கூடுரு மாமலை
கொட்டுக சப்பாணி
கோதறு சண்முக நாதம கிழ்ந்துநீ
கொட்டுக சப்பாணி. 41

பாங்கர மைந்துள மாமரக் காவினுள்
பாய்ந்துமி ளஞ்சிறுவர்
பதுங்கிநு ழைந்துபற் பைங்கனி தம்மையே
பற்றியெ டுத்தோடி

ஆங்கெவ ருந்தமைக் கண்டிடு வாரென
அண்மையு றும்பொருநை
யாற்றிடை கண்டக ருந்திடல் கள்மிசை
ஆவலு டனமர்ந்து

தாங்கரங் கொண்டுள மாங்கனி யுண்ணவத்
திட்டுகள் மேலெழும்பித்
தள்ளிட நீரினில் தட்டழிந் தேகரை
சார்ந்தவண் நோக்கிடவங்

கோங்கெரு மைகளைக் கண்டுந கைத்திடுங்
கோப்படர் மாமலை வாழ்
கோதறு சண்முக நாதம கிழ்ந்துநீ
கொட்டுக சப்பாணி. 42

சற்றும டக்கமி லாதுகு தித்திடர்
சார்ந்திடுஞ் சல்லியர்போல்
தங்குத லாற்றடி யின்றிவெ ளிப்புறம்
சாடிய லைவதனால்

செற்றுறு மீன்வலைப் பட்டுநீர்ப் புள்ளிடஞ்
சிக்கியு யிரிழக்கும்



செங்கெளி றுங்கய லும்விரி சள்ளையு
மாதிய மீன்களுடன்

முற்றுறு புத்திய ரொக்குமி றாலயி
ரையொடு தேளியெனும்
மூழ்கிய வாறுதண் ணீரினு ளேயடி
மேவிய மீனினமும்

கொற்றமு டன்நிறை கொள்பொரு நைக்குக
கொட்டுக சப்பாணி
கோதறு சண்முக நாதம கிழ்ந்துநீ
கொட்டுக சப்பாணி. 43

பெற்றவன் இல்லினில் உண்டுமோ இல்லையோ
போதிய செல்வமது
புரிந்தவ ளாயினும் பேரள விற்பறித்
தேபல சீர்களுடன்

உற்றவன் இல்லினுக் கேகிடும் பெண்களை
யொப்பவு யர்பொதிகை
உச்சியி னின்றிழிந் தேயகிற் சந்தனம்
ஓங்குபெ ருந்தேக்கு

மற்றவண் கண்டிடு தந்தமு டன்மண
மிக்குறு பல்பொருளும்
மண்ணினை யும்விட வேமன மின்றியே
வாரியி முத்தோடிக்

கொற்றமு டன்கடல் செல்பொரு நைக்குக
கொட்டுக சப்பாணி
கோதறு சண்முக நாதம கிழ்ந்துநீ
கொட்டுக சப்பாணி. 44

வேதனி வர்ந்திடு வெண்பனி யோதிமம்
வீமமுற் றோலமிட
விண்டுவின் வாகன மாங்கரு டன்வெருண்
டோடியே விண்பறக்கக்

காதனி கீழ்த்திடு காமனி வர்கிளி
கம்மென வேவிரைய

கரகமு மேகலி யோடும றைந்திடக்
காசினி சுற்றிவரும்

ஆதவ னின்பரி யேழுமி கப்பயந்
தாடிவி ரைந்தோட
அந்தக னின்பக டுங்குலைந் தோடிட
ஆர்ப்பரித் தேகூவுங்

கோதறு சேவலு யர்த்திய வேலவ
கொட்டுக சப்பாணி
குஞ்சரி கொஞ்சுகு றுக்குத்து றையிறை
கொட்டுக சப்பாணி. 45

## 5. முத்தப் பருவம்

மெத்தார் வமுடன் நின்தாயர்
மீனாம் அறுவர் தாமூட்டும்
முலையின் தீம்பா லல்லாது
மேவு திசைக ளெண்பாலும்

சத்தாய் விளங்கும் மலைமாதின்
சவியார் நகில்நின் றெழுபாலும்
சாற்றுஞ் சுரவான் மடிசேருஞ்
சளிப்புங் கைப்பும் அறுபாலும்

வத்தாத் தமிழின் ஐம்பாலும்
வளமார் மறையின் நாற்பாலும்
வள்ள லளித்த முப்பாலும்
மணக்கு முன்றன் திருவாயால்

முத்தாய்ச் சொரிந்தே யிருபாலும்
மிளிரும் பொருநை யொருபால்வாழ்
முருகா முத்தம் தந்தருளே
முதல்வா முத்தம் தந்தருளே. 46

தேனார் முல்லை சிரிப்பதுடன்
தினையுஞ் சிரிக்கும் புனத்திடையே
சென்றே சேடி மார்களுடன்
சிரித்தே பேசிக் குரலெழுப்பி



மானார் வள்ளி கவண்வீச
மங்கை யவள்தன் இன்குரலால்
மருங்கார் புட்கள் மருளாமல்
மலர மலரத் தாம்சிரிக்கும்

கானார் காட்சி தனைக்கண்டு
கரமே கொட்டி நீசிரித்த
கனியாங் கொவ்வை யிதழாலே
கனிவாய் முத்தம் தந்தருளே

மேனா டெங்கும் ஒளிசிறக்கும்
மேன்மைக் குறுக்குத் துறைவாழும்
முருகா முத்தம் தந்தருளே
முதல்வா முத்தம் தந்தருளே. 47

வாலைக் குமரி மடிதனிலே
வாகா யமர்ந்தே அருகிருக்கும்
வாம பாகன் திருமார்பில்
வளமா ரடிகள் கொண்டுதைத்து

பாலைப் பொழியும் ஒருநகிலைப்
பவளச் செவ்வா யாற்சுவைத்துப்
படமார் மற்றொன் றின்நுனியைப்
பற்றி விரலா லேநெருடச்

சேலைப் பழிக்குந் திருவிழியாள்
சிறிதே பொய்யாய்ச் சினங்காட்டத்
திடுக்கிட் டேநீ முகமாறிச்
சிணுங்கிப் பிதுக்கு மிதழ்குவித்து

மேலைக் காகும் வழிகாட்டும்
முருகா முத்தம் தந்தருளே
மேலாங் குறுக்குத் துறைதங்கும்
மெய்யே முத்தம் தந்தருளே. 48

வருகின் றானே தமிழ்ப்புலவன்
வாரி வழங்க நேர்ந்திடுமே
வறுமை பின்னர் நமையணுக
வாடி யுழல்வோ மென்றெண்ணி

அருகிற் புலவன் வருமுன்னே
அகமும் புறமும் அடைத்துவைக்கும்
அமணன் போன்று மூடிநிற்கும்
அரும்பா முகைகள் தம்மோடும்

உருகிப் புலவர் நிலைகாணின்
உள்ளத் துடனே முகமலர்ந்தே
உதவுங் குமணன் போலளியை
உவந்தே ஏற்கும் விரிநளினம்

முருகிப் பொலியும் நீர்நிலைகள்
மேவுங் குறுக்குத் துறைவாழும்
முருகா முத்தம் தந்தருளே
முதல்வா முத்தம் தந்தருளே. 49

புகலிப் பிள்ளை யெனத்தோன்றிப்
புரைதீர் ஞானப் பாலருந்திப்
புனிதன் தோடார் செவியரனைப்
போற்றிச் சைவம் தனைவளர்த்தும்

இகலிப் பேணா அமணரிடும்
எரியுங் கடந்து வாதுவென்றும்
எளியன் கூனன் பாண்டியனை
இணைத்தே சைவத் திடைதிருப்பி

நகலில் லாத பூம்பாவை
நலமா ருடலம் பெறச்செய்தும்
நயந்தாண் பனையைப் பெண்ணாக்கி
நல்லோர் துதிக்க வாழ்பிள்ளாய்

முகலி மான பிணியறுக்கும்
மொய்ம்பார் பொருநைத் துறைவாழும்
முருகா முத்தம் தந்தருளே
முதல்வா முத்தம் தந்தருளே. 50

மேக மோடு திங்க ளீயும்
முத்தி னுக்குண் டாம்விலை
மீன மிப்பி சங்கு நத்தின்
முத்தி னுக்குண் டாம்விலை



பூக மோடு வாழை செந்நெல்
மூங்கி லிக்கு தாமரை
பொருந்து நித்தி லந்த னக்கும்
பேச லுண்டு மாம்விலை

நாக மோடு டும்பி டங்கர்
நல்கு முத்திற் காம்விலை
நாகம் பன்றி ஆவின் தந்தம்
நல்கு மார மாம்விலை

ஏக னேநின் முத்தினுக்கு
யார்ம திப்ப ரேவிலை
ஏர்கு றுக்குத் துறைக டம்ப
இனிய முத்தம் தருகவே. 51

ஆட கப்பொன் னால மைந்த
அன்ன வூசல் தொட்டிலில்
அண்ண லேநீ யாடு கின்ற
அந்த நேர மைங்கரன்

நாட அங்கு நகை யாட்டி
நகைமு கந்தான் காட்டிட
நாலு வாயி னால ணைத்து
நன்கு முத்த மவன்தர

நீட வன்கை நீபி டித்து
நெருடிக் காதைக் கிள்ளியே
நோவு கொண்டுபிளிறு மந்த
நேயன் கோலங் கண்டுநீ

கூட வேந கைக்குஞ் செம்மைக்
கொவ்வை வாய்கு வித்துமே
கோல மார்கு றுக்குத் துறைய
கொஞ்சி முத்தம் தருகவே. 52

பூது றந்து சனக மன்னன்
புதல்வி யாகித் தசரதன்
பொன்ம னைப்பு குந்து நாதன்
பின்னர் காடு சென்றுதன்

மீது மோகங் கொள்ளி லங்கை
வேந்த னுள்ளும் நாட்டிலும்
மேவித் துன்ப முற்ற பாரி
மீட்க வென்று வானரம்

சேது கட்டச் சென்று சுற்றஞ்
சேரப் பத்து சென்னியைச்
செருவில் வென்று வாகை கொண்ட
சீத ரன்றன் மருகனே

கோது மேவாக் குறுக்குத் துறைய
குமர முத்தந் தருகவே
கொவ்வை யாமி தழ்கு வித்துக்
கொஞ்சி முத்தம் தருகவே. 53

மாசு கொண்ட நெஞ்சன் யானுன்
மீது காதல் கொண்டிலேன்
மாண்பு மிக்குன் கோவிற் காலை
மாலை சுற்ற வந்திலேன்

தூசு நீக்கு முன்றன் செய்ய
துய்ய பாதம் நாடிலேன்
தொண்ட ரோடு கூடி நின்றுன்
துதிக னிந்து பாடிலேன்

ஆசு மிக்க என்னை யும்நீ
ஆட்கொண் டன்பு பாய்ச்சியே
அன்னை தன்னின் பரிவு காட்டும்
அருளை யெங்ஙன் பேசுவேன்

மூசு வண்டு சேர்கு றுக்குத்
துறைய முத்தம் தருகவே
மேவு மன்பர் பாவ மோட்டும்
முருக முத்தம் தருகவே. 54

வண்ப லாவை மந்தி கீற
வழிந்து பொங்கு தேறலும்
வண்ணக் கிள்ளை கொத்த வாழை
வாய்ப மூத்தின் நறவமும்



திண்ப லால ணிற்க டிக்கச்
சிதறு மாவின் பிரசமும்
தேன்க ரும்பை மேதி தின்னச்
சிந்து கின்ற பிழியுடன்

கண்ப டாத நளின மல்லி
குவளை மீது திண்வரால்
கடிய வேக மோடு பாயக்
கசியுந் தேனிற் கலந்திட

எண்ப டும்போ தேயி னிக்கும்
ஏர்கு றுக்குத் துறையுறும்
ஏந்த லேவா யூறல் சிந்த
இனிது முத்தம் தருகவே. 55

## 6. வருகைப் பருவம்

உருகும் அடியா ருள்ளமதில்
ஊறும் நறுந்தே னேவருக
உறுவார் பிறவிக் கடல்கடத்தும்
உறுதிப் புணையே நீவருக

பெருகு தமிழின் பயன்வருக
பேரா னந்தக் கடல்வருக
புவனம் விளக்கு மொளிவருக
பிள்ளாய் வருக புனமாது

பருகு மெழிலே வருகசிவப்
பழமே வருக ஞானவொளி
பரப்புஞ் சுடரே வருகசிவை
பாலா வருக ஆறுமுக

முருகா வருக என்னாளும்
முகிலார் குறுக்குத் துறைவாழும்
முதல்வா வருக பிரணவமும்
மொழிவோய் வருக வந்தருளே. 56

கந்தா வருக கண்ணுதலின்
கண்ணே வருக ஒளிவளரும்

கண்ணின் மணியே நீவருக
கவினார் மயின்மீ தேவருக

நந்தா விளக்கே வருகவுனை
நாடு மெங்கள் மனவிருளை
நலியச் செய்யும் கதிர்வருக
நாதா மெய்ப்போ தாவருக

சிந்தா மணியே நீவருக
சிரித்தே மயக்குஞ் சேய்வருக
தேனார் குதலை மொழியாலே
திணற வைப்போ னேவருக

மந்தா கினியென் வண்பொருநை
வளமார் குறுக்குத் துறைவாழும்
மதலாய் வருக வந்தருளே
மன்னே வருக வந்தருளே. 57

வாவென் றடியார் அழைத்திடுங்கால்
வாரா திருக்க வழக்குண்டோ
வாரா திருப்பின் நின்சிகையை
வாரி முடியேன் பூச்சூட்டேன்

ஓவென் றலறி யழுதாலும்
உனையான் பாரேன் மையெழுதேன்
ஒளியார் பணிகள் பூட்டேனே
ஒக்க லேற்றேன் உளமுருகத்

தாவென் றேநீ புலம்பிடினும்
தருவே னோயான் பாலமுதம்
தண்ணா ரமுத மதிகாட்டித்
தணியே னேயுன் அழுகைதனை

மாவென் றுஞ்சேர் திருவுருமா
மலைவாழ் கண்ணே வந்தருளே
மங்கை வள்ளி மகிழ்மார்பா
மயின்மீ தேறி வந்தருளே. 58

வருந்தி யுன்னை யானழைக்க
வாரா திருக்கும் வகையென்னே



வள்ளிக் குறத்தி பின்சென்ற
வம்ப னென்றே பழித்தேனோ

பொருந்தி வாழா மல்மாமன்
பிள்ளை பதுமன் தனைக்குட்டிப்
பிடித்தே சிறையிட் டாயெனவே
பேசி யுனைநான் வதைத்தேனோ

அருந்தீ யேந்து மப்பனுக்கே
ஆசா னென்றே யிகழ்ந்தேனோ
ஆண்டிப் பயலென் றுலகறிய
அலர்சொல் கூறித் தூற்றினனோ

செருந்தி மண்டுந் தண்பொருநை
சேருங் குறுக்குத் துறைவாழும்
செல்வா வருக வந்தருளே
சேயே வருக வந்தருளே. 59

அயிலு மொளியைக் கான்றிவர
அரிமால் நெஞ்சங் கனிந்துவர
அடியார் துதிகள் பாடிவர
ஆனை முகத்தோ னாடிவர

மயிலுந் தோகை விரித்துவர
மாண்பார் சேவல் கூவிவர
மறையோன் வேதம் முழக்கிவர
மகவான் கவரி வீசிவர

பயிலு மொன்பான் வீரர்களும்
பாங்கர் விருது கூறிவர
பாவை யிருவோர் பக்கமுற
பால்வெண் யானை மிசைவருவாய்

தொயிலுந் தாருங் கமழ்மார்பா
துதிசேர் குறுக்குத் துறைவாழும்
துரையே வருக வந்தருளே
சுடரே வருக வந்தருளே. 60

மாக நாயகனுன் மாம னந்தரணி
மாது மாமியுனக் கன்னவர்

மாரி யேழிலடி நான்கை யேவியுமிம்
மண்ணை நன்குவள மாக்கியும்

ஏக மாகமுறை யேதம் மோர்மருகன்
என்று போட்டியுட னுதவலால்
ஏரின் மாவுழவர் ஏறு போன்றுமுழைத்
தேற்ற மோடுபயிர் செய்வதால்

பூக மாமெனவே கன்ன லைநெல்லைப்
பேணிக் கன்னலென மாந்தரும்
பேத லித்தணுகு மாறு மீறிவளர்
பூவ ளம்பெருகு நாடனே

போக பூமியென லாங்கு றுக்குத்துறை
புண்ணி யாவருக வருகவே
போத நாதனிரு மாது நாதனெனும்
பிள்ளை யேவருக வருகவே. 61

ஆறு மாமுகனே கூறு மேழைமொழி
ஐய! நின்செவிக்கொண் டில்லையோ
ஆறி ரண்டுவிழி கொண்டு மென்றனிடர்
ஆண்ட வாஅறிய வில்லையோ

ஏறு மாமயிற்கு மார னேஅயிலை
ஏந்து நாதனெனு மேந்தலே
ஏக னேயடியர் மோக லோபமவை
ஏக வேயருளைச் செய்பவா

மீறு பேரழகி வேட மாதுதனை
மேவி யேபுனமுஞ் சென்றவா
மிக்க பேதையனென் பக்கம் நீயருளி
மேவ ஏனினமுந் தாமதம்

ஆறு தண்பொருநை சேர்கு றுக்குத்துறை
அண்ண லேவருக வருகவே
அந்த மார்முருக சுந்த ராவருக
ஐய னேவருக வருகவே. 62

நேமி யானபுவி மீதி லேநதிகள்
வேறு வேறுதிசை யோடினும்



நீடு மாழிதனிற் கூட வேமுடிவில்
நேரு மேயதனைப் போலவே

பூமி மீதுபல சாமி யாமெனினும்
பூச னைமுழுதும் நின்னிடம்
போய டைந்திடுமன் றோவி தேபுதுமை
யல்ல வேவளலார் சொல்லரோ

யாமி ராப்பகலுங் கூடி நின்னடியை
ஏற்றி டாமலய லார்மதம்
ஏகி வேறிறையின் பாதம் நாடிடினும்
யாவு மேபொறுத்து வருகவே

காமி கப்படரும் சீர்கு றுக்குத்துறை
கந்த னேவருக வருகவே
காடு போகிவடி வேடு மாகியலை
காளை யேவருக வருகவே. 63

சைவ மேயுலகிற் சார நேகசம
யங்க ளுள்முதன்மை யாவதாம்
சங்க ரன்றனையே யெங்க ணும்நிறைப
ராப ரன் முதல்வ னென்பராம்

பைவ ளைத்தலையும் பாம்பு சூடியவன்
பரவு மாகுருநீ யாதலால்
பாலன் தானெனினும் பன்னு தேவதையுள்
பான்மை யேறியவ னாகுவை

கைவ ளைத்துனையே கந்த னேவருக
காவ லாவருக என்றுயான்
காத லாற்கனியக் கூவி டுஞ்சமயம்
காது மந்தமுறல் ஏன் நபம்

தைவ ரும்மருதஞ் சூழ்கு றுக்குத்துறை
சண்மு காவருக வருகவே
சந்த னக்களபக் கந்த மாரகலச்
சரவ ணாவருக வருகவே. 64

நார மோடுமன தாரப் பேரருளை
நாடி யோடிவரும் மேலவர்

நாத னேயுனது பாத மாமலரை
நாழி லாதுதொட நீயவர்
பார மேதொலைய நீறு வாணுதலிற்
பாலித் தேயவரை மாசிலாப்
பாக ராக்கிமலம் மூன்று நீக்கியவர்
பாலுட் காமமுத லாயவை
தூர வேவிலகு மாறு பேரருளைச்
சோனை போன்றுபொழிந் தாட்கொளும்
தூய்மை யேநினைந்து தேடி யானடைந்து
சூழ்ந்து ளேன்வருக வருகவே
கார டாதுபொழி சீர்கு றுக்குத்துறை
கந்த னேவருக வருகவே
காடு போகிவடி வேடு மாகியலை
காளை யேவருக வருகவே. 65

## 7. அம்புலிப்பருவம்

அலைவாய் வந்தாய் நீயிவனும்
அலைவாய் வந்தான் கடல்சூழும்
அகிலஞ் சுற்று வாயிவனும்
அகிலஞ் சுற்றி னானறிவாய்
அலைவார் கங்கை யடுத்தாய்நீ
அடுத்தா னிவனுங் கங்கைதனை
ஆரு மிருளை யவிப்பாய் நீ
அகத்து விருளை யிவனவிப்பான்
தலையா றுடையான் தலைநின்றாய்
தலையா றுடையான் தலைநின்றான்
தாரம் பலவே நீகொண்டாய்
தாரம் பலவே யிவன்கொண்டான்
கலையார் நீவி ரிணையாதல்
கண்டே வருக அம்புலியே
கவினார் குறுக்குத் துறையானைக்
கலந்தா டிடவா அம்புலியே. 66



அடைந்தாய் முன்னாள் மலர்த்தாரை
அடைந்தா னிவனும் மலர்த்தாரை
அளியார் சோதி வடிவானாய்
அழியாச் சோதி வடிவானான்
மிடைந்தா யுன்னுள் கரிமானை
மிடைந்தா னிவனுங் கரிமானை
வெளியே வருவாய் மலையேறி
வேல னிவனும் மலையேறி
குடைந்தாய் வெண்மைப் பால்வாரி
குடித்தா னிவனும் பால்வாரி
குளித்தே வருவாய் திருசேரக்
குலவி வருவான் திருசேர
அடைந்தார் பாவம் அறுப்பானோ
டாட வாவே அம்புலியே
அணிசேர் குறுக்குத் துறையானோ
டாட வாவே அம்புலியே. 67

மீன ரும்மை விரும்பிடவே
மேவி யவர்பால் நீர்சென்று
மார்பி னணைப்புக் குள்ளாகி
மடியிற் கிடந்து கண்வளர்ந்தீர்
கான மளிக்கும் ஆம்பலையே
கரங்கொண் டணைத்து நகைகாட்டி
கலந்து மகிழ்ந்தே அவர்வதனம்
கவின்பெற் றலரச் செய்திடுவீர்
வான ருடனே குலவியுமவ்
வானின் வழியே நீர்வந்து
மாறு முகங்கள் தாம்கொண்டும்
மானு வீர்நீ ரிருவீரும்
ஆன படியா லிவனழைத்தான்
ஆட வாவே அம்புலியே
அணிசேர் குறுக்குத் துறையானோ
டாட வாவே அம்புலியே. 68

பொருந்து மன்பா லிவனுன்னைப்
பேணி யழைத்தான் புரிந்திலையோ
பேதை மதியே சிறிதேனும்
பெம்மா னிவனுக் கிணையோநீ

திருந்து கலைக ளறுபத்து
நான்குங் கொண்டான் இவன்நீயோ
சேருங் கலைகள் பதினாறே
சிதறும் பலநா ளவைதாமும்

பருந்து தாங்கும் மால்மருகன்
பழுதில் வடிவன் செம்மதியன்
பாராய் நீயோ குறைவடிவன்
படர்கொண் டுழலும் வெண்மதியன்

பொருந்திக் குறுக்குத் துறையானைப்
போற்றி வாவே அம்புலியே
பொலிவார் வேல னிவனோடு
பிணைந்தா டிடவா அம்புலியே. 69

தக்க னென்னும் நின்மாமன்
தனக்கே நீயும் அஞ்சிடுவை
தக்கன் தாதை பிரமனையே
தலையிற் குட்டும் பெரியனிவன்

அக்க ரங்கள் ஆறுடையான்
அகளங் கன்நீ யோகளங்கன்
அகத்தி னிருளை யவன்மான
அகற்ற வொண்ணாய் நீசிறிதும்

பக்க முனக்குச் சிறுமானே
பாங்க ரிவர்க்குப் பெருமானே
பால னிவனும் பெருமானே
பாரா யிவையெ லாமுணர்ந்தே

இக்க ணமேநீ யிவனுடனே
இணைந்தா டிடவா அம்புலியே
எழிலார் குறுக்குத் துறையனுடன்
இனிதா டிடவா அம்புலியே. 70



**வேறு**

கூனலிளம் பிறைமதியே குமரனிவன் முன்னர்
கூறுதிரு ஞானமுறு குரவனெனத் தோன்றி
மீனவனின் கூனலுடன் மனவிருளும் போக்கி
மீட்டரனின் பாதமலர் மேவியுறச் செய்தான்
ஈனமுறும் பிறவிதனை எளிதெரிக்கு மிவன்முன்
என்புரியும் நின்வருத்தும் எளியசில நோய்தாம்
ஆனனமா றன்முருகன் அணிபொருநைத் துறையன்
அம்பரனோ டாடிடவே அம்புலிநீ வாவே. 71

எடுத்துனையே விழுங்கியுமிழ் எரிவிடஞ்சேர் பாம்பும்
எண்ணிடுமோ இவனமரும் எழின்மயில்முன் நாட
அடுத்துவருங் குருமனையைக் கெடுத்ததினால் நீயே
அடைந்த பெருஞ் சாபமதைக் கடிந்திடுவான் கண்டாய்

தொடுத்துரைசெய் தேவதைகள் தோன்றிடினும் பலவே
தொன்மையனிச் சண்முகன்போல் தேவரில ருண்மை
அடுத்தவரை யாள்முருகன் அணிபொருநைத் துறையன்
அம்பரனோ டாடிடவே அம்புலிநீ வாவே. 72

மாதமொரு முறைபிறந்து மாண்டிடுவாய் நீயே
மாறிமாறி பிறந்திறத்தல் மாட்சிமையோ சொல்வாய்
பேதமெது மெண்ணிடாது போதமுடன் நண்ணிப்
பிறவியெனும் நோய்தவிர வருகஇவன் பாலே

ஏதமொடு வேதனைகொண் டெத்தனை நாள் திரிவாய்
ஏனிதனை யுணரவிலை யின்னுமட மதியே
ஆதமுறு வான்முருகன் அணிபொருநைத் துறையன்
அம்பரனோ டாடிடவே அம்புலிநீ வாவே. 73

கூறுமொழி நின்செவியி லேறவிலை யோசொல்
கோபமிவன் கொள்ளமனத் தாபமடை வாய்நீ

சேருமரன் திருமுடிமீ தேறியிவன் நின்னைச்
சேர்த்திடுவ னங்குறையுஞ் சீறரவின் வாயுள்
மீறுமொளி கூர்வடிவேல் முன்னரன்று சூரன்
மேவுகதி காணிலையோ தாவிடுமுன் பாலே
ஆறுமுகன் சீறுமுன்னே அணிபொருநைத் துறையன்
அம்பரனோ டாடிடவே அம்புலிநீ வாவே. 74

பூதலமெ லாம்படைக்கும் வேதனுமே முன்னர்
பெற்றவிடர் கண்டுமுனக் குற்றதிடம் யாதே
ஓதலரி தாம்புகழன்ஒண்கரமார் சேவல்
ஒலிக்குடையும் நீயிவனின் வலிக்கெதிரா வாயோ
காதலதி கம்இவன்பால் கொண்டநவ வீரர்
கதமுறுவ ராயினும்நீ வதமுறுவாய் கண்டாய்
ஆதலினால் போதமுடன் அணிபொருநைத் துறையன்
அம்பரனோ டாடிடவே அம்புலிநீ வாவே. 75

## 8. சிற்றிற் பருவம்

விளைத்தே செந்நெல் வளந்தருஞ்செய்
வியனார் களியால் சுவரெழுப்பி
விதமாய் அறைகள் பலவாக்கி
விரித்தே யறலை யவையுள்ளே

இழைத்தே கோலம் மலர்த்தாதால்
எழிலா யெங்கும் வேணபொருள்
யாவுஞ் சேர்த்திங் கில்லமைத்தே
இணைந்தா டிடவே சிறுமியர்யாம்

கிளைத்தே நின்று கனிபழுத்துங்
கிறங்கி வருவார் மயல்தீர்த்தும்
கிளர்ந்தே படரால் நிழல்தனிலே
கூடி நின்றோம் கண்பாராய்

வளைத்தே பாயுந் தண்பொருநை
வளமார் குறுக்குத் துறைவாழும்
வள்ளால் சிற்றில் சிதையேலே
வடிவேல் சிற்றில் சிதையேலே. 76



அணிசேர் தெங்கங் குரும்பைகளால்
அட்டி லுள்ளே யடுப்பமைத்தங்(கு)
அணித்தே கண்ட தென்னோட்டை
யதன்மேல் தூதைக் கலமாக்கிக்

கணிசேர் மலர்வாய் தேனெடுத்துக்
கலந்தே யளவா யுலையேற்றிக்
காசு நீக்கிப் பருமணலைக்
களைந்தே வல்சி யெனப்புகட்டி

மணிசேர் பாளைக் கமுகினின்று
வெடித்தே யுதிரும் மணிபொறுக்கி
மலர்கள் தழைகள் கறியாக்கி
மாண்பா யடுதல் பாராயோ

திணிசேர் தோளா மனமிரங்காய்
சிறியேம் சிற்றில் சிதையேலே
தேசார் குறுக்குத் துறைவாழுந்
தேவே சிற்றில் சிதையேலே. 77

சரவண பவனே தாள்பணிந்தோம்
சவிநிறை சிற்றில் சிதையேலே
சயிலொளி பவனே தாள்பணிந்தோம்
சமைத்திடு மன்னம் சிதையேலே

பரிபுர பவனே பதம்பணிந்தோம்
படியுறு சிற்றில் சிதையேலே
பவமொழி பவனே பதம்பணிந்தோம்
பனிமலர்க் கறிகள் சிதையேலே

சிரவண மேற்பாய் எம்மொழிநீ
திகழொளி பவனே சிதையேலே
சிறுமியர் புரிந்த தவறேதோ
திரிபுர பவனே சிதையேலே

குரவணி பெரியோய் மறைசொல்லுங்
குழவியே சிற்றில் சிதையேலே
குடியெனக் குறுக்குத் துறைவாழுங்
குமரனே சிற்றில் சிதையேலே. 78

கந்தா சந்தா சிதையேலே
கண்ணே மன்னே சிதையேலே
கங்கை மைந்தா சிதையேலே
கவினார் முருகே சிதையேலே

நந்தா விளக்கே சிதையேலே
நலமார் தேவே சிதையேலே
நாதா போதா சிதையேலே
நளினப் பாதா சிதையேலே

சிந்தா மணியே சிதையேலே
சேவற் கொடியாய் சிதையேலே
சேயா தூயா சிதையேலே
சிகிவா கனனே சிதையேலே

செந்தார் மார்பா சிதையேலே
செய்சூழ் குறுக்குத் துறைவாழும்
செல்வா சிற்றில் சிதையேலே
சிறியேம் சிற்றில் சிதையேலே. 79

சிதைப்ப தெனநீ எண்ணிடுங்கால்
சிறியே மில்தான் கிடைத்ததுவோ
செகத்தே சிதைக்க வேண்டுபவர்
தெரிவாய் கணக்கி லடங்காரே

வதைப்ப தொன்றே பிறவுயிரை
வரமாய்க் கொண்டு திரிபவரை
வாய்மை மறந்து கோட்சொல்லி
வம்பு புரிந்தே அலைவாரை

உதைப்ப தென்றே எளியார்மேல்
ஓடி வழக்கிற் கிழுப்பாரை
உன்பேர் சொல்லி யேமாற்றி
உலகில் வாழும் பெரியாரை

இதைப்போன் றாரைச் சிதையாமல்
எமதில் சிதைப்பா யோமுருகா?
எழிலார் குறுக்குத் துறைவாழும்
இறைவா சிற்றில் சிதையேலே. 80



உருகா யோநீ உளம்விரும்பின்
உவப்பா யெம்பா லுடனமர்ந்தே
உண்டு மகிழ்வாய் சிற்றிலிதை
உலையா தருள்செய் தேகிடுவாய்

முருகா சிறியர் யாம்பெரிதும்
முயன்று செய்த பலபண்டம்
முன்னா லுனக்கே படைக்கின்றோம்
முயலா தேயெம் மில்சிதைக்க

ஒருகா லுண்ணின் மறுகாலும்
உண்டா வுண்டா எனக்கேட்பாய்
உனக்கல் லாது யார்க்கிவைதாம்
உவந்தே யளிப்போம் ஏற்றிடுவாய்

திருகா வளஞ்சேர் ஆவடுதண்
துறையார் குறுக்குத் துறைவாழும்
செல்வா சிற்றில் சிதையேலே
சேயேம் சிற்றில் சிதையேலே. 81

மாங்காய் விரும்பி வருஞ்சிறுவர்
மரமேல் கற்கள் பலவீச
மரமார் மந்திக் குழுகலைந்து
மண்டி யடித்தே விழுந்தோடி

ஆங்கார் தெங்கின் முடிதாவ
அலறிக் காய்ந்த நெற்றொன்றே
அடியி லொருமாங் கிளையினிலே
அடர்தேன் கூட்டை நோக்கிவிழப்

பாங்கார் கிளையொன் றதுகண்டு
பதறிக் குறுக்கே விரைந்தேற்றுப்
படர்தேன் கூடு சிதையாமல்
பரிவாய்க் காக்கும் வளநாடா

நீங்கா வளஞ்சேர் தண்பொருநை
நீர்சூழ் குறுக்குத் துறைவாழும்
நேயா சிற்றில் சிதையேலே
நிமலா சிற்றில் சிதையேலே. 82

முந்தித் தவமே புரிந்துன்னை
முயன்று பெற்றுக் காப்பாற்றி
முகமே தூக்கிச் செங்கீரை
மொழிந்தே ஆடத் தாலாட்டிக்

குந்திக் கரத்தால் சப்பாணி
கொட்டச் செய்து முத்திமிட்டுக்
கூவி யழைத்து வருகவெனக்
கொஞ்சி குலவி யெடுத்தணைத்தே

அந்திப் பொழுதைக் கடந்துவரும்
அம்பு லிகாட்டிப் பின்னருனை
ஆடி நீவா எனமறுகில்
அனுப்புந் தாயர் தமைவிடுத்து

நொந்திங் குன்னைக் குறைகூறல்
நேர்மை யாமோ உணர்ந்திதனை
நீர்சூழ் குறுக்குத் துறைவாழும்
நிமலா சிற்றில் சிதையேலே. 83

நின்னைக் குறையே கூறுவதால்
நேரும் பயனிங் குண்டாமோ
நெருப்பின் வழியே தோன்றியவுன்
நெஞ்சம் சிறிதுங் குளிர்ந்திடுமோ

அன்னை வயிற்றில் பிறந்திருந்தால்
அறிவாய் நீயெம் அருமைதனை
அப்பன் நுதற்கண் வந்ததனால்
அரிவை யரின்சீர் அறிந்திலைநீ

பின்னை யேனும் பெண்களைநீ
பெண்டாய்க் கொள்ளின் புரிந்திருப்பாய்
பிடியைப் பிணையை மணந்துளநீ
பெண்ணி னருமை யாதுகண்டாய்

தென்னை யோங்கித் தலைகனக்குந்
திருவார் குறுக்குத் துறைவாழும்
செல்வா சிற்றில் சிதையேலே
சிறியேம் சிற்றில் சிதையேலே. 84



ஏதோ சினந்து சிறுமதியால்
இகழ்ந்தோ மிதனை யெண்ணாதே
இணையா ரடிகள் நோகாவோ
இங்ஙன் தரையை நீயுழுதால்

போதோ டன்பு பொழிந்தென்றும்
போற்றத் தகுமுன் பொற்பாதம்
புழுதி யளை ந்தே வருந்துவதைப்
பெற்றோர் கண்டால் சகிப்பாரோ

தீதோ டிடவே சென்றடியார்
சிந்தை மயக்கம் சிதைத்திடுநின்
திருவா ரடிகள் எம்குடிலைச்
சிதைத்தல் நீதி யன்றுகண்டாய்

மூதோர் புகழுந் தண்பொருநை
முழங்கும் குறுக்குத் துறைவாழும்
முருகா சிற்றில் சிதையேலே
முதல்வா சிற்றில் சிதையேலே. 85

## 9. சிறுபறைப் பருவம்

**(பதினான்கு சீராசிரிய விருத்தம்)**

புலியைச் சீறி வென்று மாண்ட
பெற்றங் கொண்டு மயிரினைப்
போக்கி டாமற் றோலெ டுத்துப்
பொற்பு றக்கோ டேற்றியே

ஒலியெ டுப்பு டன்மு ழக்கும்
ஒப்பி லாத பறையினை
உறுதி யாயி டக்க ரத்து
(உ)வந்து நன்கு பற்றியே

வலிவு டன்றொ ழிற்ப டைத்து
மணியி ழைத்த குணிலினை
வலக்க ரம்பி டித்து நன்மு
ழக்கு டன்மு ழக்குக

சிலிமு கங்கள் சூழ்கு றுக்குத்
துறைய னேமு ழக்குக

சேவ லம்ப தாகைத் தேவ
சிறுப றைமு ழக்குக. 86

சோதி நாத னேநீ முன்னர்
சொன்ன வேத ஆழியுள்
சொல்லொ ணாத ஆழ மோடு
தொலைத லில்லாப் புயலிருள்

மோதி மோதி நெஞ்சந் தன்னை
மருள வைப்ப தாலதை
விளங்கு மாறு மீண்டுங் கூறு
கென்று நாடி யேசன

காதி நால்வர் வேண்டி நிற்க
ஆல நீழல் மேவியே
அரனு ரைத்த புதிய போதம்
அவனி யில்மு ழங்கவே

சேதி யாவ ளங்கு றுக்குத்
துறைய னேமு ழக்குக
சேவ லம்ப தாகைத் தேவ
சிறுப றைமு ழக்குக. 87

தெய்வ மென்ப தென்ன எங்குந்
தேடிக் காண வொண்ணுமோ
சொல்லு மென்று சொல்லு வார்தம்
சிந்தை நன்கு ணர்த்திட

நெய்வ ருங்காண் பாலி னின்று
தீவ ருங்காண் விறகிலே
நேரு மஃதை தெய்வ முள்ள
தென்று சொல்லும் பான்மையே

மெய்வ ருந்த உறவே னுங்கோல்
நட்டு ணர்வுத் தாம்பினால்
முறுக வாங்கிக் கடையும் போது
வந்து தோன்று மென்றிவண்

செய்வ ளைத்தி டுங்கு றுக்குத்
துறைய னேமு ழக்குக



சேவ லம்ப தாகைத் தேவ
சிறுப றைமு ழக்குக. 88

சங்க ரன்பா லன்பு கொண்ட
சைவ ரோடு பாம்பணை
தங்கு சங்க ணிந்த வன்றன்
தாள்வ ணங்கு வைணவர்

துங்க புத்த னைத்தொ டர்ந்த
தொண்ட ரோடும் அருகனைத்
தொழுது நிற்கு மமண ரோடும்
தூய யேசு நாதனின்

பங்க யம்ப ணிந்து ளோரும்
பகரு மல்லா பக்தரும்
பால னுன்மு ழக்கு தத்தம்
மதமு ழக்க மென்றிடச்

சிங்க நாத னேகு றுக்குத்
துறைய னேமு ழக்குக
சேவ லம்ப தாகைச் செல்வ
சிறுப றைமு ழக்குக. 89

ஞால மீது வெயிலெ றிக்கும்
ஞாயி றோடு திங்களும்
நன்நெ ருப்பி னன்செவ் வாய்பு
தன்வி யாழன் வெள்ளியும்

நீல னாய சனிய னோடு
நிருத ராகு கேதுவும்
நின்வ ணங்கு தொண்ட ரைக்கண்
டேப யந்து நீளவே

ஓல மிட்ட கன்றொ துங்க
உத்த மாமு ழக்குக
உன்பு கழ்செ கம்ப டர்ந்திங்
கோங்க வேமு ழக்குக

சீல மார்ந்தி டுங்கு றுக்குத்
துறைய னேமு ழக்குக

சேவ லம்ப தாகைச் செல்வ
சிறுப றைமு ழக்குக. 90

(பன்னிரு சீராசிரிய விருத்தம்)

வாதம் முழங்க மன்றுகளில்
வண்டு முழங்க மலர்களில்
வாய்மை முழங்க நெஞ்சமதில்
வாய்கள் முழக்க நின்புகழை

கீதம் முழங்க மனைகடொறும்
குயில்கள் முழங்கச் சோலைகளில்
குறளும் முழங்கப் பள்ளிகளில்
கொண்மூ முழங்க வான்மிசையே

நீதம் முழங்க மன்பதையுள்
நீர்மை முழங்க மங்கையருள்
நீரும் முழங்க மதகுகளில்
நிலத்து முழங்க உழவோதை

சீதம் முழங்குந் தண்பொருநைச்
செழிப்பார் குறுக்குத் துறைவாழும்
சேயே முழக்கு சிறுபறையே
செல்வா முழக்கு சிறுபறையே. 91

செக்கர் வானச் செவ்வுடலும்
தேனார் கடம்ப மலர்மார்பும்
சிரங்க ளாறும் மணிமுடியும்
செவியீ ராறுங் குண்டலமும்

அக்கம் ஈறா றுங்கரங்கள்
ஆறி ரண்டில் அஞ்சலென
அபய மளிக்குங் கரமொன்றும்
அல்லல் தீர்க்கும் வடிவேலும்

இக்கார் மொழிய ரிருமாதர்
இடமும் வலமும் நின்றொளிர
இணையா ரடிக ளிரண்டுடனே
ஏறு மயிலுஞ் சேவலுமாய்த்

திக்கெங் குமொளிர் ஆறுமுகச்
செல்வ! குறுக்குத் துறைவாழும்



சேயே முழக்கு சிறுபறையே
தேவா முழக்கு சிறுபறையே. 92

முக்கா லுக்கே யேகிடுமுன்
முன்னே நரையுந் தோன்றிடுமுன்
முதுமைப் பட்டே வருந்திடுமுன்
மூவர் தமைக்கண் டஞ்சிடுமுன்

விக்கி யிருமித் துடித்திடுமுன்
வேர்த்தே மயங்கிச் சோர்ந்திடுமுன்
விரைந்தே யென்பால் வம்மினென
வியனார் பறையே முழக்கிடுக

அக்கா ரமணி அமலனருள்
ஆறு முகனே குஞ்சரியின்
அணிதோள் சேருந் திருமார்பா
அடித்தே முழக்கு சிறுபறையே

செக்கர் மேனித் திருமதலாய்
செல்வா முழக்கு சிறுபறையே
சீரார் குறுக்குத் துறைவாழும்
தேவ முழக்கு சிறுபறையே. 93

நெருப்புள் வெண்ணெ யெனவுருகி
நிமலன் நீழ லடைவதனை
நினையா துலக மாயையினுள்
நின்று மயங்கி யுழலாதீர்

விருப்பும் வெறுப்பும் விடுத்துதறி
விரைந்தே வம்மின் வம்மினென
விளையாட் டாய்நீ பறைதனையே
வேக மாக முழக்குகவே

பொருப்பின் அரையன் திருமகளின்
பிள்ளாய் வள்ளிக் குறமாதின்
புலனார் விருந்தே அருமருந்தே
புனிதா முழக்கு சிறுபறையே

செருப்புக் கசுரர் குலமழித்த
செல்வா முழக்கு சிறுபறையே

சீரார் குறுக்குத் துறைவாழுந்
தேவே முழக்கு சிறுபறையே. 94

தாயாம் மந்தி தனைப்பற்றித்
தவிப்பற் றிருக்குங் குட்டியெனத்
தாமே யெம்மை வந்தடைவீர்
தவறி னாலுந் தவிப்பொழியச்

சேயாம் குட்டி தனைநாடிச்
சேர வந்தே யெடுத்தேகும்
சீரார் பூனை யெனவந்து
சிந்தை மகிழ அரவணைப்போம்

மாயா வுலகில் வருந்தாதீர்
வந்தோம் வந்தோம் எனவுன்றன்
மழலை முழக்கி யதற்கேற்ப
மன்னே முழக்கு சிறுபறையே

தீயாம் சோதி வடிவோனே
செல்வா திருவா வடுதுறையர்
சீர்செய் குறுக்குத் துறைவாழுந்
தேவே முழக்கு சிறுபறையே. 95

## 10. சிறுதேர்ப் பருவம்

(பதினான்கு சீராசிரிய விருத்தம்)

தாரணியைச் சூழ்ந்தலை சாகரங்கள் தம்மையே
சக்கரங்க ளெனவ மைத்துத்
தடமாரும் புவிதனைத் தங்குமிட மாமடித்
தட்டெனவே கொண்டு பனியே

சேரணியி மயமெனுஞ் சிலம்புமுத லாயபல்
திகிரிகளைக் கால்க ளாக்கிச்
செப்பமுடன் மேலேழு லோகங்கள் தம்மைமேல்த்
தட்டுகளென் றேய மைத்துத்

தேரணிசெய் கொடுங்கைக ளாகஎண் டிசைகளைச்
சேண்விசும்பை மூடு துணியாய்ச்
சுவர்க்கமது சிகரமாய்த் தொன்மறைகள் புரவியாய்த்
திசைமுகனும் வலவ னாகச்



சீரணியுந் தேரெனச் செய்துவிளை யாடிடுஞ்
செல்வதே ருருட்டி யருளே
சோலைசூழ் திருவுரு மாமலையின் வேலவ
சிறுதே ருருட்டி யருளே. 96

புவியார்ந்த பற்பல புண்ணியத லங்களிற்
போட்டுமொரு பயனு மில்லாப்
புன்னுடலி னஸ்தியைப் புகர்மாற்றிக் கருநிற
மாக்கியக ருப்பன் றுறையும்

குவியார்ந்து வருமதைக் குருத்துவிடச் செய்துசீர்
கொண்டதிருக் குறுக்குத் துறையும்
குருத்துக்கள் தமையெலாங் கோலமல ராக்கியே
கோப்புடன்வி ரித்துச் சிந்தும்

சவியார்ந்த சிந்துபூந் துறையுஞ்சேர்ந் திலங்கிடுந்
தண்பொருநைக் கரையெ லாம்நீ
சாருநவ வீரர்கள் தம்மோடு கூடியே
தனித்தே ருருட்டி யருளே

செவியாறி ரண்டனே சேவலணி கந்தனே
சிறுதே ருருட்டி யருளே
தெய்வீகத் திருவுரு மாமலையின் வேலவ
சிறுதே ருருட்டி யருளே. 97

நாத்திரியு மாறெலாம் நல்லவர்போல் பலவாறு
நவின்றுபா மரரை யேய்த்து
நாசவினை செய்துவாழ் மோசமிகு மாக்களின்
நயவஞ்சந் தானு ருளவும்

ஆத்தியணி செல்வனின் அனல்விழியில் வந்தவா
அழுக்காறு கொண்டு பிறர்மேல்
அல்லலிழைத் தேயவ ரழியுமா றாக்கிவிடும்
அற்பரா ணவமு ருளவும்

ஈத்தினிது வாழ்சுக மெண்ணாமற் பொருளையே
என்றென்று மீட்டி நொந்துன்
இணையடிகள் சிறிதுமே யெண்ணாம லலைந்திடும்
இழிஞர்பே தமையு ருளவும்

**சீர்த்தியணி** மைந்தனே சேவலுறு கந்தனே
சிறுதே ருருட்டி யருளே
தெய்வீகத் திருவுரு மாமலையின் வேலவா
சிறுதே ருருட்டி யருளே. 98

அலைமோதி வெள்ளமே அளவற்றுச் சாடினும்
அணுவேனுஞ் சேத மின்றி
அசையாது நிற்குமழி யாப்பிள்ளை யார்கோவி
லணித்தாய அகன்ம ருங்கும்

தலைமோதிக் கல்லினாற் சாவுண்டு பேயாகித்
தனைக்கொன்ற வணிகன் றனையே
தந்திரமு டன்கொன்று தன்பழி தீர்நீலி
தங்கியுள அகன்ம ருங்கும்

இலைமீதி லேதுயில் நிலைகொண்ட மாதவன்
இடையரக முள்நு ழைந்தே
இட்டம்போல் பால்வெண்ணெ யெடுத்துண்ட கிருட்டிணன்
எழிற்கோவி லகன்ம ருங்கும்

சிலைமோதிச் சீதையைச் சேர்ராமன் மருகனே
சிறுதே ருருட்டி யருளே
தெய்வீகத் திருவுரு மாமலையின் வேலவா
சிறுதே ருருட்டி யருளே. 99

மலைபோன்று குவிந்துள மணல்மேடு தன்னிலும்
மாஞ்சோலை மருங்கி னூடும்
மாண்பாருங் காவடி மண்டபமும் யாதவர்
மண்டபமும் வணிகர் மடமும்

கலைபோன்று வெள்ளாடு குதித்தலையும் சோலைசூழ்
கவின்நரசை யன்ப தியிலும்
கடலார்ந்த வெள்ளமுங் காணில்நீ மேவிடக்
காண்மேலக் கோவின் மருங்கும்

வலைபோன்று நிழல்தரும் வான்தடவு மருதமார்
வளமிக்க வீதி களிலும்
வானவரும் போற்றிடு வடிவேல வாகுகா
வாகுதே ருருட்டி யருளே



சிலைபோன்று நிற்பினும் ஜீவனுள தெய்வமே
சிறுதே ருருட்டி யருளே
தெய்வீகத் திருவுரு மாமலையின் செல்வனே
சிறுதே ருருட்டி யருளே. 100

கோழி தனைப்புகழ் வாயா லதன்சிறு
குஞ்சைப் புகழ்கில னெனவோதுங்
கொய்யாப் புகழுடர் பொய்யா மொழிதனைக்
குறுகி வனமுறு மெயினன்போல்

பூமி யடர்சுரம் போகுந் துறையொரு
பாடல் தனைப்பெறு மூட்டையனே
பேசுந் துடியுள ஈசா வுனதடி
பேணா துலகினி லுழல்வேனோ

ஆழி யடர்புவி சூழ வலம்வரும்
ஆறு முகனெனும் பேரிறைவா
அண்ணல் நினையர னென்றே அலையெனை
யாளுங் கடனுனக் கிலையோசொல்

ஊழி தனிலுமுன் போலும் நிலைபெறும்
உயர்செய் திருவுரு மாமலையில்
உவப்பாய் நிலைபெறு தவப்பா லககுக
உருட்டி யருளுக சிறுதேரே. 101

அழுதால் வருபய னுளதோ முனருளம்
அறியச் செய்துள வினையெண்ணி
அகமே கசிந்திடத் தினமே வருந்தினும்
ஆகும் பயனெது முண்டாமோ

தொழுதாற் பயனுள தெனவே துணிவுடன்
துகள்தீர் சேவடி பணிவேனே
துரையே யான்படு துயரே நீக்கியுன்
சுகமா ரடிநிழல் தருவாயே

பழுதா யுனைப்பழிப் பவனே யாயினும்
பால னெனவினு மறியாயோ
பரமே யுறைகுரு பரனே முருகனே
பனியார் திருவுள வடிவேலா

உழுதார் மனமிகக் குளிரப் பயனளி
உயர்செய் திருவுரு மாமலையில்
உவப்பாய் நிலைபெறு தவப்பா லகருக
உருட்டி யருளுக சிறுதேரே. 102

கருவாய் மறுபடி வரவே விரும்பிலன்
கலங்கும் படியெனை விடுப்பாயோ
கனியே நினையல தினியே கதியிலை
கசடன் புரிபிழை எடுப்பாயோ

பெருவாய் நரகினில் புகுவே னெனினுமுன்
புனிதத் திருவடி மறவேனே
பெரிதா யணைப்பினும் வெகுவா யடிப்பினும்
பிரியே னுனைவிடுத் தகலேனே

சிறுவா யுடன்பெரு விரிவார் சிறகுறு
சிகிவா கனமிசை வருவோனே
செகமே பதறிட மிகவே குரலிடுஞ்
சிவலைச் சேவலங் கொடியோனே

திருவா வடுதுறை அறவோர் பணியினில்
திகழுந் திருவுரு மாமலையில்
திடமாய் நிலைபெறு வடிவே லவகுக
திறமா யுருட்டுக சிறுதேரே. 103

களமார்ந் துனையெதிர் வளமார் பதுமனைக்
கடிதே பிளந்திடும் வடிவேலா
கரியோ டொருகுறச் சிறுமி மருவிய
கமழ்சேர் தெரியலு முறுமார்பா

குளமார்ந் திடுவிழி வழியே சிவன்தரக்
குதித்தே வருசுடர்ப் பொறியோனே
குகனே உனையடுப் பவருந் துயருறல்
குணமோ உனக்கிது சரிதானோ

வளமார்ந் திடுமலை முகடு களிலுறை
வடிவார்ந் திடுமுயர் முருகோனே
வறியேன் புகலெது மறியே னிகலது
புரியா தருளரி மருகோனே



உளமார்ந் துனைப்புகழ் வளவா வடுதுறைக்
குரிய திருவுரு மாமலையில்
உவப்பாய் நிலைபெறு தவப்பா லகருக
உருட்டி யருளுக சிறுதேரே. 104

மழையார்ந் துலகினில் வளமார்ந் திடத்தமிழ்
மறையோங் கிடப்புக் ழோங்கிடவே
மனித ரனைவருஞ் சமமே யெனுமொரு
மகிமை யுணர்ந்திகல் மாறிடவே

நுழையார்ந் திடுகலை பலவு முயர்ந்திட
நுவல்கல் வியும்புவி நிறைந்திடவே
நிலமீ தரசுகள் பகையே மறந்துநல்
லுறவோ டுயர்பணி புரிந்திடவே

விழையார்ந் துளமொடு நலிவார்க் கிரங்கிடும்
விநயர் நலமுடன் வாழ்ந்திடவே
விளைவே நிறைந்திட வறுமை மறைந்திட
விமலர் புகலுரை பயன்பெறவே

உழையார்ந் திடுகுற இளமா தணைபவ
உயர்செய் திருவுரு மாமலையில்
உவப்பாய் நிலைபெறு தவப்பா லகருக
உருட்டி யருளுக சிறுதேரே. 105

**வேறு**

துகளறுசீர் தண்குறுக்குத் துறைவாழுங்
குமரனெனுஞ் சுடர்வே லன்மேல்
இகழறுமெய்க் காதலினா லிப்பிள்ளைத்
தமிழ்தனையே இயம்பி னான்நற்
புகழுறுசீர் திருநெல்லைப் பொற்பதிவாழ்
போதமிலாப் புலவ னிந்நூல்
திகழுறுமென் றெண்ணமுடன் சிவதாசன்
ஆறுமுகன் தெரிந்த வாறே 106

**குறுக்குத்துறை குமரன் பிள்ளைத்தமிழ் முற்றிற்று**

உ

# சென்னை மாநகர்க் கந்தசுவாமி பிள்ளைத்தமிழ்

## தண்டபாணிசுவாமிகள்

### நூற்காப்பு

நேரிசை வெண்பாக்கள்

**கணபதி துதி**

பைந்தமிழ்ச்சீர் மன்னுசென்னைப் பட்டினத்தூர் வாழவந்த
கந்த சுவாமி களிகூரும்—சுந்தரஞ்சேர்
பிள்ளைக் கவிதருவான் பேழைவயிற் றானைமுகக்
கொள்ளைக் கவின்மருவுங் கோன்.

**கலைமகள் துதி**

வல்லாண்மை துன்றுசென்னை மாநகரில் வாழ்குகன்மேல்
எல்லாரு மெச்ச இயம்புவாய்!—பொல்லா
விடம்பருகும் ஈசனொடு மேனாள் உதித்தாய்!
கடம்பனைய பிள்ளைக் கவி.

**நூல்**

## 1. காப்புப் பருவம்

**திருமால்**

மணிநிலவு மரகதப் பிடிமருவு பாகத்து
வள்ளலார் தவமு திர்ந்து
வன்னிவிழி வழியாறு பொறியென உருக்கொண்டு
வருமுருக வேளை, மகுடத்(து)
அணிநிலவு தலையாறும் அங்கதம் இலங்குபுயம்
ஆறிரண் டும்பொ ருந்தும்
ஐயனைச், சென்னைமா நகரிலுறை கந்தனை
அளித்தருள வேண்டும் என்றே:



பணிநிலவு பாற்கடற் பள்ளிகொண் டானை, எழு
பாரும்உண்(டு) உமிழு(ம்) மாலைப்
பசுநிரை வருந்தாத வண்ணம்அந் நாள்உயர்
பருப்பதக் குடை பரிக்கும்
திணிநிலவு தோளானை, ஆழியொடு சங்கமும்
திகழச் சிறந்து ளானைச்
செல்வியுறு மார்பனைப் பலவிதத் தினுமிகச்
சிந்திக்கும் எமதுள்ளமே. 1

**பரமசிவன்**

தன்னனா தானதான—தந்தனத் தாத்தனா

அன்னமாம் என,வேதன் விண்ணில்ஏ கிட,ஏனம்
அன்னமேல் கொடுமாயன் மண்புகப் பார்த்துளார்
அண்ணமா முடிமீது வெண்மைசேர் மதிசூடும்
அண்ணல்,ஆ டகமாகும் அம்பலக் கூத்தனார்
அன்னையாய் உலகேழும் முன்னம்ஈ ன்றியபாவை
அங்ஙன்ஓர் புறம்வாழ வுங்கொள்பொற் பேற்றதே(வு)
அம்மைவா தனைதீரும் உண்மைமா தவம்ஈயும்
அம்மநீ றணிவார்கள் சிந்தையிற் றேக்குவார்

கன்னல்வார் சிலைமாரன் என்னுமோர் படுபாவி
கன்னிமார் பலர்சூழ வந்தெதிர்த்(து) ஆர்த்தநாள்
கண்ணின்ஆ ரழல்வீசு தன்மையார், மழுமான்ஓர்
கம்மினோ(டு) அவிர்சூலம் ஒன்றுகைத் தீர்த்தனார்
கண்மைதீர் தமிழ்நால்வர் தம்மைநா டியசீலர்
கன்மம்ஆ தியவா(ம்)ம லங்கெடத் தாக்குவார்,
கைம்மதா சல(ம்)மாய உன்னினார், பலவாய
கண்ணியார், அவர்தாளை அஞ்சலித் தேத்துவாம்

வன்னம்ஆ யிரகோடி துன்னுசீர் பெறுதோகை
மஞ்ஞைவா கனம்ஏறும் மைந்தனைப் பூட்கையால்
வண்மைதோய் தரநீடு பெண்ணின்ஆ ருயிர்போலும்
மன்னை,மால் வரைசார்ப சுந்தினைக் காட்டில்வாழ்
வன்மைவே டுவர் பேதை கிண்ணமா முலைமோக(ம்)
மன்னுசா மியை,ஞான பண்டிதப் பேர்ச்சொல்வார்
மம்மர்நோய் மருவாது மெய்ம்மைவீ டதுசேரும்
வண்ணமோர் குருவாகும் நண்பனைக், கூர்த்தவேல்

**சின்ன**தே யெனநாளும் எண்ணிஏ சிடும்ஈனர்
தென்னன்ஊர் புகமோதும் வன்பனைப் பாக்கொடோர்
தென்னன்ஆ ருயிர்சோரும் வெம்மைபோய் மிகுகூனல்
செம்மையாய் நிமிர்சீர்செய்(து) அன்பில்பொய்த்
தீர்க்கமே
செம்முசா ரணராதி எண்ணிலார் கெடுபோர்கொள்
செம்மலாம் முருகோனை, அம்புயப் பூக்கள்நீள்
செந்நெல்ஆர் வயலூடு மென்மை ஓதிமம் ஓவில்
சென்னைமா நகர்மேவு கந்தனைக் காக்கவே. 2

பராசக்தி

**தனன தனதன தனதன தனதன**
**தனன தனதன தனதன தனதன**
**தன்னத் தனத்ததன தன்னத் தனத்ததன தானானா**

அமல பரசிவ பசுபதி யெனும்ஒரு
கணவர், தனதிள முலைமயல் கொடுதினம்
உன்னிட்டம் எப்படிஅவ் வண்ணத்தி ருப்பன்எனும்
மொழியொ டநுதினம் அடிதொழ உளமகிழ்
சிவையை, இமவரை தருமக வெனவரு
சின்னக் குயிற் பெடையென் வண்மைத் தனிக்கொடியை
அகில முழுமையும் உதவிய சிறுவயி(று)
உடைய கவுரியை, மதன்வழி படஒரு
கன்னற் சிலைத்திறமை தன்னைக் கொடுத்தவளை வாடாதே.

அளவில் சுகமுற உதவிடும் இறைவியை,
மரண மொடுபவம் எனும்இருள் இரிதலை
நண்ணிக் கழற்கமலம் உன்னித் தனக்குரிய
பொறியை நுவல்முழு மவுனிக ளதுசூழி
முனையில் நடமிடும் முதல்வியை, முருகவிழ்
வன்னத் தகட்டிதழ்கள் துன்னுற்ற புட்பவகை
அணியும் அழகிய குழலியை, அனம்நிகர்
நடையின் ஒயில்மலி வனிதையை, ஒருகவி
மின்னுற்(று) உவப்(பு) அடிசில் உண்ணச்
சமைத்தவளை, வாளேநேர்

சமர பிரபல பலமரு வியவிழி
யிலகு திரிபுர தகனியை, அடியவர்



கண்முற் றிகழ்ச்சிதரு கன்னிக்கி ளிப்பி(ள்)ளையை
வெளிறு(ம்) மலர்மிசை மதியென நிலவிய
சரசு வதிதிரு மகளெனும் இருவர்கள்
என்னச் சொலிப்பரவு தன்மைக்கும் ஒத்தபிடி
தனையென் இகலவர் அடியொடு கெடவரும்
முனிவின் மிகைகமழ் திருவுளம் இசைவுறு
பொன்னைப், பணத்தில்மகிழ் புன்மைக் குணத்தினரை
நாடாதாள்.

சகுண முதன்மைகொள் பகவதி பயிரவி
விமலை அதிநய விகசித மொழிபல
பன்னித் தொடுத்துவரு பெண், ஒப்பில் கற்பினவள்
அறியில் அறிவரு செயலினள் எனவுணர்
பெரியர் தமையிகழ் கொடியவர் குடரணி
மின்னக் குதிப்பவளை, நன்மைக்கு வித்தனைய
தரும மயிலினை இமகரன் எனஒரு
பணியை விடுகரு ணையின்முதி யவள்தனை,
உண்மைக் கவிப்புலவர் உண்ணிற் கும்உத்தமியை,
நான்நேர்வேன்;

மும்மலம் உதவிய திரிகுண வழிசெலும்
மனதை யிருபத மலர்களில் ஒருவித(ம்)
மன்னத் திருத்தியருள் மெய்ம்மைக் குருக்கள்,அரன்
மதலை யெனலையும் அவர்பணி கொளும்உயர்
குரவன் எனலையும் நிசமெனும் நிலையினர்
விண்ணைக் குறிக்குமவர் இன்னற்ற விர்த்தகுகர்,
முகுள சததள பரிமள மதுகர
சலச மலர்திகழ் கரமுறு குறமகள்
எண்ணத் திருப்பதையும் முன்னிட் டியற்றும்அதி
மாலோர்வார்

மொளுமொ ளெனும்ஒலி யொடுமத அருவிகள்
வழிய விடும்எழில் குலவுறும் அவையவ
வெண்மைக் களிற்றின்மகள் பொன்மைக் குருக்கமிகு
சிறுவர், சரவண பவர்கதிர், அயில்வலி
யதுகொ டவுணர்கள் குலமற முனிபவர்,
மொய்ம்மொய்த் திசைக்கஅலர் செம்மைக் கடப்பமலர்

முருகு சொரிதரு குரவமென் மலர்செழும்
அலரி புனலிம லிகைதுள(வு) அறுகிவை
சென்னிக்கும் இட்டுரைசெய் எண்ணிக்கை யற்றமலை
மேல்வாழ்வார்

கமல மிசைவளர் திசைமுக னதுதலை
உடைத லிலதுபல் வயின்உயர் தரவுள
கைம்மற் செலுத்துமவர், முன்னைத் தொழிற்செய்தவர்,
திருட னெனஒரு தரம்அரு ணையில்ஒரு
புலவ னுவல்கையில் அனைவரும் விழைவொடும்
என்னைச் சொலச்சொலிய கண்மைத் தலைக்கடவுள்
கடலினொடு பொரு நையுமுத லியபல
புனலில் அனலில்முன் முழுகிய பனுவல்கள்
இம்மைப் பிறப்பினிலென் முன்னிற் பதைக்கருது
சீர்தோய்வார்,

கமட முதுகினில் ஒருமலை யினை அலை
தவள உததியின் நடுநடும் அரிபுகழ்
திண்ணப் புயத்தொருவர் தொன்மைக் குடைச்சரணர்
தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன
தன்னத் தனத்ததன தன்னத் தனத்தஎனல்
கழறி அலகைகள் குதிகொள அமர்பொரும்
வயவர், தமிழ்நய மொடுபொருள் வளமுறு
சென்னைப் பதிக்குமரர், தம்மைப் புரக்கவென
வேதானே. 3

## விநாயகர்

**தன்னதன தானந்த தானனத் தாத்தனா**

மும்மையுல கோர்என்றும் மூலவித் தாச்சொல்ஓர்
முன்னவனை ஈசன்றன் மேனியிற் போர்த்ததோல்
அம்மைநினை வூடொன்ற லால்எழிற் பூட்கையே
அன்னமுக மாவந்து ளானைமிக் கேத்துவாம்,

வெம்மைமலி சூரென்ற மாஅறத் தாக்கும்வேல்
மின்னும்அகல் மார்பங்கொள் வீரனைப் போற்றுவார்
செம்மையுறல் காணுங்கு கேசனைக் கீர்த்திதோய்
சென்னைநகர் வாழ்கந்த சாமியைக் காக்கவே. 4



## திருமகள்

**தந்ததன தந்ததன தந்ததன தந்ததன**
**தன்னனா தனனதன தய்யனத் தாத்தனா**

பங்கயம லர்ந்தனைய கண்குலவு கொண்டல்புணர்
பன்னியா கியஇளைய தையலைத் தேக்குபால்
பம்புகட லம்புலியு டன்றரவ ரும்பெருமை
பன்னுவார் பெறுகருணை வல்லியைப் போக்கொணா

மங்களம னந்தமுறு செந்திரும டந்தையினை,
வண்மைதோய் முனியரசு சொல்லும்நற் பாக்களாம்
வந்தனைபு னைந்தவளை இத்திரர்தொ ழுஞ்சரண
மன்னுவாள்தனை, இணையில் செல்வியைப் போற்றுவாம்

வெங்கண்அர(வு) அஞ்சநட னம்பயில் சிகண்டிமிசை
மின்னும்வே லுடனிலவு செய்யனைச், சேட்டையே
மிஞ்சமணர் துஞ்சமுதிர் செந்தமிழ்பொ ழிந்தவனை
வெந்நிடா தமர்புரியும் வல்லமைத் தோட்கள்சேர்

சிங்கம்நிகர் ஒன்பதின்மர் தந்துணையை, உம்பர்புகழ்
சென்னியா றுடையமுதல் வள்ளலைக் கோட்டிலோர்
செண்டுகொட றைந்துமகிழ் துங்கனை,வ ளம்பெருகு
சென்னைமா நகரில்முரு கையனைக் காக்கவே. 5

## பிரமன்

**தன்ன தனதன தனதத்த தத்தனா**

மண்ணும் உயிர்களின் உடல்முற் றும் இட்டதாம்
வண்மை திகழ்கர மலரெட்டும், வித்தைமா(து)
அண்ண மிளிர்சது முகநட்பும் உற்றுவால்
அன்ன மிசைவரும் அயனைப்ப ழிச்சுவாம்
விண்ணுள் இமையவர் உறவைத்த சத்திவேல்
வெண்மை நிறமலி தருகுக்கு டப்புள்வாழ்
திண்ண பொழிபவர் பலர்மெச்சு பொற்பினோர்
சென்னை நகருறை குகனைப் புரக்கவே. 6

### கலைமகள்

**தந்ததன தானதன தத்தத் தனந்ததன**
**தன்னனா தனதான தத்தாத்த தத்தனா**

என்றனது நாவினும்இ ருக்கைக் கிசைந்தவளை
எண்ணிலா மறைஓதி வைத்தாற்றல் பெற்றதால்
எண்டிசையின் நாவலரும் மெச்சச் சிறந்தவளை
இன்னநூல் பலபாடும் நட்போர்க்கும் வித்தெனா

நின்றவளை, வாலியநி றப்பொற் பமைந்தவளை
நின்மலா கரஞான(ம்) முற்காட்டு பெட்பதே
நெஞ்சில்வளர் பேதையைஇ டுக்கத்தில் வந்துதவும்
நின்னயா தரவாணி யைப்போற்றி நத்துவாம்;

வன்றகுவர் வேரறஅ றுத்துக் கடம்பணியும்
வண்மைசேர் புயவீர னைக்கார்த்தி கைப்பெணார்
மஞ்சுதிகழ் மால்வரையெ னத்தக்க கொங்கைநுகர்
வண்ணவா யுறுசேயை, விற்கோட்டு மற்செய்வார்

சென்றழும்வி னோதியர், இலக்கத்தின் ஒன்பதின்மர்
தென்னுலோ கனும்நா ணுறத்தாக்கும் வெற்றிதோய்
திண்பெறமுன் ஈபவனை, வித்தைத்தி றம்பெருகு
சென்னைமா நகர்வேல னைக்காத்த ளிக்கவே. 7

### நவக்கோள்கள்

சூரியன் திங்கள்அங் காரகன் புந்திகுரு
சுக்கிரன் சனிஇராகு
தொந்தமுறு கேதுகுளி கன்சிலை இராசிநாள்
தூமகே துபரி வேடம்

வீரியக் களரிகா வலன்முதற் பெரியோர்
விளம்புபல கோட்களுக்கும்
விரதாதி யுற்றுந் துதித்தும் தினந்தோறும்
மேன்மேலும் அஞ்சலிப்பாம்.

ஆரியம் அருந்தமிழ் முதற்பரவு கலைமுழுதும்
அறிபுல வனைக்,கிரி யெலாம்
ஆடரங்கா(ம்)முருக வேள்தனைத் தேவர்புகழ்
அயில்வே லனைக்குறத்தி



சீரிய முலைத்துணைக்(கு) உருகும்அதி மோகனைத்
தெய்வானை புணர்கேள்வனைச்
சென்னைமா நகரில்வரு கந்தசா மியைமிகச்
சிந்தித் தளிக்க என்றே. 8

### பலதேவர்

உயிரொன் றுழல வருத்தாமை
ஒருவர் தரும்ஊன் புசியாமை
ஓரம் சிறிதும் உரையாமை
உதவுந் தொழிலிற் சலியாமை

பயிலும் அறநூல் பழியாமை
பாழ்த்த முகத்தோ(டு) அலையாமை
பழகு மனத்தோர் தொழும்அளவில்
பலதே வரையும் பணிந்தெழுவாம்;

மயிலிற் பவனி வருவானை
வடிவே லணிந்த புயத்தானை
மலையா வினும்போய் நடிப்பானை
வணங்கு மவருக் கெளியானைக்

கயிலைக் கிரியார் தருமகவைக்
கழனி வளஞ்சேர் சென்னைநகர்க்
கந்தக் கடவுள் தனைநாளும்
காப்ப துமக்கே கடனென்றே. 9

### ஒருமை

**தனனதன தனனதன தனனதன தனனதன**
**தன்னதன தனதந்த தனனதன தத்தனா**

அருளுததி யிடையுலக முழுதும்உத வியபொருளை
அன்னையென அவைதுன்றும் உயிர்வகை தமக்கெலாம்
அமுதுதவி விழிதுயில விடுமுதலை, வடவனலை
அன்னசின மொடுகொன்று மகிழ்வதனை, நுட்பமாம்
அறிவையறி வரியதிரை யிடுகொடுமை யுடையதனை
அம்மைவினை தவிர்வென்றி தருகுரவர் பற்பலோர்
அரசதென மிளிர்சுடரை உளசமய நியதிகளில்
அண்ணிஅகல் பெருவஞ்சம் மருவியதை, நம்பினோர்

**உ**ருவமெனில் உருவும்,அரு வெனில்அருவும் நிகழ்வதனை,
உன்னுமன தினும்ஒன்று செயலினதை முத்தர்தாம்
**ஒ**ருநொடியில் எளிதிலுணர் தரவுதவு முடிவை,அமு(து)
உண்ணுமிமையவர் சிந்தை யணுகரி யதைத்தொல்நூல்
**உ**ரையதனில் மருவிமரு விலதைஅமர் செயமுடுகும்
ஒன்னலரை அடுசிங்கம் அனையரைவெ றுத்திடா
**உ**ரிமையொடு நிலவியதை, அணுவிலணுவென நிறையும்
உண்மைவடி வெனநின்ற ஒருமையை, வழுத்துவாம்

வருமமிகு தருவர்குலம் அழியவிடும் அயிலணியும்
மன்னவனை, அரனன்று வழிபடும் விதத்தினால்
மறைபலவும் நுவலும்உயர் பிரணவமென் ஒருபொறியில்
மன்னுபொரு ளினைவிண்ட வரதனைவி டப்பலால்
வலிமருவும் உரகபதி நெளியநட மிடுமயிலின்
வன்னம்அள வறவிஞ்சு கலபமயி லிற்பொனேர்
வனிதையர்கள் இருவரொடு நிகழ்குமர குருபரனை
வண்மையுறு பலகுன்றில் அமர்குகனை, அற்றைநாள்

செருமும்ஒலி யொடுகனலில் வருதகரில் இவரவல
சின்னவனை, உயர்தென்றல் வரையினில்வ சிக்கும்ஓர்
சிறுமுனிவன் மயல்களையும் விழியினனை அருணகிரி
திண்ணமொடு பகர்செஞ்சொல் விழைபவனை மிக்கவேய்
செறியும்வன மதில்எனது கனவில்மிக உறுதிபகர்
தென்னவனை, அனம்வந்து வயல்களின்வ ரப்பிலே
தினம்அடையும் வளமருவி அமரர்உல கெனநிலவு
சென்னைநக ரினில்வந்த முருகனைஅ ளிக்கவே. 10

## 2. செங்கீரைப் பருவம்

### அம்மை முருகனை அருமை பாராட்டல்

திருமகள் விரும்பிஅவள் மருமக ளுடன்பணி
தினம்செயும் பெருமை பெற்ற
சிவ்வயெடுத்(து) உச்சிமோந்(து) என்உயிர்த் துணைவனார்
செந்தழல் விழிப்பி ழம்பில்

வருமதலை யேஎனது மாதவப் பயனே!
வருந்திடேல் என்று கொஞ்சி
வளையணி கரங்கொண்டு நீராட்டி உயிரெலாம்
வாழ்வது குறித்து முன்னாள்



அருமறைக் கிழவன் படைத்தபுவி யைக்கைவிர
லால்உரைத் துத்தி லகமிட்(டு)
அணிமுலை சுரந்தபால் உதவிடக் களிகூரும்
அறுமுகக் குமரேசனே!

செருமலியும் நவவீரர் துணைவந்த முருகனே!
செங்கீரை ஆடியருளே
சென்னைமா நகர்தழைய வருகந்த சாமியே!
செங்கீரை ஆடியருளே. 11

### முருகன் தோற்றமும் இளமை ஏற்றமும்

மாதவரும் வானவரும் மற்றையவ ரும்தினம்
வருந்தித் தொழற்கி ரங்கி
மணிமிடற் றிறைவனார் புரிதவ முதிர்ந்தவர்தம்
வன்னிவிழி யிற்பொறி களாய்

ஏதமற வந்துசர வணவாவி யிற்கமலம்
ஏறித்த வழ்ந்து மடவார்
இருமூவர் முலையமு தருந்தியும் பசிகொண்(டு)
இலங்கும்இம வான்வளர்த்த

காதலி முலைத்துணைக் கலசத்தின் அமுதம்
களித்தருந் தும்ப வளவாய்க்
காங்கேய னே!யடியர் பிழைமுழு தொழிக்கும்
கடைக்கண் மூவாறு கொண்டாய்!

சீதள மலர்க்குரவ மாலையணி தோளனே!
செங்கீரை ஆடியருளே
சென்னைமா நகர்தழைய வருகந்த சாமியே!
செங்கீரை ஆடியருளே 12

### ஆறுமுகங்களின் அமைப்பு இவையெனல்

உலகினிற் றிசைஆறெனச் சத்திஆறென
ஒழிக்கருந் தொழில் ஐந்தினோ(டு)
ஒன்றுபுணர் ஆறென, எழுத்(து)ஆ றெனச் சமயம்
உள்ளஆ றெனஎண் ணிலார்

பலவிதம் பகரஅரு ளானந்த வாரியிற்
பத்திநீ ரிடைம லர்ந்த

பதுமமல ரெனமிளிரும் அறுமுகக் குமரனே!
பன்னிரு புயத்தண்ணலே!

மலரவன் தருமறையும் அரனுதவும் ஆகமமும்
வாய்விட்டு ரைத்தும் உரையா
வண்மையே வடிவாய திருவடிக் குரவனே!
வானுலக மங்கை யர்க்கோர்

திலகமென வளருமொரு தெய்வானை மகிழ்கணவ
செங்கீரை ஆடியருளே
சென்னைமா நகர்தழைய வருகந்த சாமியே!
செங்கீரை ஆடியருளே. 13

அவுணர்களை யழித்தருளல்

அத்திரத் தாருகனை வெற்பொடு தடிந்தாய்!ஓர்
ஆயிர முகச்சிங்கனாம்
அவுணனை அவன்சிறிது(ம்) மதியாத வச்சிரம்
அதைக்கொண் டழித்து கந்தாய்;

எத்திரத் தோர்மனமும் வெருளவளர் சூர்மா
இரண்டுகூ றாகவெட்டி
இமையவர் படுந்துயர் தவிர்த்தாய் வியன்றிகழ்
இளங்கிழை மடந்தை நல்லார்

பொய்த்திரத் திற்குருகும் என்போலி யர்க்கும்மெய்ப்
பொருளளிப்பது குறித்தும்
புவியில்உள மலைதோறும் நடனம் புரிந்தாய்!
பொறித்தோகை மயிலிவர்ந்தாய்!

சித்திரச் செங்கைவடி வேலணியு(ம்) முருகனே!
செங்கீரை ஆடியருளே
சென்னைமா நகர்தழைய வருகந்த சாமியே!
செங்கீரை ஆடியருளே. 14

வேறு மகுடம்

இன்ப மிகுதியால் எவரும் களிப்புறல்

இன்பமலி யுஞ்சசியும் இந்திரனும் மற்றுள்ள
இமையவரும் வந்து நின்றார்.



ஈரிரு முகப்பிரம னும்தவள வாணியும்நின்
இசையெடுத் தேத்துகின்றார்

பொன்பரவு மார்பினிற் பைந்துள வணிந்தமுகில்
போலும்அரி மிகவி ழைந்தான்,
புரமெரிய நகைசெய்த புண்ணியப் புனிதர், தாம்
புரிதவப் பயன்இ தென்ன

என்(பு)அலரும் இதழியுடன் அணியுமொரு நான்குபுயம்
எட்டா கிடக்க ளித்தார்
இமையமகள் அளவற்ற வாஞ்சைகொண் டுருகித்தன்
இருமுலைப் பால்சொரிந்தாள்;

அன்பரெண் ணியபடி விளங்குமுரு கேசனே!
ஆடியருள் செங்கீரையே
அன்னமலி சென்னைநகர் தன்னில்வளர் கந்தனே
ஆடியருள் செங்கீரையே. 15

முருகன் விளையாட்டால் இவை நிகழுமெனல்

வண்டமிழ்ச் செஞ்சொற் கவித்தொடை தொடுக்குமவர்
வறுமைநோய் முற்றும் நீங்கும்
மாநிலத் திற்றிங்கள் ஒன்றுக்கு மும்மாரி
வந்துவந் தினிது பொழியும்

தெண்டனிட் டுன்னைமிக நம்புபவர் தமைநிந்தை
செய்யுமவர் குலம்ந சிக்கும்;
செங்கோல் விளங்கிக் கொடுங்கோல் பிடிக்குமவர்
சீர்அழிந் திடும்; அவுணரால்

தண்டமடை யாதும்பர் களிகூர்வர்; மாதவம்
தழையும்;மல ரோன்வ குத்த
சட்சமய மும்பெருகும்; மற்றையர் விளம்புபொய்ச்
சமயம்எல் லாம்ஒளிக்கும்

அண்டமுக டெங்கும்விரி யுங்கலப மயிலாளி!
ஆடியருள் செங்கீரையே
அன்னமலி சென்னைநகர் தன்னில்வளர் கந்தனே!
ஆடியருள் செங்கீரையே. 16

## வேறு தாழிசை

### முருகன் அவதாரத்தால் நிகழும் மகிழ்ச்சி யாடல்கள்

பணிபவர் சிந்தையில் உண்மைநலந்திகழ் பத்தி மிகுத்தாடப்
பங்கய மாதர்அ ருட்சிவை யோடு பரிந்துவி யந்தாடத்
திணிபெறு தோள்வய வீரர்இ கற்பிணி தீர்கை நினைத்தாட
செங்கண்மு ராரிமு தற்பல தொண்டர் திடுக்கம் ஒழிந்தாட
மணியுமிழ் கட்செவி ஆடிட ஆடு(ம்) மயூரமுடன் சேவல்
வாழியெ னக்கவி பாடுநர் ஆட,வ னப்புறுகிண்கிணியோ(டு)
அணிகலன் ஆட அசைந்தும கிழ்ந்தினி(து) ஆடுக செங்கீரை
ஆசறு சென்னையில் வாசமு றுங்குகன் ஆடுக செங்கீரை. 17

### மேற் படி

சந்ததம் அன்பர்கள் சிந்தையில் உற்றொளிர் சண்முகமதியாட
சத்திமு தற்பல பற்றிய செங்கை தடம்புய முடன்ஆடக்
கொந்தலர் வெட்சிக டம்புகு ராமலர் கூதளமோ(டு) ஆடக்
குஞ்சிமணித்திரு அரையொடு பண்டிகுலுங்கிடும் நடையாட
செந்தமி ழிற்றுதி செய்பவ ருக்கருள் சீறடி யுங்கழலும்
சீர்மலி தண்டையும் நூபுர முந்திகழ் செங்கன கப்பதிசேர்
அந்தர வாணர்கள் சென்னியும் ஆடிட ஆடுக செங்கீரை
ஆசறு சென்னையில் வாசமு றுங்குகன் ஆடுக செங்கீரை.18

## வேறு மகுடம்

### சந்தம்

**தன்னன தந்தன தந்தன தானன தந்தா தந்தான**

மும்மல வெம்பவ மின்றிய மேலவர் முன்கூ றுஞ்சீர்கொள்
முன்னவ னென்றொளி ரும்பல யானைகள் மொய்ம்பார்
கொம்போடு
தம்மத மிஞ்சிமு ழங்கிஉ லாவிய சஞ்சா ரஞ்சோலை,
தண்முகில், பைந்தினை உந்திவில் வேடுவர் தங்(கு)ஊர்,
வன்பாரும்
எம்மத மொன்றிய தொண்டருமேவி இதெந்தே வின்தானம்
என்னவி ளம்பிவ ணங்கநிலாவிடும் இன்பா ருங்கோவில்
செம்மணி கொண்ட குறிஞ்சியின் வானவ செங்கோ செங்கீரை
சென்னையில் வந்தம ருங்கதிர்வேலவ! செங்கோ செங்கீரை19



**தன்னன தந்தன தந்தன தானன தந்தா தந்தான**

சின்னம்ஒ ழிந்தபெ ரும்புகழ் ஈபவ! செங்கோ செங்கீரை
செம்மணி யென்றநி றம்பெறு சேவக செங்கோ செங்கீரை
சின்னவன் என்றிடி னுங்களி கூர்பவ! செங்கோ செங்கீரை
தென்னவ னென்றும்வ ருங்கரு ணாகர செங்கோ செங்கீரை

சின்னலம் என்றனொ டும்பகர் வேலவ செங்கோ செங்கீரை
திண்மை பொருந்திய செந்தகர்மாவல! செங்கோ செங்கீரை
சின்னமு ழங்கவ ருங்குரு தேசிக! செங்கோ செங்கீரை
சென்னையில் வந்தம ருங்கதிர் வேலவ! செங்கோ
செங்கீரை. 20

## 3. தாலப் பருவம்

### முருகப் பெருமானது சிறப்பும், செயல்களும்

நீறு புனைந்த கனகவரை
நெருப்பு மலையொன் றளித்தாற்போல்
நிலவும் குமர குருபரனே!
நெடுவே லணிந்த புயத்தானே!

ஆறு முகத்தெம் பெருமானே!
அடியார்க் கெளிய முருகோனே!
அனந்தம் விளையாட் டுடையானே!
அருண கிரிக்கன் றருள்புரிந்து

கீறும் பவள முகத்தின்ஒரு
கிளியதாக்கி மணியொடுபொன்
கிளர்கே யூரத் தணிந்தோனே
கிரிகள் முழுதும் திரிவோனே

சீறும் அரவ மிசைநடிக்கும்
சிகியாய் தாலோ தாலேலோ
சென்னை நகரிற் பவனிவரும்
சேந்தா தாலோ தாலேலோ. 21

சீரார் பரங்குன் றாதியெனச்
செப்பும்படைவீ(டு) ஆறோடும்
செந்தூர் முதலாத் தமியேன்சொல்
திகழும் ஆறா(று) உவந்தோனே!

ஏரார் மயிலிற் கதிர்வேல்கொண்(டு)
இமையார் பரவ முனிவர்தொழ
இயம்பற் கரிய சமராடி
இகல்வாள் அவுணக் களைகளைவாய்!

காரார் மேனித் திருமாலின்
கண்ணின் மணியா மென உதிக்கும்
கன்னி மார்கள் இருவர்முலைக்
களபம் கமழும் கவின்மார்பா!

ஆரார் சடிலத்(து) அரனுதவும்
அமுதே தாலோ தாலேலோ
அணியார் சென்னைப் பதிபுரக்கும்
அரசே தாலோ தாலேலோ. 22

பாக முணராப் புன்கவிஞர்
பனுவற்றொகைக்கும் அவர் விரும்பும்
பரிசீந் தருள்வேன் எனஒருக்காற்
பகர்ந்த பவளக் கனிவாயாய்!

சோக முழுதும் அறக்களைந்து
சுகவாழ் வுதவும் பெருங்கருணை
துலங்கும் விழிகள் ஈரொன்பான்
தோய்ந்த முகம்ஆ றுடையானே!

ஏக மாகிப் பல ஆவாய்!
இமையார்சேனைக்(கு) ஒரு தலைவா!
எண்ணா யிரவர் கழுஏற
இயலாற் கறுவும் இளையோனே!

நாக மணிவார் பரவுகுரு
நாதா தாலோ தாலேலோ
நலஞ்சேர் சென்னைப் பதிபுரக்கும்
நம்பா தாலோ தாலேலோ. 23

பத்தி நலத்தோர்க் கெளியோனே!
பரமா னந்தத் திருநடனம்
பயிலும் பரமன் விழிப்பொறியாய்ப்
பதுமத் தடம்புக்(கு) உருவானாய்!



சித்தித் திறலும் மெய்ஞ்ஞானச்
சீரும் கொடுக்கும் செயலோனே!
செங்க ணெடுமால் மருகோனே!
திகழ்வே லணியும் திரள்தோளா!

முத்தித் தலைவா! முழுமோன
முதலாம் முருகா! நறைகமழும்
மொய்ம்பார் கடம்பு புனைவோனே!
மொழிதற் கரிய புகழாளா!

தித்தித் திடும்சொற் குறமகள்சேர்
தேவே தாலோ தாலேலோ
சென்னை நகரில் விளையாடும்
செல்வா தாலோ தாலேலோ. 24

## வேறு மகுடம்

### சங்கு விளங்கும் சிறப்பு

வாவி மலர்ந்த நறுங்கமல
மலர்மேற் புதுநீர்த் திரைஒதுக்க
மணிச்சூல் முதிர்ந்து பெரிதொலிக்கும்
வளைவாழ் வதனைக் கயல்பாயக்

காவில் உலவிச் சிலவீதி
கடந்து பலவா(ம்) மனைவாயிற்
கடையிற் புகுந்து மடமாதர்
கழுத்தின் எழில்கண்(டு) உளம்நாணிச்,

சேவில் இவர்வார் செவிக்கணியாம்
திறமை நாடிக் களிகூர்ந்து
தெண்ணீர்ச் சாலின் அருகில்மணி
திகழக் கான்று, துயில்வளம் சேர்

தாவில் சென்னைப் பதிமுருகா!
தாலோ தாலோ தாலேலோ
தனிவேற் குமர குருபரனே
தாலோ தாலோ தாலேலோ. 25

### குரங்குகளின் ஆடல்

காரும் குளிர்தென் றலும்உலவும்
கவினார்சோலைக் குரங்கின்இனம்
கமழ்பூந் துணரின் கள்ளருந்திக்
களித்துக் குதித்துத் திரிதல்கண்டு

வாரும் கிழியப் பணைத்தமுலை
மடவார் படைசூழ் மதவேள்; தன்
வரியார் கருப்புச் சிலைவாங்கி
மலர்வா ளிகளைப் பொழிவதனால்

சோரு மயல்கொண்(டு) ஒன்றையொன்று
தொழுது புணர்ந்து பலவினது
சுளைவிட் டெறிந்து விளையாடித்
துலங்கும் வளத்தாற் சுரர்புகழ்சீர்

சாரும் சென்னைப் பதித்தலைவா
தாலோ தாலோ தாலேலோ
தனிவேற் குமர குருபரனே
தாலோ தாலோ தாலேலோ. 26

### வேறு - தாழிசை

பரமன் விரும்பிய பிரணவ மெய்ப்பொருள்
பகர்தரு சண்முகனே!
பங்கய மங்கையர் தங்கண வர்க்கருள்
பன்னிரு தோளானே!
சரவண வாவியி னூடுபி றந்து
தவழ்ந்தமு தற்பொருளே,
தண்ணருள் மாரிபொ ழிந்தடி யார்புடை
தன்னை யளிப்பவனே!
குரவம லர்த்தொகை சூடிம டந்தையர்
கோலம் ஒழிப்போனே!
குன்றுதொ றாடியென் நெஞ்சினும் வந்து
குதிக்கு மெழிற் குகனே!
சரபமெ னத்தகு சேவல ணிந்தவ!
தாலோ தாலேலோ
தாழ்வறு சென்னையில் வாழ்வுறும் வேலவ
தாலோ தாலேலோ. 27



கஞ்சம லர்ப்பிர மன்றனை வென்றுயர்
கையுறு செய்யவனே!
கார்கட லன்னநி றத்திரு மாலருள்
கன்னியர் தங்கணவா!
நஞ்சம்அ யின்றபி ரான்அழல்! அம்பகம்
நல்கவ ரும்புதல்வா!
ஞானவி னோதசி வோகமு ளார்பணி
நண்ணிய புண்ணியனே!
அஞ்சல ளித்துமென் நெஞ்சம் வருந்தல்அ
றிந்துறை யுங்குகனே!
ஆனைமு கத்தொரு வன்றுணை யாவரும்
ஆறுமு கத்தரசே!
சஞ்சல முற்றும்ஒ ழிக்கும்ம காரத!
தாலோ தாலேலோ
தாழ்வறு சென்னையில் வாழ்வுறும் வேலவ!
தாலோ தாலேலோ. 28

### வேறு - சந்தம்

**தத்தன தந்தன தன்ன்ன தானன தானா தானானா**

தத்தையி லங்கிய பன்னிரு தோள்கொள்வி
சாகா தாலேலோ
சற்சனர் சிந்தையில் எண்ணிடல் ஈயும்உ
தாரா தாலேலோ
சித்தையி கழ்ந்தவர் உன்னரி தாகிய
தேவா தாலேலோ
செக்கரும் ஒஞ்சிய செம்மைகு லாவிய
தேகா தாலேலோ
நத்தைய யணிந்துள கைம்முகில் பேணிய
நாதா தாலேலோ
நக்கன்வ ணங்கலின் உண்மையை ஓதிய
நாவா தாலேலோ
வித்தைய னந்தமு(ம்) மன்னிய நீறணி
வேளே தாலேலோ
விற்பனர் மிஞ்சிய சென்னையில் வாழ்கதிர்
வேலா தாலேலோ. 29

**தனதன தந்தன தன்னன தானன தானா தானனா**

சருவசு தந்தர! சண்முக தேசிக!
தாலோ தாலேலோ
தகுவர்ப் பயங்கொள மின்னிய வேலவ!
தாலோ தாலேலோ
தருவரை யன்றரு கன்னிகை நாயக!
தாலோ தாலேலோ
சமணழி யும்படி பன்னிய பாவல!
தாலோ தாலேலோ
சருவொடு செந்தினை தன்னையும் ஆர்பவ!
தாலோ தாலேலோ
சரவண மொன்றிய தண்மலர் வானவ!
தாலோ தாலேலோ
தருமனை வென்றவர் கண்மணி யானவ!
தாலோ தாலேலோ!
தமிழ்நய மிஞ்சிய சென்னையில் வாழ்குக
தாலோ தாலேலோ. 30

## 4. சப்பாணிப் பருவம்

குரவமல ரும்செச்சை மலரும்அலர் நீபமும்
கூதாள மும்பு னைந்து
குன்றங்கள் தோறும் குறிச்சிதொறும் நடமிடும்
கோலா கலக்கு மரனே!
அரவரசின் உடலம்நெளி வுற்றுலைய விளையாடும்
அணிமயிற் கலப நிழலூ(டு)
அரிவையர்கள் இருவரொடு பவனிவரும் ஒருவனே!
அமரரொடு முனிவர் தாமும்
பரவநிசி சரர்தமது குலமறக் களையும்வேற்
படைகுலவு புயவீரனே!
பங்கய மலர்ப்பொகுட் டுறையும்விதி யறியாத
பரமரக சியம்உ ணர்த்தும்
சரவணப் புனலில்ஒரு சிறுகுழவி யானவா!
சப்பாணி கொட்டி யருளே
தன்னைநிகர் சென்னையினில் மன்னிவளர் சண்முகா!
சப்பாணி கொட்டி யருளே. 31



கானவர்கள் கண்டெடுத் துக்குடிலில் வைத்தெமது
கருவூல மென்று கொஞ்சிக்,
கண்குலவு பீலியந் தானையும் பலகறைக்
கலனுந் திருத்தி, அப்பால்
ஏனலிற் பரண்மீ திருத்திடக் கவணோ(டு)
இளங்குயி லெனக்கு லாவும்
எம்மைதரு தினைமா விழைந்துகிழ முனிவேடம்
இட்டுமுன் பட்ட பாடு
வானவர்கள் மகளறிந்(து) ஊடிக் கொளக்கெஞ்சி
வஞ்சமன்(று); உன்றன் ஆவல்
மனதில், அவள்ஆவல் உடலத்(து)எனச் சொல்லிஅவள்
மகிழும் குறிப்ப றிந்து
தானணுகி மெல்லெனச் சருவுமண வாளனே
சப்பாணி கொட்டி யருளே
தன்னைநிகர் சென்னையினில் மன்னிவளர் சண்முகா!
சப்பாணி கொட்டி யருளே. 32

கொங்காரு மென்மலர்த் துணர்மருவு கற்பகக்
குளிர்சோலை நீழ லின்கண்
குலவிநவ மணிஆ தனத்தமரர் பலரும்
குனிந்திறைஞ் சக்கு விவுறா
அங்காவி மலரனைய விழிமினார் நடமாட
அம்புயப் பரும லரைநேர்
ஆயிரங் கண்ணோடு கொலுஇருப் பவன்வலி(து)
அளித்தமகள் அருகி ருக்கப்
பைங்கான கத்தொரு குறத்திக்கு மயல்கொண்ட
பண்பினால், நம்பு மன்பர்
பலர்நிற்க என்னைப் பரிந்தாண்டொர் உண்மையும்
பகரத்து ணிந்த முருகா
சங்காய குழைநம்பர் தரவந்த கந்தனே!
சப்பாணி கொட்டி யருளே
தன்னைநிகர் சென்னையினில் மன்னிவளர் கந்தனே
சப்பாணி கொட்டி யருளே. 33

**வேறு - மகுடம்**

**பன்னீரிலைத் திருநீற்றின் பண்பு**

வஞ்சக மனக்கயவர் உணர்வரிய புகழ்கொண்டு
மலைதோ றிலங்கும் அரசே!

வள்ளியினும் என்றனக் கினிதாகும் அன்பர்பகர்
வண்தமி ழெனப்ப கர்ந்தாய்!
செஞ்சரண யுகளம் குறிப்பார்கள் தமைநிந்தை
செய்யுமவர் குலம ழிப்பாய்!
சேவலங் கொடியொன்று திண்புயம் கருதுநர்
செயம்பெறக் கண்டு மகிழ்வாய்!
சஞ்சல(ம்) ஒழித்தெழிற் பன்னீரி லைக்குள்உறு
தவளவெண் ணீறு தானே
சருவபிர சாதமென நம்பிடுங் கவுமாரர்
சமரச விளக்க மாவாய்!
குஞ்சர முகக்கடவு ளுடன்வந்த துணைவனே
கொட்டி யருள் சப்பாணியே
குற்றமறு சென்னையினில் உற்றகும ரேசனே
கொட்டி யருள் சப்பாணியே. 34

**முருகன் கைதட்டலால் ஏற்படும் நிகழ்ச்சிகள்**

வாரமிகு பொன்னகர்த் தேவர்கோன் மனைமூன்றில்
வாயில்மும் முரசு கொட்ட
வளமருவு பாற்கடலில் வந்தமின் னாருளம்
மகிழ்ந்துநெடு வீணை கொட்டச்
சூரன்முத லாமவுணர் நெஞ்சிற் றிடுக்கெனத்
தொலையாத பறைகொட் டஊன்
துய்க்கும்அகல் வாய்அசுர மங்கையர்கள் கண்ணீர்
தொடுத்(து)அருவி யென்று கொட்டப்
பூரமிவர் வாள்கணவன் நெடுமாயன் அன்னவர்கள்
புந்தியினில் உவகை கொட்டப்
பொதியைமா முனியனைய புண்ணியர்கள் மதுரம்
பொலிந்ததுதி கொட்ட மற்றும்
கோரமிகு பூதகணர் தோள்கொட்ட இன்றுநீ
கொட்டி யருள் சப்பாணியே
கொற்றமிகு சென்னையினில் உற்றகும ரேசனே
கொட்டி யருள் சப்பாணியே. 35

**வேறு**

ஆலக் கொடுவாய்ப் பணியணிபூண்(டு)
அருந்தும் இரையும் அதுவாக்கொண்(டு)



அதன்மேல் நடிக்கு(ம்) மயில்விரிக்கும்
அழகார் தோகைப் பரிநிழலில்
ஞாலத் தினையுண் டுமிழ்ந்தபிரான்
நளின மலர்க்கண் உதவுமிரு
நல்லார் அருகிற் களிகூர
நடுவுற் றிருந்து ஞாங்கர்முனைச்
சூலப் படைவெண் குலிசமுதற்
றுலங்கு மவைபற் பலபூண்டு
தொண்டு புரிவார் வசிக்குமிடம்
தோறுந் தினம்போய் விளையாடும்
கோலக் குமர குருபரனே
கொட்டி யருளாய் சப்பாணி
குறைதீர் சென்னைப் பதிமுருகா
கொட்டி யருளாய் சப்பாணி. 36

மதிக்குந் திருப்பாற் கடல்அமுதம்
வழியு மொழிப்பா வையர்சூழ
வன்னக் கிளிமேற் றினம்பவனி
வருவான் தொடுக்கும் மலர்க்கணையால்
விதிக்கு(ம்) முதுநூல் நெறிதவறி
வீணாட் கழித்து மனம்புண்ணாய்
வெறுக்கை யுடையார் மனைதொறும்போய்
வெதும்பி யெனைப்போல் மெலியாமல்
கதிக்கும் விருப்புற்(று) அருந்தமிழாற்
கனவி னிடத்தும் கடம்பணியும்
கழலைப் பரவி எழுத்தாறும்
கருதும் பெரியோர் கண்காணக்
குதிக்கும் கருணைக் குகவேளே
கொட்டி யருளாய் சப்பாணி
குறைதீர் சென்னைப் பதிமுருகா
கொட்டி யருளாய் சப்பாணி. 37

**வேறு - தாழிசை**

**நகர் வளம்**

**தனதன தானன தன்னன தந்தன தத்தன தத்தான**

கணவரொ(டு) ஊடிய கன்னியர் சிந்திய
கற்பணி மிக்கேய்தல்,

கதிரவ னார்வெயில் என்னஇ லங்கிடல்,
கைக்களி(று) உற்றாசில்
மணமத நீர்ஒரு மும்மையு மிஞ்சிடல்
மட்குதல் அற்(று)ஊரும்
வளையுமிழ் மாமணி வெண்மைது லங்கிடல்
மத்தம்ள ருக்காதி
இணரொடு சூடினர் அன்னவர் தம்புடை
இத்திறம் ஒப்பாகும்
எழில்வளம் ஆயிரம் மன்னுநெ டுந்தெரு
இற்றொறும் மெய்ச்சீர்கொள்
குணதரர் வாழ்வுறு சென்னையில் வந்தவ
கொட்டுக சப்பாணி
குருபர னாகிய சண்முக புங்கவ
கொட்டுக சப்பாணி. 38

மதியணி வார்சடை அண்ணல்வ ணங்கலின்
மற்றையர் கற்காத
மறைபொருள் ஓதிய வண்மைபெ றுங்குக!
மற்புய! விற்காரர்
துதிபகர் சேவக! விண்ணவர் முன்படு
துக்கம்ஒ ழித்தீடில்
சுவணம்றி லாவிய நன்னகர் இன்பருள்
சொற்பெரு மைச்சீல!
விதியழ மோதிய பன்னிரு திண்கர!
வித்தக! முற்பாவ
வினைமலி சாரணர் தம்மைமு னிந்தவ
வித்தைகள் ஒப்பாய
கொதிதிரை ஒலிடு சென்னைபு ரந்தவ!
கொட்டுக சப்பாணி
குருபர னாகிய சண்முக புங்கவ
கொட்டுக சப்பாணி. 39

### வேறு மகுடம் - சந்தம்

**தானன தந்தன தன்னன தய்யன தத்தா தத்தான**

கூரநெ டுங்கதிர் துன்னயில் வல்லவ
கொட்டாய் சப்பாணி



கோமள மொன்றிய கன்னியர் புல்புய
கொட்டாய் சப்பாணி
கூரறி வின்சில புண்ணியர் உள்பவ
கொட்டாய் சப்பாணி
கோபமி குந்தக ரின்மிசை எய்தினை
கொட்டாய் சப்பாணி
கோரணி மிஞ்சிடும் அம்மணர் வைவினை
கொட்டாய் சப்பாணி
கோகன கம்பொரு பன்னிரு கைகொடு
கொட்டாய் சப்பாணி
கோரமில் சுந்தர(ம்) மன்னிய செய்யவ
கொட்டாய் சப்பாணி
கோதில்வ ளந்திகழ் சென்னையில் வைகினை
கொட்டாய் சப்பாணி. 40

## 5. முத்தப் பருவம்

**போலி முத்துக்களை வெறுத்துக் கூறல்**

சாலிப் பயிரில் விளைந்தமுத்தும்
தவளநி றச்சங்(கு) உமிழ்ந்தமுத்தும்
சசியில் முகிலிற் றழைத்தமுத்தும்
தந்தி மருப்பிற் றயங்குமுத்தும்
வேலிக் கழையில் வெடித்தமுத்தும்
வென்றி மதன்கைச் சிலையின்முத்தும்
விளம்பும் இவைநேர் முத்தனைத்தும்
விரும்பிச் சிறிதும் மெலிவடையேன்
பாலிப் பவன்நான் முகன்கனகப்
பதியோன் பெறும்வாழ் வையும்வெறுத்துன்
பதம்பே ணிடுவார் தமைப்பணிவேன்
பரிதி யிருமூன் றெனத்திகழும்
மோலிக் குமர குருபரனே
முத்தம் தருக முத்தமே
முழங்கும் கடற்சென் னையிற்குமரா
முத்தம் தருக முத்தமே. 41

### முருகனால் உபதேசம் பெற்றவர்கள்

**அழி**யும் பொருள்ஈ(து) அழியாமல்
அவிரும் பொருள்(ஈ)து அழிந்ததுபோன்(று)
அழியாப் பொருள்(ஈ)து எனமூன்றும்
அறியப் புரியும் பிரணவத்தின்
**உழி**யொன் றியமெய்ப் பொருளைவிரித்(து)
உமையா ளமரும் இடப்பாகத்(து)
ஒருவன் றனக்கும், மலயமலை
உறையுந் தமிழ்க்கா வலன்றனக்கும்
பொழியு மதுரக் கவிபாடும்
புனிதக் கிளியாம் அருணகிரிப்
புலவன் றனக்கும், வளங்குலவும்
போரூர் முனிவன் முதற்பலர்க்கும்
மொழியும் பவளத் திருவாயால்
முத்தம் தருக முத்தமே
முழங்குங் கடற்சென் னையிற்குமரா
முத்தம் தருக முத்தமே. 42

### கலைமகளின் உருவங்களால் முத்தமிழுக்கு நிற உவமை கூறல்

திருந்துந் தவளக் கமலமலர்ச்
சீரார் பொகுட்டின் மிசைஅனம்போல்
தினம்வீற் றிருந்து கலைமுழுதும்
தெரிக்கும் கருணைப் பெருமாட்டி
கருந்தும் பிகளா டியகூந்தற்
கற்றை யனைய இயற்றமிழ்க்கும்
கரம்தாள் இதழ்போற் சிவந்திலங்கும்
கவினார் இசைக்கும் கலன்கனைமேற்
பொருந்தும் நிறநா டகத்தினுக்கும்
புலவர் விரும்பும் அவைகொடுத்துப்
பொருப்புத் தொறும்ஆ டிடுமவனே
புத்தே ளினர்கோ எனல்கடவேன்;
முருந்து நகைவாய் இருமூன்றால்
முத்தம் தருக முத்தமே
முழங்கும் கடற்சென் னையில்முருகா
முத்தம் தருக முத்தமே. 43



### தான் திருமலையில் உருண்ட நாளில் மனக்காட்சியில் முருகன் முத்தம் தந்தது

மின்னார் முலைக்குங் குமக்கோட்டில்
வேரிக் குமுத மலர்வாயில்
விடவாள் அரவக் கடிதடத்தில்
வீணே மயல்கொண்டு உழல்வேனைத்
தன்னால் வலியத் தடுத்தாண்டு
தமிழ்வா ரிதியில் முழுக்காட்டித்
தடமா மலையின் மிசைஉருட்டித்
தனித்தோர் கனவிற் றருமுத்தம்
என்னா ருயிரின் அழுக்ககற்றி
இமையார்க் கரிய பெருவாழ்வை
ஈய விலையால் விழைகின்றேன்
இன்னே தரில்நன்(று) யாவருக்கும்
முன்னா முளைத்த முருகோனே
முத்தந் தருக முத்தமே
முழங்குங் கடற்சென் னையில்முருகா
முத்தந் தருக முத்தமே. 44

## வேறு

### முத்தம் பெற்றவர் இவரிவர் என்றல்

எப்பொழுதும் அம்பலத்(து) ஆடிக் கபாலத்(து)
இரந்துண்ட தந்தையாரும்
இழையெனத் தகுசிற் றிடைப்பேதை என்றுரு
எடுத்துற்ற அன்னையாரும்,
மெய்ப்பொழுது காட்டும்ஒரு சுடருற்ற வயிறிலகும்
வேழமுக அண்ணனாரும்,
வேலையிற் கமடமொடு மீனாகி யும்சிறிது
விளையாடு(ம்) மாமனாரும்,
இப்பொழுது வரல்போதல் என்னும்ஒரு நிலையற்(று)
இலங்குதிரு மாமியாரும்,
இருமனைவி மாரும், ஒருகிளியும், எனதுள்ளமும்
இயம்பரிய உவகைகொண்டு
முப்பொழுது(ம்) முத்தமிடும் முருகைய னே! இன்று
முத்தம் கொடுத்தருள்வையே

முதிர்புகழ்ச் சென்னையிற் குடிகொண்ட கந்தனே
முத்தம் கொடுத்தருள்வையே. 45

**நியாயம் கூறி முத்தம் விழைதல்**

**சத்**தியம தாகவொரு முத்தமென் கனவினிற்
றந்ததுண்(டு), அருணகிரிநீ
தான்எனப் பலகால் உரைத்ததுண்(டு), இன்சொற்
றமிழ்க்கடல் உயர்ச்சியென்று
பத்தியறி சாட்சியாய்ச் சீட்டுக் கொடுத்தஉட்
பட்சமுண்(டு), இணையில்கலிநோய்
படருற்ற பேரெனப் பொருள்இரந் துழலெனப்
பலவூர்க் கனுப்பல்உண்டு
பொய்த்திரை யெனத்தக்க மூவே டணைப்பேய்கள்
போராட விட்டதுண்டு
பொதியைமுனி ஆதியர் மகிழ்ந்துதழு வத்தகும்
போதசா ரத்தைநல்கி
முத்திதரல் உண்டென்னில் மயில்மீது வந்துதினம்
முத்தங் கொடுத்தருள்வையே
முதிர்புகழ்ச் சென்னையிற் குடிகொண்ட கந்தனே
முத்தம் கொடுத்தருள்வையே. 46

**வேறு**

**தத்தன தந்தன தன்னன தய்யன**
**தனனா தந்தந் தந்தனனா**

எட்குள் நிறைந்திடும் எண்ணெயை ஒவ்விடும்
இயல்பா நிற்கும் புங்கவனே!
எற்குநி னைந்திடும் வண்மையை நல்கிட
எனவே நித்தஞ் சிந்தைசெய்வாய்!
கட்குடி வண்டுகள் பன்னிய பஃறொடை,
கனபூண், மொய்க்குந் திண்புயனே!
கற்பு மலிந்துள கன்னியர் நல்லுரை
கழறார் வத்தின் சம்பிரமா!
புட்குற வன்குகன் என்னினும் மெய்யருள்
பொழிசீர் முற்றும் கண்குவியாய்!
புத்தியில் வஞ்சகம் உன்னிய மெய்கொடு
புகழ்வாழ் வுற்றுன் றன்கழலாம்



முத்தியில் வந்திருள் மும்மையை வெல்லுவன்;
முடியா(ம்) முத்தம் தந்தருளே
முப்பொரு ளுந்திகழ் சென்னையில் வைகிய
முருகா முத்தந் தந்தருளே. 47

**பெரியோர்கள் பண்பாடு கூறல்**

**தனதன தத்தன தனதன தன்னன**
**தனனா தத்தந் தந்தனனா**

விதிமறை யிற்பகர் மகமென மன்னுயிர்
வெருள்கூ ரக்கொன் றுண்டறியார்!
விலைமக ளிர்க்கதி மயல்கொடு சொன்னவை
விரைவாய் இட்டுந் தொண்டுசெயார்!
அதிவித சித்திர மதுரவி யன்மலி(வு)
அமர்பா டற்கண் டும்பழியார்;
அருள்விழி யைத்தரு குரவரின் முன்னவன்
அயில்வேல் பற்றுஞ் சிங்கமதே
துதிமின்ன னப்பகர் புலவர்ம தன்மலர்
தொடநாண் உற்றுஞ் சுந்தெளிவோர்;
துரியப தத்துறு முழுநிலை துன்னுநர்;
சுரரால் மெச்சும் பண்பினர்நேர்
முதிரறி ஞர்க்குயிர் எனவளர் சண்முக
முடியா(ம்) முத்தந் தந்தருளே
முறையில்ந டப்பவர் பலர்வளர் சென்னையின்
முருகா முத்தந் தந்தருளே. 48

**வேறு மகுடம்**

**நகர்வளம்**

**தனதன தானன தன்னன தந்தன**
**தத்தன தத்தனனா**

வயமத(ன்) நாணது புன்னைம லர்ந்துள
மற்கள்மி குத்துணலால்
மயல்கொடு பாடிட, விண்முகில் அம்பிடை
மட்டில்பு னற்கொடுபேர்
இயல்பறும் ஓரொலி பண்ணிட, ஞெண்டினம்
இற்பிற கிற்செலலால்

எமனென நூல்வலை பின்னிய வன்கையர்
எய்த்துநு ளைச்சியர்பால்
நயமொடு பேசிட, மின்னுசெ ழுங்கயல்
நற்பனை மட்டையின்மேல்
நகுகனி சூழ்குலை யின்மிசை உந்திட,
நச்சர வக்கடிநேர்
முயல்உட லான்மகிழ் சென்னையில் வந்தவ!
முத்தம ளித்தருளே
முழுதுணர் பாவல! சண்முக முங்கொடு
முத்த மளித்தருளே. 49

**தனதன தானன தன்னஆ தந்தன தத்தன தத்தனானா**

முருகுநி லாவிய பன்மலை கொண்டவ!
முத்தம ளித்தருளே
முனைமலி வேடுவர் பெண்ணைம ணந்தவ!
முத்தம ளித்தருளே
முருகுகு கூதள(ம்) மன்னும் நெடும்புய
முத்தம ளித்தருளே
முதிர்கவி வாணர்கள் எண்ணம றிந்தவ!
முத்தம ளித்தருளே
முருகுகெ டாதுறும் வன்மைபெ றுங்குக!
முத்தம ளித்தருளே
முதல்வர்வி னாவிய உண்மைமொ ழிந்தவ!
முத்தம ளித்தருளே
முருகுயர் வீதிகொள் சென்னையில் வந்தவ!
முத்தம ளித்தருளே
முழுதுணர் பாவல! சண்முக முங்கொடு
முத்தம ளித்தருளே. 50

## 6. வருகைப் பருவம்

**முருகனை வரும்படி அழைத்தல்**

கந்தா வருக! திருஞானக்
களிறூர்ந் தருமைக் கவுமாரர்
கண்முற் றிகழ்வாய் வருக! நறும்
கமல மலரிற் கடவுள்மிகச்



சிந்தா குலத்திற் படமுனிந்து
சிரத்தில் இடித்துத் தளைபூட்டும்
செல்வா வருக! சிவன்பணியும்
தெய்வக் குரவா வருக! இரு
பந்தா முலைக்குஞ் சரிதழுவும்
பவள மலையே வருக! ஒரு
பரண்மீ திருந்தாள் அடிபரவிப்
பணிவாய் வருக! பார்ப்பதியாள்
மைந்தா! சென்னைப் பதிக்குமரா!
வருக! வருக! வருகவே!
மயில்வா கனத்துப் பெருமாளே
வருக வருக வருகவே. 51

**நகர்வளம்**

தளஞ்சேர் கமல மலரோங்கும்
தண்ணீர்க் குடத்திற், பசுந்தேனும்
தயங்கும் இசைவண் டினமும்மணி
தருஞ்சூல் உளையும் வளைத்திரளும்
குளஞ்சேர் மொழியார் விளையாட்டும்
கொல்லு மவர்கண் மலர்க்கொதுங்கும்
குவளைத் திரளும், அகல்வானிற்
குதிக்கச் சலியாக் கொழுமையுறும்
இளஞ்சே லினமும் முழுகியெழும்
எருமை முலைக்கண் சொரிபாலும்,
எகினத் தொனியும் இருக்கையும்தோய்ந்(து)
இமையார் உலக மெனத்தோன்றும்
வளஞ்சேர் சென்னைப் பதிமுருகா!
வருக! வருக! வருகவே!
மயில்வா கனத்துப் பெருமாளே
வருக வருக வருகவே. 52

**உமாதேவியின் அழைப்பு**

ஆடவருக! எடுத்து முகந்(து)
அணைக்க வருக! பலபணியும்
அணிய வருக! திருமுலைப்பால்
அருந்த வருக! அலரு(ம்)மலர்

சூட வருக! உடற்புழுதி
துடைக்க வருக! குதலைமொழி
துலங்க வருக! மடிமீதில்
துயில வருக! எனஉமையாள்
கூட இருக்கும் பெருமான்கண்
குழைச்சங் கணிகா தொடுகுளிரக்
கொஞ்சி யழைக்க வரும்குமரா!
கூவு மொழிகேட் டிலைகொல்லோ?
மாட மலிசென் னையில்ஒருக்கால்
வருக! வருக! வருகவே
மயில்வா கானத்துப் பெருமாளே!
வருக! வருக! வருகவே. 53

**தனது அனுபவம் கூறல்**

தறுகும் அருமைத் திருவுளத்தின்
தாயார் முலைப்பால் மணம்கமழ்பல்
தவிர்ந்து மடவார் இதழ்விரும்பத்
தகும்பல் முளையாப் பருவத்தே
பெறுதண் டமிழால் மிகத்துதித்தும்
பிரச மலர்ப்பூ சனைபுரிந்தும்
பெரியோர் பதந்தோய்ந்(து) உதிர்ந்ததுகள்
பிறங்கும் சுடர்முன் தலைக்கணிந்தும்
வறுமைக் கனலாற் சூடுண்டும்
மலைமீ துருண்டும் தமியேன்முன்
வந்தாய் இலையே! அந்தோ!என்
வருத்த முழுதும் அறியாயோ!
மறுவில் புகழ்ச்சென் னையிற்றலைவா!
வருக! வருக! வருகவே
மயில்வா கனத்துப் பெருமாளே!
வருக! வருக! வருகவே. 54

**வேறு**

**தன்னிலை குறித்து அவலமுறுதல்**

முத்தமிழ்ப் பனுவற் பெருக்கினைக் கனலினொடு
முந்நீரில் விட்டெறிந்தும்,



முப்பத்து முக்கோடி தேவர்முதல் யாவரையும்
முறைமாறி நிந்தைசெய்தும்,
சத்த விதபேதம் கலந்த பொதுவேடம்
தரித்தும், பொருட்கலைந்தும்
தரளநகை மதிவ்தன மகளிரிள முலைநலம்
தன்னைக் குறித்துழன்றும்
சுத்தபர மானந்தம் உற்றவல் லோர்கள்பலர்
சூழமகிழ் வாழ்வின்இச்சை
தொலையுாது வளரப் புரிந்தனை! உனைக்கண்டு
தொழநாடி மிகமெலிந்தேன்
சித்தருக் கரசாய சிவனும்வழி படநிலவு
தெய்வநா யகவருகவே!
சென்னைமா நகர்தழைய வருகந்த னேஅதிக
சீக்கிரத் தினில் வருகவே! 55

**வழக்கெடுத்தோதி வருகை வேண்டல்**

அருணகிரி தானென்றொர் ஆயிரந் தரம்வந்(து)
அருட்கன விடத்துரைத்தும்,
அஞ்சலென்(று) இருகரம் காட்டியும், பொருளிரந்து
அலையவிட் டனை;அன்றியும்
சருவபிர சாதமென்(று) இலையிலும் வெண்ணீ(று)
தந்து(ம்)மட மங்கைநல்லார்
தருமயலு(ம்) மலிவுறக் கண்டனை; இவற்றினொடு
சாற்றிடத் தக்கவாய
பெருவழக்(கு) இன்னமும் அனந்தமுண்(டு) அன்பரெதிர்
பேசாமல் விடுவதில்லை
பீலிநிழ லிற்றிகழும் வேலினொடு நனவிற்
பிறங்கா திருக்கைமுறையோ!
திருமகள் பிரானுக்கு மருமகன் எனக்குலவு
தெய்வநா யகவருகவே
சென்னைமா நகர்தழைய வருகந்த னே!அதிக
சீக்கிரத் தினில்வருகவே. 56

**வேறு**

**தனதன தனதன தனதன தனதன**
**தன்னன தனனா தனதனா**

அரன்வழி படமகிழ் குருவென மொழியினும்
அன்னவன் நுதலூ(டு) அவிர்வதாம்

அழல்விழி தரவரு சிசுவென நுவலினும்
அங்ஙனம் இசைவாம் இயல்பினான்;
இரவல ரொடுபல புலவர்கள் மிடிகெட
இம்மையில் அருள்கூர் பெருமையான்
இமகரர் மறுவிலர் சிலர்உல விடல்நிகர்
என்னும்நன் முகம்ஆ(று) உடையவேள்
சரவண பவன்அழ கியமயில் மிசைதிகழ்
தன்மையன் அடியார் பகைவர்ஊர்
சலதியில் முழுகிட முனிபவன் மறமகள்
சம்மத வழிபோம் நடைகொள்சேய்
திரமுறு பரமெனும் நிலைதவ றிடன்;ஒளிர்
செந்நிற முகிலே! வருகவே
தெளிதமிழ் நயமுணர் உணர்வினர் மருவிய
சென்னையின் முருகா! வருகவே. 57

அலைகடல் அணிபுவி, மலர்மக ளொடுதினம்
அண்ணிய புயமால் மருகனே!
அரவமும் மதியமும் இதழியும் அவிர்சடை
அண்ணலை அகலாள் புதல்வனே!
கொலைமலி நிசிசரர் தமைஅவர் பவமொடு
கொன்முனை நெடுவேல் வயவனே!
குகுகுகு குகுகுகு எனும்ஒலி தருகொடி
கொன்மலை நிகர்தோள் வரிசையாய்!
நிலைதொனி சுவைநிறம் அறிகிலர் கவியையும்
நெய்ம்மலி குரவோ(டு) அணிகுவாய்!
நெறிகளில் உயர்வது கருணைய தெனும்ஒரு
நின்னயம் உடையார் உறவனே!
சிலைமதன் மலர்தொட வனசரர் குடிலிடை
சென்மல ரடியாய்! வருகவே!
தெளிதமிழ் நயமுணர் உணர்வினர் மருவிய
சென்னையில் முருகா! வருகவே. 58

**வேறு**

**தனன. தனன தனன தனன**
**தன்ன தனன தனதனா**

பருவ மகளிர் உருகி யினிது
பன்னும் அழக! வருகவே
படிறர் கதறி மறுகு கொடுமை
பண்ணும் ஒருவ! வருகவே
இருமின் இடையில் நிலவு பவளம்
என்னும் உருவ! வருகவே
இமய மகளும் அரனும் அருமை
எண்ணு புதல்வ! வருகவே
கருணை யருவி சொரியும் நெடிய
கண்ணின் மிகைய! வருகவே
ககன வனிதை முகர உதவு
கன்ன அணிய! வருகவே
செருவில் உயரும் வலிமை குலவு
தென்னர் தலைவ! வருகவே
திருவும் விதியின் மனையு(ம்) மருவு
சென்னை முருக! வருகவே. 59

**தய்ய தாத்த தன்ன தாந்த தனன தனன தனதனா**

வள்ளி மாக்கொ(டு) உண்ணும் ஆண்டி
வருக வருக வருகவே
வைத பாட்டும் நண்ணு சேந்தன்
வருக வருக வருகவே
வள்ளல் ஆக்கம் மன்னு மாண்பன்
வருக வருக வருகவே
மையின் மேற்கொ(டு) உன்னு பாங்கன்
வருக வருக வருகவே
வள்ளை மாப்பெண் முன்னு காந்தன்
வருக வருக வருகவே
வல்ல வேற்கை துன்னு தோன்றல்
வருக வருக வருகவே
வள்ளல் போற்று மஞ்ஞை தாங்கி
வருக வருக வருகவே
வையம் ஏத்து சென்னை வேந்தன்
வருக வருக வருகவே. 60

## 7. அம்புலிப் பருவம் (சாமம்)

**ஒப்புமை கூறல்**

**முருகனும் சந்திரனும் சமம்**

சீதகிர ணப்பிரபை மலிவுற்று வெண்ணிறம்
திகழவரு கின்ற சீரும்

சேயிழை மடந்தையர்கள் சிலர்சிந்தை செய்யச்
சிலர்க்குவகை நல்கு பண்பும்
வேதனொடு வந்தமத வேளுக்கு மேலென்ன
மெய்ப்புலவர் செப்பு புகழும்
வெள்ளத்தி னும்பொருவில் வெற்பினு மிகச்சென்று
விளையாடு கின்ற வியனும்
மாதமொரு நாள்உலகில் அனைவோரும் விரதமொடு
வழிபடத் தக்க மாண்பும்
மழுவாளி கண்ணில்வரு வோன்எனப் பலநூலும்
மாறாது ரைக்கும் இயல்பும்
ஆதவ(ன்) நடுச்சென்று மீளலும் இவற்கும்உள(து)
அம்புலீ ஆட வாவே
அன்னம்அமர் செய்குலவு சென்னைமுரு கையனுடன்
அம்புலீ ஆட வாவே. 61

நல்லகிர்த் திகைமகளிர் காதலன் எனப்புலவர்
நவிலச் சிறந்து பல்லோர்
நடுவினிற் கொலுஇருந்(து) உம்பர்வழி யாய்இந்த
நானிலம் சுற்றி மலரோன்
சொல்லவளர் ஓராறு நெறிகளின் பொதுவாய்த்
துலங்கிஒரு மங்கை வலிதில்
தோயும்நலம் எய்திஈ ரெண்கலையில் வெவ்வேறு
தோற்றமென உருவெ டுத்து
வெல்லவல மேடத்தின் மீதேறி மற்று(ம்)மனம்
வேண்டுசில வாக னத்தின்
மேற்கொண்டு பல்உயிரும் வெருளஉல கெங்கணும்
விரிந்தெமனும் வெட்க நிற்கும்
அல்லற முனிந்திடுதல் இருவர்க்கும் உடைமையால்
அம்புலீ ஆட வாவே
அன்னம்அமர் செய்குலவு சென்னைமுரு கையனுடன்
அம்புலீ ஆட வாவே. 62

செங்கரும் புச்சிலைக்(கு) அஞ்சித் தொடற்கரிய
சேயிழையை மருவு பண்பும்
சித்திரத் தினும்அதிக உல்லாச மாகச்
சிறக்கின்ற பெருவ னப்பும்
பங்கய மலர்த்தொகுதி நாணு(ம்)முக மும்துணைப்



பட்சமும் பட்சி யுறவும்
பனிமலர்த் தருநிழற் புலவர்குலம் வாழமுன்
பாடு பட்டுயர் கீர்த்தியும்
சங்கரன் சடிலம் தொடும்பேறும் ஒருகளிறு
தலையாற் சுமக்கும் நலமும்
சலதிநடு விற்சென்று மீளலும் கொளுமிவன்
றனைஅனையன் நீஎனத் தேர்ந்(து)
அங்கரம் கொண்டுவா! வா!என்(று) அழைப்பதால்
அம்புலீ ஆட வாவே
அன்னம்அமர் செய்குலவு சென்னைமுரு கையனுடன்
அம்புலீ ஆட வாவே. 63

### பேதம் (வேறுபாடு)

பதினாறு கலையுடையன் நீ! இவன் கலைஆறு
பத்தோடு நாலும் நம்பும்
பத்தருக் குதவுவோன் அரவினைக் கண்டுட்
பயந்(து)அது விழுங்கி உமிழும்
ததிநாடி மெலிவைநீ! இவன்ஏறு(ம்) மயிலும்
தடந்தோ ளில்உறு சேவலும்
தடையறக் கொத்திக் கிழித்துண்ணும் இந்திரன்
தனதேவல் செய்கு வாய்நீ
புதிதாய மணிமுடி தரித்தவன் விரும்புமுயர்
பொன்னகரில் வைத்தோன் இவன்
போரவுணர் பெயர்சொலில் நடுங்குவாய் நீ! அவர்
புறங்காண வல்லான் இவன்
அதியாவல் உற்றுனை அழைக்கத் தகாதுகாண்
அம்புலீ ஆட வாவே
அன்னம்அமர் செய்குலவு சென்னைமுரு கையனுடன்
அம்புலீ ஆட வாவே. 64

முன்போது சூரியர்கள் பலர்நாண மிளிருமணி
முடிஆறு கொண்டோன் இவன்
முளரிமகிழ் ஒருபரிதி முற்படினும் உள்ளஒளி
முழுமையு(ம்) மழுங்குவாய் நீ!
பொன்போகம் விழைகின்ற தேவர்களில் ஒருவன்நீ!
புரதகனன் ஆதி யோரும்
போற்றுமுயர் புகழ்துன்று புனிதவேள் இவன்மதன்

புனையும்ஒரு குடையா வைநீ!
மின்போலு மலர்மக ளிடத்(து)அவனை ஈன்றவனும்
மெச்சவரு சாமி யிவன்நீ
வெளிறிலகு சயரோகி! இவன்அருட் சுடரா
விளங்குதிரு மேனி யுடையான்!
அன்போடு வாஎன அழைப்பதுன் அதிட்டமே
அம்புலீ ஆட வாவே
அன்னம்அமர் செய்குலவு சென்னைமுரு கையனுடன்
அம்புலீ ஆட வாவே. 65

மலரவன் கைகொண்டு சிட்டித்த பொருள்நீ!
வருந்திஅவன் அழஇடித்து
வன்தளையி லிட்டகை யுடையன்இவன், நின்உடல்
வளர்ந்துகுறை வாம்;இ வன்றன்
இலகுடன் ஒரேதன்மை யென்றென்றும் நிற்கும்விண்
இடம்அன்றி அறிகி லாய்நீ!
இவன்அண்ட பிண்டங்கள் எங்கணும் திரிகுவான்
இடைவிடா மறுஉன் றனக்(கு)
உலகறிய ஒருசிறிதும் மறுவில்லை இவனுக்(கு)
உனக்கிறப் பும்பி றப்பும்
உண்(டு)இவனை நம்புமவர் தொண்டர்க்கும் அவையுறா(து)
உவகையுற்(று) உனைய ழைத்தான்
அலகில்வள மருவுமலை தொறும்நடம் இடும்குகனொ(டு)
அம்புலீ ஆட வாவே
அன்னம்அமர் செய்குலவு சென்னைமுரு கையனுடன்
அம்புலீ ஆட வாவே. 66

### வேறு (தானம்) உதவி

மயிலால் அரவப் பகைநீங்கி
மலர்க்கண் அருளால் மறுத்தீர்ந்து
வழங்கும் இலைவெண் திருநீற்றால்
மாறாச் சயநோய் வழக்கொழிந்து
கயிலைக் கிரியார் செவிகேட்கக்
கழறும் பொருளை உணர்வதனால்
கால பயமும் தவிர்ந்துமலர்க்
கடவுள் விதியும் கடந்துதமிழ்



பயிலு முனிவன் முதலாய
பழமைக் கவுமா ரரிற்கூடிப்
பலவா றாடும் பெரும்பேற்றைப்
பரிசாம் எனப்பெற் றிடலாகும்
அயில்வேற் குமர குருபரனோ(டு)
ஆட வருவாய் அம்புலியே
அழகார் சென்னைப் பதிக்குகனோ(டு)
ஆட வருவாய் அம்புலியே. 67

வேலும் மயிலும் துணையெனும்சொல்
விளம்பி யறியாக் கவிஞரையும்
வேதன் வகுத்த நெறியாறும்
விடுத்(து)ஓர் உயிர்கொன் றுணவுகொள்ளும்
மாலுந் தியபாழ் மதம்புகுந்து
வஞ்சம் புரிவோர் தமையும்வென்று
வல்லோர் வணங்கும் தலந்தொறும்போய்
வளமைத் தமிழாற் றுதிபாடிப்
பாலும் அமுதும் பலகோடி
பத்த ருடனே பகிர்ந்தருந்திப்
பாருள் ளளவும் திகழ்புகழும்
பதமும் பெறலாம் படப்பாம்பும்
ஆலும் துயில்மால் மருமகனோ(டு)
ஆட வருவாய் அம்புலியே
அழகார் சென்னைப் பதிக்குகனோ(டு)
ஆட வருவாய் அம்புலியே. 68

### தண்டம் (ஒறுத்தல்)

உன்னை விழுங்கி உமிழ்வானை
ஒருக்காற் பிடித்துக் கொடுவந்தோன்
உடலை இவன்தொண் டரில்ஒருவன்
உரவாட் படையால் ஒறுத்ததுவும்
பொன்னை நிகரும் இவன்தோகைப்
புரவி திருமால் இவர்கருடப்
புள்ளை எளிதிற் புசித்ததுவும்,
போதன் இவர்வால் ஓதிமப்புள்
தன்னை யிவன்கைப் பெருஞ்சேவல்
தட்டா தெடுத்துப் பருகியதும்

சரதம் தகர்உண்(டு) ஆனையுண்டு
தறுகண் கொளில்எங் ஙனம்ஆமோ?
அன்னை யெனும்வேற் படையானோ(டு)
ஆட வருவாய் அம்புலியே
அழகார் சென்னைப் பதிக்குகனோ(டு)
ஆட வருவாய் அம்புலியே. 69

**வேறு**

**தந்தன தத்தன தன்னன தானன**
**தந்தன தந்தனனா**

தந்திஉ னைப்பொரும் வெண்ணிற மாம்அமு
தங்கவ ளம்கொளலே
சண்டைவி ருப்புடன் உன்னிடு(ம்) மேடம்(அ)
தன்பகை நின்குலமே
திந்திமி தித்தக தொம்மென ஆடிய
செஞ்சிகி நஞ்(சு)உணலே
திண்பெறு குக்குட மன்னிய கால்இகல்
சிந்தமு னிந்திடலே
வெந்திடும் அக்கினி என்நவ வீரர்கள்
வென்றிம லிந்துளதாம்
மின்றிகழ் சத்திகொள் முன்னவ(ன்) நாடிடும்
விந்தைசெய் கின்றவரே
மந்திர முற்றருள் சண்முக வேளிடம்
வந்தருள் அம்புலியே
மங்கள மிக்குயர் சென்னைவி சாகன்முன்
வந்தருள் அம்புலியே. 70

## 8. சிற்றிற் பருவம்

### சிறுவீடு இயற்றுதலைக் கூறுவது

முருகனின் அருமைப்பாடு

அருமைப் புலவர் பகர்தமிழ்ப்பாட்(டு)
அனந்தம் வினவிக் களிகூர்ந்தும்
அம்பொற் பிடியும் கருங்குயிலும்
அனையார் மகிழ்முத்(து) ஆடியும்நல்



தருமத் தொடுபா வமும்இமையாத்
தடங்கண் மலராற் பார்வையிட்டும்
தாய்மார் எழுவர் முலைப்பாலும்
சருவும் தினைப்பிண் டியும்புசித்தும்
மருமுற் றியசெங் கடம்பாதி
மலர்மிக் கணிந்தும் மலைதொறும்போய்
மாறா நடனம் புரிந்தும்நிகழ்
வழக்க முழுதும் மறந்தனையோ?
திருவுக் கினிய மருகோனே
சிறியேம் சிற்றில் சிதையேலே
சென்னைப் பதிவாழ் குமரகுரு
தேவா! சிற்றில் சிதையேலே. 71

முருகனிடம் நீ செல்லவேண்டிய இடம் இவை எனல்

பொல்லார் நிணத்தைக் கழுகாதி
புசித்து மகிழும் சமர்ஆடப்
புலவர் பதியில் அவுணர்குலம்
புகுதா வண்ணம் புரந்துவக்கக்
கொல்லா விரதப் பெருந்தவமே
குறியென் றுணரார் சமயநெறி
குலையத் திருவாய் மலர்திறக்கக்
குறவர் மகளும் குஞ்சரியும்
மல்லா டிடுமுன் நடுத்தீர்க்க
மதுரத் தமிழை இகழ்தீயோர்
மணிநா அறுத்துக் கனலில்இட
வழுத்தும் அவர்க்கு வரம்உதவச்
செல்லா(து) எமைஓ ரெதிராக்கிச்
சிறியேம் சிற்றில் சிதையேலே
சென்னைப் பதிவாழ் குமரகுரு
தேவா! சிற்றில் சிதையேலே. 72

முருகன் திருவடி ஊன்றப்பெறும் இடங்கள்

மருத்தா மரையான் உணர்வரிய
மறையின் சிரத்தில், ஆகமத்தில்
மதியம் புனல்கொக் கிறகாதி
வயங்கும் சடையில் வானுலகத்

தருத்தார் அகத்தார் எலும்பணியும்
தடமார் பகத்தில் தமிழ்முனிவன்
தனதுள் ளத்தில், கவுமாரத்
தவத்தோர் வரையத் தரும்ஏட்டில்
விருத்தா கரக்குங் குமத்தனத்தில்
மேனை மகளார்மே கலையில்
விழியிற் பலவாம் மலைக்கு வட்டில்
விளங்கித் தொனிக்கும் வியன்சதங்கைத்
திருத்தாள் மலரிற் பொடிதோயச்
சிறியேம் சிற்றில் சிதையேலே
சென்னைப் பதிவாழ் குமரகுரு
தேவா! சிற்றில் சிதையேலே. 73

**சிறுவீட்டின் அமைப்புக் கூறல்**

யாங்கள் வருந்தி மணற்கொழித்(து)ஈண்(டு)
இதுசோ றடும்வீ(டு) இதுகூடம்
இரவிற் றுயிலும் அரங்கிதுநிற்(கு)
இயைந்த பூசைக் கிடம்இதுநற்
பாங்கர் மகிழ்பட் டகசாலை
பக்கத் திண்ணை இதுஇ(து)எனப்
பலவா றாகப் பெயரமைத்துப்
பகுத்துச் சமைத்த விதம்பாராய்!
தாங்கற் கரிய துயரெமக்குத்
தந்து மகிழேல் எம்மொடுநீ
தானும் இருந்து விளையாடில்
தலைமை உனதென் பதும்தவறோ!
தீங்கர் உணராப் புகழோனே
சிறியேம் சிற்றில் சிதையேலே
சென்னைப் பதிவாழ் குமரகுரு
தேவா! சிற்றில் சிதையேலே. 74

**சிறுமியர் முறையீடு**

அன்ன முதற்பல் உணவும்உனக்(கு)
அளித்து வணங்கி நீமகிழ்வுற்(று)
அருந்திக் கழிக்கும் அவைதாமே
அருள்வாழ் வெனப்பெற் றமையேமா?



வன்னத் தளிர்மெல் இளமேனி
மகளி ரினத்தில் நீவிரும்பும்
வண்ண(ம்) மணத்தற் குதவேமா?
மதிவாள் நுதலில் வெயர்வரும்ப
இன்ன பணிகள் முடிந்ததற்பின்
ஏன்வந் தனையென்(று) இசைத்தேமா?
யாது பிழையாம் இழைத்தேம்என்(று)
இவ்வா றுளத்திற் சினம்கொண்டாய்?
சின்ன விரற்றாட் டுணைநோவச்
சிறியேம் சிற்றில் சிதையேலே
சென்னைப் பதிவாழ் குமரகுரு
தேவா! சிற்றில் சிதையேலே. 75

**வேறு**

**சோலைச் சிறப்பு (குரங்கின் விளையாடல்)**

தந்தியின் போரொலியும் முகிலொலியும் மேலிடத்
தாவிப் பயந்தொ துங்கிச்
சந்தவண் தமிழெனப் பொழிகின்ற பெருமழைத்
தாரைகள் சகித்தி டாமல்
சுந்தியில் தென்னையில் பூவிரியு(ம்) மடலெனும்
கவிகையின் கீழ்க்கி டந்து
கதிர்வெயிற் கண்டுடன் பலவினிற் பாய்ந்துமுதிர்
கனிகளைக் கீறி யுண்டு
மந்திர சடாக்கரம் சிறிது(ம்)மொழி யாதகவி
வாணர்க ளெனப்பி ணங்கி
வண்டுண்டு மிஞ்சிய மலர்கட் குடித்துவெறி
மண்டைமேற் கொண்டு கனிகள்
சிந்திடும் பொழில்மருவு சென்னைமா நகர்முருகு
சிற்றிற் சிதைத்தி டேலே
சிறியேமை எதிராம் எனக்கொண்டு யாம்செய்த
சிற்றிற் சிதைத்தி டேலே. 76

**தம் குறைகூறித் தயவினை வேண்டல்**

வாயஞ்சி டா(து)இரக் கின்றவர்முன் இடிபோலும்
வன்சொல் உரைத்து ளேமா?

வந்தவர் பசித்திருக் கப்புசித் தேப்பமிடும்
மாகொடுமை கற்று ளேமா?
நீயன்றி வேறுமொரு தெய்வம்உண் டெனஎங்கள்
நெஞ்சிற் குறித்து ளேமா?
நெறிதவறி உயிர்வதைத்(து) ஊனுண்டு தடுமாறும்
நீசரை அடுத்து ளேமா?
பேயஞ்சி வம்பினில் உயிர்ப்பலி கொடுக்கின்ற
பித்தரை மதித்து ளேமா?
பெரியோரை யும்புலவர் தங்களையு மதியாத
பேராண்மை கொண்டு ளேமா?
தேயமெங் கும்பரவு சென்னைமா நகர்முருக
சிற்றிற் சிதைத்தி டேலே
சிறியேமை எதிரா மெனக்கொண்டு யாம்செய்த
சிற்றிற் சிதைத்தி டேலே. 77

**நியாயங்கூறி நிறையருள் வேண்டல்**

நம்பிவந் தவர்தமது கண்களைக் கட்டியும்
நடுக்காட்டில் விடலாகுமா?
நானுனக் கடிமையென வழிபடுமெய் அடியார்கள்
நைவுறச் செயலாகுமா?
தம்பியொரு வனையேவி அந்நாள் உரைத்தமொழி
தனைமறந் திடலாகுமா?
தண்டமிழ்ப் பொதியைவரை தருசெம்பு நதியினிடை
சாற்றல்பொய்த் திடலாகுமா?
கொம்பினிற் றிகழ்முலைக் கோதையர்க்(கு) உருகியும்
கூச்சமிக் குறலாகுமா?
குற்றம் பொறுத்தெம்மை ஆண்டுகொண் டால்உலகு
குடிபோகும் எனலாகுமா?
தெம்பில்உயர் வார்மருவு சென்னைமா நகர்முருக
சிற்றிற் சிதைத்தி டேலே
சிறியேமை எதிராம் எனக்கொண்டு யாம்செய்த
சிற்றிற் சிதைத்தி டேலே. 78

**வேறு - சந்தம்**

**தனதன தானன தன்னன தானன, தத்தத் தனதானா**

உயிர்வதை யாகிய புன்மைகொள் வாரிடம்
உற்றுத் தவியாதே



உலகமெ லாம்இகழ் துன்மதி யாளரொ(டு)
ஒத்துப் பழகாதே
பயிரனை யார்களை அன்னவ ரால்இடர்
பட்டுச் சுழலாதே
பதுமமு ளான்நுவல் சண்மத வாணர்கள்
பற்றைப் பழியாதே
வயிரவ லாரிதன் விண்ணுல காசையில்
மட்குற் றொழியாதே
மதுரித கோமள நன்னய வாணர்சொல்
வைப்பைக் கழியாதே
செயிரறு சீர்தரு சின்மய தேசிக
சிற்றிற் சிதையேலே
தெளிவினர் மேவிய சென்னையில் வேலவ
சிற்றிற் சிதையேலே. 79

திருமக ளார்தரு கன்னியர் நாயக! சிற்றிற் சிதையேலே
சிவபெரு மானது கண்ணருள் பாலக! சிற்றிற் சிதையேலே
திருகிய கோடுறு செந்நிற மாவல! சிற்றிற் சிதையேலே
செறிபொழில் சூழ்தரு பன்மலை யாதிப! சிற்றிற் சிதையேலே
திருடியும் ஓர்கவி தன்னிடம் ஈபவ! சிற்றிற் சிதையேலே
திகழ்துவர் மேல்கொடு பொன்மயில் ஊர்குக! சிற்றிற்
சிதையேலே
திருவருள் மேலிடு சின்மய தேசிக! சிற்றிற் சிதையேலே
தெளிவினர் மேவிய சென்னையில் வேலவ! சிற்றிற்
சிதையேலே. 80

## 9. சிறுபறைப் பருவம்

தெய்வம்ஒன்(று) அன்பர்கள் நிமித்தம்பல் வாறாய
திருவுருக் கொள்ளும் என்றும்
செந்தமிழ்ச் சந்தக் கவிச்சுவைக்(கு) உயர்பேறு
செவிகளுக் கில்லை யென்றும்
மெய்வழி கிடக்கப்பொய் வழிதேடி உழலுவது
வெவ்வினைக் கொடுமை யென்றும்
வீடுபெற் றுப்பிறவி நோய்தவிர்ந் தொழிவதே
மேலான பெருமை யென்றும்
மைவனப்(பு) இலகியகண் மங்கையர்கள் இன்பத்தின்
வாஞ்சையறல் அருமை யென்றும்,

மாலயன் முதற்றேவர் தாமும்மா னிடராகி
வருவதும் சரதம் என்றும்
செய்வளம் பெரிதிலகு சென்னைநகர் வேலவா!
சிறுபறை முழக்கி யருளே
சிவபிரான் வழிபடத் திகழ்ஞான தேசிகா
சிறுபறை முழக்கி யருளே. 81

**சிவனாதிய ஆறு கடவுளர்களே ஆறுமுகமெனல்**

அம்பொன்வார் சிலைகொண்டு முப்புரம் எரித்தவனும்
ஆடலம் பிகையு(ம்) முந்நாள்
அமரர்குலம் வாழ்வுறக் கடல்கடைந் தமுதுதவ
அரிவையுரு ஆயி னானும்
கொம்பொன்(று) ஒடித்திகலும் அவுணேசன் ஆருயிர்
குடித்துக் களித்து ளானும்
குலவுகரம் ஆயிரம் கொண்டிருட் பகைவென்று
குவலயம் சுற்று வானும்
பைம்பொன் மழைக்கோள் முதற்குலவு பலரும்நின்
பதுமமுகம் ஆ(று) என்னமெய்ப்
பத்தருணர் வுற்றபடி பலரும் தெரிந்துயப்
பதினாலு லோகத்தினும்
செம்பொன்மா மதிள்குலவு சென்னைநகர் வேலவா!
சிறுபறை முழக்கி யருளே
தென்பொதியை முனிபரவு சிவஞான தேசிகா!
சிறுபறை முழக்கி யருளே. 82

**கடலலை ஒதுக்கும் கவினுறு பொருள்கள்**

வெளிறுபடு பலமுத்தி னங்களும் சூல்உளைவு
மிஞ்சியிரை கின்ற சங்கும்
வித்துரும மிகையு(ம்)மணி வகைகளும், பலர்மனம்
வெதும்பப் பறித்த பொருளால்
களிபெருகி வேறொருவ ருக்கும்இட் டுண்ணாது
காலங் கழிக்கும் அவர்தாம்
காசொன்று நூறாகும் எனமரக் கலமதிற்
கட்டிவிட் டிடுவ பலவும்
குளிர்கமல மும்குவளை யும்புரையு மலர்வகைக்
குவியலும், தினம்இ ரந்து



கொள்ளுமவ ருக்(கு)ஆய கலமும், பசுந்தழைக்
கொத்துமுத லாய பிறவும்
தெளிகடற் றிரைசிந்து சென்னைநகர் வேலவா!
சிறுபறை முழக்கி யருளே
செந்தமிழ்ப் பைங்கிள்ளை யுணர்ஞான தேசிகா
சிறுபறை முழக்கி யருளே. 83

**சென்னையிற் குலவும் சிறந்த ஒலிமுழக்கம்**

வயமருவு கவுமார மாதவர்கள் மிகவேலும்
மயிலும்என வேமு ழக்க
மதிசூடி யைப்பரவு வார்பலரும் அரகர
மகாதேவ எனமு ழக்க
வியன்மருவு பஞ்சா யுதக்கடவுள் ஆதியரை
வேண்டுவார் அவர வர்க்கு
விழைவான படிமுழக் கக்கலிக் கஞ்சாது
விப்பிரர்கள் மறைமு ழக்க
நயமலியும் விழிமகளிர் செம்பவள வாய்கொண்டு
நற்குரவை ஒலிமு ழக்க
நால்வகைப் புலவோர்கள் கவிமுழக் கத்தேரின்
நடுநின்று சிறக டித்துச்
செயமுழக் கும்கொடிகொள் சென்னைநகர் வேலவா
சிறுபறை முழக்கி யருளே
தென்போரி யான்அனையர் தெரிஞான தேசிகா!
சிறுபறை முழக்கி யருளே. 84

**எருமைகளின் செயல்**

ஒன்றுபடும் ஆழியந் தேருடைச் சுடரோனை
உச்சியிற் காணு முன்னம்
உழவர்ஏர் விட்டவிழ்க் கும்கரும் பகடுபல
ஓடிக் குதித்து வப்புற்(று)
அன்றுமலர் தாமரைத் தண்ணீர்த் தடத்திடை
அவாஅற முழுக்கா டிமீண்(டு)
அணிவேய் எனக்குலவு கன்னலங் காவினில்
அதட்டிப் புகுந்த வற்றை
மென்றுசில முத்தைக் கடித்துமிழ்ந்(து) அகடளவில்
மேய்ந்துசெவி அசைய வாயில்

வெண்ணுரை பெயச்சு வைத்(து) அங்கையொன் றில்லாத
வேழமாம் எனநடந்து
சென்றுதொழு விற்றுயில்கொள் சென்னைநகர் வேலவா
சிறுபறை முழக்கி யருளே
தெண்டனிடு வார்க்குதவி செயும்ஞான தேசிகா
சிறுபறை முழக்கி யருளே. 85

## வேறு

காவற் கடவுள் மகளிர்மனம்
களிக்கும் விளையாட் டுடையானே
கருது மவரைக் கனற்கோபக்
காலன் அணுகா தருள்வோனே
ஏவற் றொழிலும் புரிந்துசிலர்
இயம்பும் பனுவல் புனைவோனே
ஈரா(று)உருவன் எனப்பெயர் பூண்(டு)
எண்ணில் வடிவம் எடுப்போனே
சேவற் கொடியொன் றுடையானே!
சிறுநாட் கொடியிற் சலியானே
சீரார் கொடியிற் புனைபீலிச்
சேலைக் கொடிபால் இரந்தோனே
மூவற் றவிர்மெய்ப் புகழோனே
முழக்கி யருளாய் சிறுபறையே
முதிர்வண் தமிழ்ச்சென் னையிற்குமரா
முழக்கி யருளாய் சிறுபறையே. 86

கன்னித் தமிழை வேறுளபல்
கலையோர் எதிர்ந்து கழியாமல்
காயும் கனியும் இருக்கஉடல்
காதி எவரும் அருந்தாமல்
வன்னிக் கரத்தார் எனஇரக்கும்
வல்லார் பெருமை மறையாமல்
வரையா மொழியும் ஆகமத்தின்
வகையும் சிறிது(ம்) மழுங்காமல்
பொன்னிற் பெரிதொன் றிலையென்னப்
புகல்வார் ஆண்மை பொலியாமல்
பொய்மெய் யாகி மெய்பொய்யாய்ப்
போகி டாமற், புகழ்வார்தம்



முன்னிற் பவனே உலகெங்கும்
முழக்கி யருளாய் சிறுபறையே
முருகார் பொழிற்சென் னையிற்குமரா
முழக்கி யருளாய் சிறுபறையே. 87

### வேலாயுதத்தின் வெற்றி கூறல்

தீது மலிதா ருகன் உடலில்
தீரா மயல்நோய் தரு(ம்)மலையில்
தெண்ணீர்க கடலில், திறன்மாவில்
திகழ்வா ளொடுநேர் வரும்சூரில்
ஓதும் எழுவர் வெளிற்று டம்பில்
உரம்சேர் குதிரைத் தலைப்பேயில்
ஓரா யிரவர் உறும்குகையில்
ஒருபாட் டுணர்வான் தனைஎதிர்த்து
வாது புரிவார் நடுமார்பில்
வளந்தோய்ந் திலகு(ம்) முதுகுளத்தூர்
வந்தாற் பகைத்தோன் மந்திரத்தில்
வழுத்தச் சலியார் மனத்துயரில்
மோதும் வடிவேற் குகவேளே
முழக்கி யருளாய் சிறுபறையே
மூவாப் புகழ்ச்சென் னையின்முருகா
முழக்கி யருளாய் சிறுபறையே. 88

## வேறு சந்தம்

**தனதன தனதன தன்னன தானன தனத்த தனதனனா**

உனதிரு பதமலர் நண்ணிய மாதவர்
உவப்பு மலிவுறவான்
உலகினர் அவுணர்கள் பண்ணிய தீதறும்
உயர்ச்சி பெறமலர்மீ(து)
அனவரு தமும்உறை புண்ணிய வேதியன்
அணைக்கும் இளமுலையாள்
அனையவர் தமைஇருள் துன்னிய மூடர்கள்
அதட்டும் வினைகெடநீள்
கனமென உதவிடு தன்மையை நாடிய
கருத்தர் பலர்தழல்நேர்

கலியிடை முழுகிய புண்ணற வார்புவி
களித்து மெலிதுயர்போய்
முனமென மிளிர்தர முன்னியெ நேரமும்
முழக்கு சிறுபறையே
முதுகட லொலிமலி சென்னையில் வாழ்குக!
முழக்கு சிறுபறையே. 89

**தத்தன தத்தன தன்னன தானன தனத்த தனதனனா**

முத்தந கைச்சிவை முன்னருள் பாலக
முழக்கு சிறுபறையே
முப்புரம் அட்டவர் கண்மணி யானவ
முழக்கு சிறுபறையே
முத்தர் பெறத்தகு மெய்ம்முதல் ஓர்பவ
முழக்கு சிறுபறையே
முற்றும்உ ணர்த்திடும் வண்மைகொள் பாவல
முழக்கு சிறுபறையே
முத்தம்அ ளித்தொரு சொன்னுவல் வானவ
முழக்கு சிறுபறையே
மொய்க்குர வுற்றலர் பொன்மலை நேர்புய
முழக்கு சிறுபறையே
முத்தமிழ் கற்றவர் உன்னிடல் ஈபவ
முழக்கு சிறுபறையே
முட்டுதல் அற்றுயர் சென்னையில் வாழ்குக
முழக்கு சிறுபறையே. 90

## 10. சிறுதேர்ப் பருவம்

**சோலைச் சிறப்பு**

புன்னைமலர் வண்டின்இசை குயில்பாடும் இசையினொடு
பொலிவுறப் புனல்அ ருந்தும்
புயலினொடு தென்றல்வந்(து) உலவமர கதநிறப்
புள்ளிமா மயில்க லாபம்
தன்னையும் சிறகையும் விரித்தகவி நடம்இடத்
தாவு கோடர மகிழ்ந்து
தண்ணுமையில் முட்கனி தனைக்கொட்டி அலர்மலர்த்
தாளமும் இடக்கண்டதால்



பொன்னைநில மாவுடைய புனிதநகர் மங்கையர்
பொறாமையுற் றுக்கண் இமையாப்
புலர்வுறத் திகழ்பொழிற் செறிவுடுத்(து) இணையில்மெய்ப்
புகழ்பொறுத் துக்கு லாவும்
சென்னைமா நகரினிற் குடிகொண்ட கந்தனே
சிறுதேர் உருட்டி யருளே
சிவன்விழிப் பொறியெனச் சரவணத் துற்றவா
சிறுதேர் உருட்டி யருளே. 91

**முருகன் ஏந்திய ஆயுதவகையும், கைகளின் இயல்பும்**

சங்கரன் வியந்துகொளும் இருதலைச் சூலமும்
தமநியப் பதிபு ரக்கும்
தலைவன்முத லோர்புகழும் வயிரமும் சாபமும்
சாயகமும் நெடிய வாளும்
துங்கமுறு பலகையும் சக்கரமும் வளையும்
துறட்டியும் கயிறும் ஏந்திச்
சுடரனைய செஞ்சூட்டு வாரணம் பற்றித்
துலங்கும் இலைவே லணைத்துக்
கங்கண மிலங்கச் சிலர்க்கபய வரதமும்
காட்டி, இவையன்றி மற்றும்
கழறுவார் கழறுமவ் வண்ணமவர் நெஞ்சிற்
கவின்(று)இலை விபூதி யுதவும்
செங்கமல மலரனைய கைகொண்டு சென்னையிற்
சிறுதேர் உருட்டி யருளே
தெண்டிரைத் திரள்குலவு சரவணத் துற்றவா
சிறுதேர் உருட்டி யருளே. 92

அரிநெடுங் கணையாக, மேருமலை வில்லாக
அரவரசு நாண தாக
அமரரும் பூதரும் படையாக நான்முகம்
அமைந்தவன் சூத னாக
விரியுமறை ஒருநான்கும் மாவாக நீஉணரும்
மெய்ப்பொருள் இருந்த பதியாய்
வெள்ளையறி(வு) உள்ளவரும் விள்ளக் கிடந்தபொறி
விசைகொண்ட கசையதாகப்
பரிதிமதி உருள்ஆழி யினமாக வரையினம்
பரவையினம் ஆதி யாவும்

பலவகை உறுப்பாக நகையினும் கனலுடைய
பரமன்ஒரு தலைவனாகத்
திரிபுரம் பொடியாக வருபெருந் தேரில்ஒரு
சிறுதேர் உருட்டி யருளே
சென்னையின் புகழனைய சரவணத் துற்றவா
சிறுதேர் உருட்டி யருளே. 93

**கயல்மீன்களின் வளம்**

பாலுடைக் கவரியின(ம்) முழுகிட அவற்றினது
பருமடியின் மீது முட்டிப்
பைங்கன் றெனக்குழைந்(து) அவைசொரிந் திடல்மிகப்
பருகிப் பருத்து வப்பால்
வாலுடற் குருகினந் தனைவெருட் டிக்கமுகில்
வாழையில் தாழை தன்னில்
மலிகுலை யறப்பாய்ந்து மின்னெனக் கோடரமும்
வாள்அரவும் அஞ்ச உன்னிச்
சாலு(ம்)முகி லைக்கிழித்(து) ஆதித்தன் மண்டலம்
தாண்டி இமகரன் வசிக்கும்
தலமும்விட் டுத்தனது பெயர்புனையும் உடுவினம்
தனைஉழக் கித்தி ரும்பும்
சேல்உலவு பெருவளச் சென்னைநக ராதிபா
சிறுதேர் உருட்டி யருளே
செம்பவள மலையெனச் சரவணத் துற்றவா
சிறுதேர் உருட்டி யருளே. 94

## வேறு

**தண்ணீர்ச் சிறப்பு**

கைந்நீ டியசெம் புகர்வனப்புக்
களிறு பொழியு(ம்) மதப்புனலும்
கதலிக் கனிமாங் கனிபலவின்
கனிஆ தியவிற் கசிதேனும்
மைந்நீங் கரிய விழிமகளிர்
வனச முலைப்பொற் புறுமுலையில்
மாறா திழியும் மணச்சேறும்
வாவிக் கமலம் மணிக்குவளை



மொய்ந்நீந் தலிற்சிந் தியநறவும்
மொழியும் இவைநேர் வனபிறவும்
முந்நீர்க் கடலின் புலவகற்றி
முகிலும் மலையும் மணம்கமழச்
செய்ந்நீர் திகழ்சென் னையிற்குமரா
சிறுதேர் உருட்டி யருள்வாயே
செவ்வேல் அணிந்த புயமுருகா
சிறுதேர் உருட்டி யருள்வாயே. 95

**சிறுதேர் உருள்வதால், இவையிவை உருளவேண்டுமெனல்**

வல்லார் உளத்திற் குறிஉருள
வாக்கில் இருமூன் றெழுத்துருள
மலர்மென் கரத்தில் மணியுருள
வானிற் கதிர்வெண் மதியுருளப்
பொல்லார் உடலம் களத்துருளப்
புலவர் மிடிநோய் புறத்துருளப்
பொன்னூர் அமரர் துயர்முழுதும்
புலைவாள் அவுணர் புரத்(து)உருளக்
கல்லா மனத்துக் கயவர்கொடும்
கண்ணீர் அருவி கரைந்துருளக்
காமர் முழுவெண் திருநீற்றோர்
களிக்கண் தரளம் கனிந்துருளச்
செல்லார் பொழிற்சென் னையிற்றலைவா
சிறுதேர் உருட்டி யருள்வாயே
செவ்வேள் அணிந்த புயமுருகா
சிறுதேர் உருட்டி யருள்வாயே. 96

**முருகன் போர்ச் செயலும், தன்னை யாண்ட கருணையும்**

வெய்ய சமரில் நவவீரர்
வெற்பில் மயங்க உருட்டும்ஒரு
வேழத் துதிக்கை முதல்உறுப்பு
வெவ்வே(று) உருள உருட்டிஅப்பால்
சையம் அனைய பெருஞ்சீயத்
தலையும் கரமும் உருட்டிஉடல்
தனையும் உருட்டித் தனிச்சூதம்
தறிபட் டுருள உருட்டிஒரு

பையல் பரவிப் பணிவானைப்
பட்சத் துடன்ஓர் மலைக்குவட்டிற்
பாற்றுக்(கு) உதவா வணம்உருட்டிப்
பரிந்தாண் டருளி உலகில்விடும்
செய்ய புகழோய்! சென்னைநகர்ச்
சிறுதேர் உருட்டி யருள்வாயே
செவ்வேள் அணிந்த புயமுருகா!
சிறுதேர் உருட்டி யருள்வாயே. 97

### வேறு - சந்தம்

**தனதன தனதன தன்னன தானா, தனத்த தனதானா**

இருள்படு மிடியிடை இன்னமும் நாயேம்
இளைத்து மறுகாதே
எமன்விட வருபடர் நின்னடி யார்பால்
எதிர்த்து மொழியாதே
கருணையில் வனசரர் அன்னவர், மேலோர்
கருத்தை இகழாதே
கடகரி நிகரொலி துன்னிய பாவார்
கலக்கம் அடையாதே
மருமலர் சொரிதரு கன்னல்வி(ல்) லானூர்
வழக்கு மலியாதே
மரகத மணிநிற மஞ்ஞையை நேர்வாள்
மகிழ்ச்சி யுறமேனாள்
ஒருபர சிவனருள் சண்முக நாதா
உருட்டு சிறுதேரே
உயர்புகழ் மருவிய சென்னைவி சாகா
உருட்டு சிறுதேரே. 98

**தந்தன தந்தன தன்னன தானா தனத்த தனதானா**

நம்பறி வின்றிய புன்மையர் தாமே
நடுக்கம் அடையாரோ
நன்றிய றிந்துனை எண்ணுநர் மேலாம்
நலத்தில் அமிழாரோ
கொம்பவிர் கின்றவை உண்ணவும் நாணார்
குதர்க்கம் அழியாதோ



கொன்றிடல் அஞ்சிய நன்னெறி சேர்வார்
குறித்து மகிழாரோ
செம்பது மங்கொளும் மின்னனை யாள்நீர்
திருத்த(ம்) மருவாதோ
செந்தமி ழின்சுவை மும்மையும் ஓர்வார்
தியக்க(ம்) மறையாதோ
உம்பர் தொழும்பத(ம்) மன்னிய வேலா
உருட்டு சிறுதேரே
ஒண்புகழ் தங்கிய சென்னைவி சாகா
உருட்டு சிறுதேரே. 99

**தனதய்யனத் தனதன்னனத் தனனாதனத் தனனா**

தெருள்நல்கும்உத் திரபொன்மயச் சிறுதேர்உருட் டுகவே!
சிவன்உள்ளு(ம்) மெய்ப்பத!பன் மணிச்சிறுதேர்உருட் டுகவே!
செருவல்லவர்க்(கு) எம!வன்மரச் சிறுதேர்உருட் டுகவே
சிகிமைகளிற்(று) இவர்தென்னமற் சிறுதேர்உருட் டுகவே
திருவெளவுபொற் பிடிஎண்ணநற் சிறுதேர்உருட் டுகவே
சிறுவள்ளியைத் தொழுமன்னவிற் சிறுதேர்உருட் டுகவே
தெருவைகுமத் தியநின்னெழிற் சிறுதேர்உருட் டுகவே
திறல்மல்குகைக் குக!சென்னையிற் சிறுதேர்உருட் டுகவே. 100

### வெண்பா

அந்தரரும் போற்றும் அணிச்சென்னை வாழவந்த
கந்தனது பிள்ளைக் கவிமுற்றும் - சிந்தனையிற்
கொண்டால் வினைப்பிணிபோம் கோடாது கோடிநலம்
உண்டாகும் நெஞ்சே உணர். 101

**சென்னை மாநகர்க் கந்தசுவாமி பிள்ளைத்தமிழ் முற்றிற்று.**

உ

# சேயூர் முருகன் பிள்ளைத்தமிழ்

அந்தகக்கவி
வீரராகவ முதலியார்

### விநாயகர் வணக்கம்

பேறாய கீரன்முற் பகருமுரு காறெனப்
பெருகாறு கண்டுமுலகிற்
பேரருண கிரிதிருப் புகழ்கண்டு நாணாது
பெறுமவத் துறுமாசையால்

ஏறாய வாகனக் கடவுடன் மைந்தனுக்
கெமதுசெய் கைக்கந்தனுக்
கிளமைவள மைப்பிள்ளை யங்கவிதை நூலெழுத
வென்கரத் தாமரைதொழும்

ஆறாயி ரத்துமுக முடையது சடைக்கா
டமைத்தநா யகன்வருவிலாம்
அந்தமா மேருவிற் பந்தவே தங்குறித்
தறிவியா தன்கூறுநாள்

நூறா யிரத்தின்மே லிருபதை யாயிரங்
கவிதைநூ லகலமுழுதும்
நுதிமருப் பாலெழுது மொருவா ரணத்தினிரு
நூபுரத் தாமரையுமே 1



## நூல்

## 1. காப்புப்பருவம்

### திருமால்

உலகமார் பலகோடி யுயிருமுயிர்த் துடையாள்
உபயமுலைத் தலையமுதி னொழுக்கருந்துங் குருந்தைத்
திலகமார் மகுடமிசைக் கடம்பலரு மரசைச்
செய்கைவளம் பதிதெய்வ சிகாமணியைப் புரக்க
இலகுமார் பகலமெலாங் கமலையிடைக் கொடுத்தும்
எழுந்துவிழும் பரிதிமதி யிருகைவிடா தெடுத்தும்
பலகமார் படிசுமந்த பாப்பமளிப் படுத்தும்
பாற்கடன்மேல் விழிவளருங் கார்க்கடன்மே னியனே. 2

### வன்மீகநாதர்

வேறு

பூநாறு பொற்பிற் கடம்பன் றனைப்புங் கவர்க்காகவே
போராடு சத்தித் தடங்கஞ் சனைப்புன் சொலைத்தீருமால்
பானாறு முத்தப் பரங்குன் றனைப்பண் டுமைத்தேவியார்
பால்வாய னைப்பச் சிளங்கந் தனைப்பண் பளித்தாளுமால்
கானாறு பக்கத்தி லெங்குங் குதிக்குங் கயற்பாவிலே
காவாயி ரத்துப் பசுங்கொம் புதிர்க்குங் கனிக்கோடிபாய்
தேனாறி ரைத்துக் குரம்புங் கரைக்குந் திரைப்பாலிசூழ்
சேயூர் தனிற்புற் றிடங்கொண் டிருக்குந் திருத் தாதையே. 3

### முத்துவாளியம்மையார்

வேறு

மகரமெறி கடல்சுவற விடுசத்தி வீரனை
வடவரையி னருவிபுரை வடவச்ர மார்பனை
மருவிலறு முகனைநறு மதுமிக்க நீபனை
மதுரையிறை யவர்பொருளை யளவிட்ட தூயனை

அகரமுத லெழுதலென வகிலத்து மூலனை
அனலிபெறு மனைவிதன தருமைக்கு மாரனை
அருணகிரி சொரிகவிதை யமுதத்தி னேயனை
அரன்மகனை யரிதன்மரு கனைநட்பி னாள்பவள்

நிகரசல வசலமக ணிருதப் புராதனி
நிமலையநு பவகமலை வனதுர்க்கை மாலினி
நிலவலய முழுதுயிரை நிருமித்த காமினி
நியமவறு சமயநெறி நிறுவிட்ட மாயினி

சிகரகிரி விலின்வலவர் தெரிசித்த மோகினி
சிவபாமை தருமையுமை திலதத்தி லானனி
திருபரிதி மதிமுளரி யொருமுக்க ணாயகி
திரையர்புரி வருகௌரி திருமுத்து வாளியே. 4

## கங்காதேவி

### வேறு

முதியதிரி புவன பதவி புதைதரப் போர்த்தவள்
முனிவர் முனிவினெரி சகரர் கதிபுகச் சேர்த்தவள்
முதல்வன்முதல்விகர வியர்விலொலிகெழப்பூத்தவள்
முழுகு மனைவரையு மொழுகும் வினையறத் தீர்த்தவள்

குதிகொ ளருவியிம கிரியின் மகளெனச் சீர்த்தவள்
குலவு சதமொருப திலகு முகமெடுத் தார்த்தவள்
குழகர் சடிலகுல மவுலி குடி கொளத் தாழ்த்தவள்
குமரி முதனதியி னரசி பதமெடுத் தேத்துதும்

விதியின் முடியுடைய விறல்கொ டறைசிறுத்தாக்கனை
வெளிறு முடுமகளி ரறுவர் முதுமறைத் தேக்கனை
விரியு முவரிமிசை வெயிலின் மயின்மிசைத் தோற்றனை
விமலர் செவியினொரு மொழியை மொழிபகர்த்
தேற்றனை

மதியை மதிதவழு மதுரை முதுதமிழ்க் கூட்டனை
வலிய தணிகைதனில் வளர்கு வளைமலர்ச் சூட்டனை
வழுவி லருணகிரி புகழு முதுதழிழ்த் தூக்கனை
வளவ நகரின்வட தெருவின் முருகனைக் காக்கவே. 5

## சித்திவிநாயகர்

### வேறு

மருவரு சுருப்பொலி கலித்ததார் நீபனை
வடபகி ரதிக்கொடி வளர்த்தவா காரனை



வரைபக வெடுத்தெறி தடக்கைவே லாளனை
மகிதல மிமைப்பினில் வளைத்துமீள் வீரனை

வெருவரு பணிக்குல மலைத்தபோர் மாவனை
விமலைதன் முலைக்குட மடுத்தபால் வாயனை
விபுதர்தொகு திச்சிறை யறுத்தபூ தேசனை
விதிபகை ஞனைத்தனி புரக்குமோர் காவலன்

இருவரை யொருத்தரென வைத்தகோ மான்மகன்
எழுகடன் மடுத்திடர் படுத்ததாண் மூடிகன்
இரணிய பொருப்பெழுதி யிட்டமா பாரதன்
இதுபவள வெற்பென வெறித்தநீண் மேனியன்

அருவரை யெடுத்தென வெடுத்தபான் மோதகன்
அவல்பயறு முப்பழமொ டப்பமா மோதகன்
அளகைகன கப்பதி நிகர்த்தசே யூரினில்
அவரவர் நினைத்தது முடித்தமால் யானையே. 6

## சரவணப்பொய்கை

### வேறு

ஆலைக்கே கரும்பொழியப் பொழிசாறு வழிதோ
றாறதிரும் வயற்செய்கை யாறுமுகத் தரசைப்
பாலைக்கே யடைகொடுத்து மொழிந்தபொய்யா மொழியைப்
பழிக்கு மொருதமிழ்க் குதலைப் பசுங்குருந்தைப் புரக்க

காலைக்கே மலர்க்கமலத் திடைக்கமல மாட்டிக்
கடும்பகற் கேபசித் ததெனக் கார்த்திகைப் பாலூட்டி
மாலைக்கே திரைக்கரத்தால் அம்புலியுங் காட்டி
வைகறைக் கேசுரும் போட்டி வளர்த்த சரவணமே. 7

## வேலாயுதம்

### வேறு

மருங்க டுத்தவர்ப ராவாய்
வணங்கு மெய்த்தவர்த யாவாய்
மகிழ்ந்த முக்கணர வாவாய்
வழங்கு முற்சுருதி வாழ்வாய்

ஒருங்கு கற்றவர்வி னாவாய்
உகங்க ளிற்பெரிய தேவாய்
உயர்ந்த மற்றெமது சேயூர்
உறைந்த பொற்குகனை யாள்வாய்

அருங்க டல்சுவறு தீயாய்
அகன்புவிக் குதவு தாயாய்
அகழ்ந்து வெற்புருவு கூராய்
அறந்த ழைத்தபழ வேராய்

இருங்கி ரிக்குமரி கூறாய்
இறைஞ்சு மப்பகைவர் பேறாய்
எழுங்க திர்ப்பரிதி போலாம்
இவன்றி ருக்கைவடி வேலே. 8

## வைரவக் கடவுள்

### வேறு

நிலைது றந்தவஞ் சகர கம்புகா
நிமலர் மைந்தனைக் கமலர்தோள்
நெரிப டத்தொடுத் தொருசி றைக்குள்வைப்
பவனை நீபமா லிகையனைத்

துலைது றந்தவண் டரள வாணகைத்
தோகை வள்ளிபொற் பாகனைத்
துய்ய செய்கையாள் பவனை யாள்பவன்
கையி னாககங் கணமொடுங்

கொலைது றந்தவித் தகர்வி ழிப்புலம்
குளிர ஞாளியந் திரளொடும்
குவல யப்பிதா வொருத லைக்கலத்
தொடுமி டித்துடிக் குரலொடும்

கலைது றந்தவத் திரும ருங்குடுத்
துடைய மேகலைக் கலையொடும்
கழல்சி லம்பொலித் திடவ ருந்தனிக்
கரிய கஞ்சுகக் கடவுளே. 9



## கார்த்திகைத் தாயர்

### வேறு

நாட்டுப் பிறையூர் வளநாட்டு
நயங்கூர் சேயூர் நறுங்கடம்பின்
ஏட்டுப் புயனைத் தினம்புரப்பார்
இவனுக் கமுதீந் தினிதிருப்பார்
ஆட்டுக் கொருகால் புகவகுப்பார்
ஆட்டுக் கருகா மருங்கணித்தா
மாட்டுக் கொருமுக் கால்கொடுப்பார்
வானத் துடுமா மடவாரே. 10

## பிரணவப்பொருள்

### வேறு

முறங்காது கடுத்தகடக் களிற்றயிரா வதத்தன்
முதற்பதவிக் குதவியென முளைத்ததெய்வ முளையை
மறங்காது வேலிலையிற் றழைத்தெழுகற் பகத்தை
வளவர்வளம் பதித்தோகை வாகனனைப் புரக்க
இறங்காத சடைமகுட மிறக்கியொரு செவிதாழ்த்
திருநாலா யிரமுகத்துக் கொருக்காலென் றிருக்கால்
உறங்காத வெண்கணனைச் சிறைவிடுக்க வுலகுக்
கொருபொருளா மவன்கேட்கு மோரெழுத்தின்
பொருளே. 11

## 2. செங்கீரைப்பருவம்

வேயாயி ரங்கோடி சூழ்கின்ற வெற்பெங்கும்
வீழ்கின்ற மேகத்துவாய்
வெள்ளம் பரந்துபல வுள்ளம் பெருஞ்சோலை
வேரித்த மாலந்திளைத்

தோயாது சாரற்க லங்கருவி யைப்புதைத்
தொளிர்வச்சி ரக்குவைசிதைத்
துழுவைமரை யிரலையரி வழுவைகர டிகள்வருடை
யொழுகச்சு மந்துவழிபோய்த்

தூயாறு மூன்றுமா முத்திப் பெருக்கைத்
துரக்கும் பெருக்கமிதெனச்

சுரிமுகத் திரையும்வெண் ணுரையுங் கரைப்புறந்
தோறும்பு ரண்டுபெருகும்

சேயாறு பாலாறு செறிதொண்டை வளநாட
செங்கீரை யாடியருளே
சேயூர வீராறு கேயூர புயவீர
செங்கீரை யாடியருளே. 12

இந்தூர் வரைக்குழா மொன்றொடொன் றெதிர்கின்ற
தென்னக் கலோலக்குலத்
தெதிருந் திமிங்கில திமிங்கில கிலங்கோடி
இகலிப்பொ ரப்போதலும்

கொந்தூர் துழாய்மவுலி முதன்மத் திடப்படு
குரைப்பெனப் பகிரண்டமாம்
கோளமும் பூச்சக்ர வாளமும் வெடிதரக்
குடிபோய் நிணச்சுறவெலாம்

நந்தூர் கரைக்கேற வகில்சந் தனப்பிளவும்
நக்கபவ ளக்குவாலும்
நகைநித்தி லத்தொகையு மிப்பியு மிதந்தோடு
நரலையிற் சீரலையின்வாய்ச்

செந்தூர திருவாவி னன்குடிப் பெயரூர
செங்கீரை யாடியருளே
சேயூர வீராறு கேயூர புயவீர
செங்கீரை யாடியருளே. 13

இலைக்கோடு சதகோடி கற்பகா டவியோ
டிணங்கிப்பி ணங்குமகிலாம்
ஈரப்பெ ருங்காடு மாரப்பெ ருங்காடும்
இவரும்ப னிச்சாரல்வாய்

அலைக்கோடு பொருவுந்தி திரியக்கி ராதர்தம்
மரிவையர்கு ழாம்விழிபுதைத்
தலமந்து திரிதரப் பலமந்தி பெருமரத்
தவயம்பு ரக்கவலமாக்

கலைக்கோடு மொருமுக் கடாசலக் கோடும்
கறங்கிறால் குத்தியவிழும்



கவிழுங் கொழுந்தாரை யாயிர முகங்கொடு
கடற்கிரும டங்குபொங்கிச்

சிலைக்கோ டிழிந்தோடு செங்கோடை யங்கடவுள்
செங்கீரை யாடியருளே
சேயூர வீராறு கேயூர புயவீர
செங்கீரை யாடியருளே. 14

பெருவாய் மகோததி யனைத்துந் திறப்பப்
பிறங்குக்ர வுஞ்சகிரியும்
பேரண்ட மும்புரி மகேந்திரப் புரிசையும்
பிளவுறா வெளிதிறப்பக்

கருவாயின் மேகத்து வாகனன் புதல்வனைக்
கடவுளோ ரைச்சிறையிடும்
காவலன் கூடங் கபாடந் திறப்பக்
கடைக்காலை வேலையெழுநாள்

பொருவா யகம்புகப் பரிகரித் தேவிதன்
புணர்முலையு மாறுமீனப்
பூவையர் படாமுலையு மமுதந் திறப்பப்
புனற்கொழுந் தொழுகுபவளத்

திருவாய் திறந்தழுங் குதலைமத லாய்வாழி
செங்கீரை யாடியருளே
சேயூர வீராறு கேயூர புயவீர
செங்கீரை யாடியருளே. 15

கறையடிக் கயமெட்டு மிதயந்தி டுக்கிடக்
கடலேழு மகடுகிழியக்
கதறிமே கம்பல கலங்கவுடு வுதிரவெங்
காரரா மவுலிசுழலத்

தறையடிப் பெயரவப் பாதலந் தெருமரச்
சக்ரபூ தரமுநெளியத்
தமரமூ தண்டக் கடாகங்க டப்பத்
தயித்தியர் தருக்கிரைதரப்

பிறையடிச் சிகழிகைச் சசிநா யகன்பதம்
பெறநிறக் கவிரநவிரப்

பேரழ கெழுஞ்சிர நிமிர்த்திரு பதத்துப்
பெரும்பா ருடைந்துபுடையச்
சிறையடித் திருள்கெடக் கூவுசே வற்கிறைவ
செங்கீரை யாடியருளே
சேயூர வீராறு கேயூர புயவீர
செங்கீரை யாடியருளே. 16

புவிக்கே யிடந்தந்த சடரத்து நாபிப்
புலத்தாம ரைத்தலைமகன்
புகழும் பழஞ்சுருதி திகழுந் தனிப்பரம்
பொருண்மாறு பட்டவளவில்
தவிக்கே பிடித்திடுஞ் சிறைவிடுத் தருள்கெனச்
சகலப்பெ ருந்தேவரும்
சரணம் புகப்புகப் பிரமன் கிளத்தவும்
தள்ளாத பொருளோதுநாள்
கவிக்கே தெரிக்கின்ற தமிழின் சுவைக்கே
கலைக்கே தமக்கிணையிலாக்
கடலே குடித்தோர் செவிக்கேயு மக்கடற்
கடுவே குடித்தோர்திருச்
செவிக்கேயு முமைமுலைப் பானாறு கனிவாய
செங்கீரை யாடியருளே
சேயூர வீராறு கேயூர புயவீர
செங்கீரை யாடியருளே. 17

அக்காட வோநச்ச ராவாட வோமிடற்
றாலங்கி டந்தாடவோ
ஆறாட வோமதிக் கூறாட வோதோட்டுக்
கூடிதிருச் செவிகடோறும்
நக்காட வோபுயக் கொன்றைநின் றாடவோ
நளினக்கை மலராடவோ
நவியாட வோநவி யங்கொதித் தாடவோ
நாலடித் துடியாடவோ
மிக்காட வோகொடு வரித்தோல் கரித்தோல்
விசைந்தாட வோநூபுரம்



வேதாள மொத்தெழுந் தாடவோ வறிகிலேன்
விண்ணாட மண்ணாடவெண்
டிக்காட வாதாடு புக்காடு வான்முருக
செங்கீரை யாடியருளே
சேயூர வீராறு கேயூர புயவீர
செங்கீரை யாடியருளே. 18

**வேறு**

கரைதோறும் வருவன கருநிற மேதிகள்
கண்டே விண்டோடக்
கடைசியர் கடையர்கண் மடையி னிலாம
லெங்கே னும்போதக்
குரைதொறு முழவெனு மதகுழி கோடிகள்
கம்பா யஞ்சாயக்
குழுமிய வறுபத ஞிமிறுகள் பாய்போ
தும்போ தம்போதித்
தரைதொறு மொளிவிடு சுடரவ னோடு
திண்டேர் திண்டாடச்
சகரர்கை தொடுமடு நிகர்மடு வாவி
யெண்கா தம்போதத்
திரைதொறு மெறிகயல் பொருதசெ யூரா
செங்கோ செங்கீரை
திரைசையர் தொழுதெழு கிரிசைகு மாரா
செங்கோ செங்கீரை. 19

குவைதரு துகிரொளி நிகரொளி மேவுங்
குன்றே குன்றேய்நங்
குழகர்த மடிநடை பழகி யுலாவுங்
கன்றே கன்றேயஞ்
சுவைதரு மழலையின் மொழிமறை நாறு
மெந்தா யெந்தாயென்
றொடுபரி புரவொலி செவிகலி தீர
வந்தாய் வந்தாய்பண்
டவைதரு முனிவரு மமரரும் வாழ
நின்றாய் நின்றாயென்

றகமனன் மெழுகென வுருகி விடாமன்
முன்போ டன்போடும்

சிவைதரு முலையமு தலையெறி வாயா
செங்கோ செங்கீரை
திரைசையர் தொழுதெழு கிரிசைகு மாரா
செங்கோ செங்கீரை. 20

கிளைபடு முடுகுல மொடுமுகில் போலு
மென்பூ வுங்காவும்
கிளிபல குயில்பல வளிபல பேடுட
னுங்கூ டுங்கூடும்

தளைபடு கழனியி லுழுநர்கை யார
வுந்தே ரும்பாறும்
சததள மலர்குவ ளைகண் மலர்கொடி
சங்கோ டுங்கோடும்

துளைபடு மதகுழி பொழிமுலை மேதியி
னம்பா லுஞ்சேலும்
சொரிமத களிறென வருமிள வாளைக
ளுஞ்சே ருஞ்சாருந்

திளைபடு வளமழ கொழுகுசெ யூரா
செங்கோ செங்கீரை
திரைசையர் தொழுதெழு கிரிசைகு மாரா
செங்கோ செங்கீரை. 21

## 3. தாலப்பருவம்

**வேறு**

மகரப் பரவைத் திரையிற் பாய்திரை
மானப் புனிதச்செவ்
வானீ ரிதழித் தேனீ ரலையின்
மலையப் பலகாலும்

உகரக் கனகக் கனகிங் கிணிநா
முரலத் தழுவுநிலா
முறுவற் செம்முக மாறினு மைம்முக
முத்தம் பெறுநேயா



சிகரத் திகிரிக் கிரியுந் திசையிற்
கிரியுஞ் சரியக்கார்
திரியப் பொருவோ ரிரியப் புவியும்
சேடர்ப டாடவியும்

தகரக் கடவுந் தகரே றுடையாய்
தாலோ தாலேலோ
சமர மயூரா குமர செயூரா
தாலோ தாலேலோ. 22

வாளுஞ் சங்கு மிளங்கொடி வள்ளையும்
வள்ளப் பவளமும்வால்
வளையுங் கிளையும் மிளைய குரும்பை
வடமும் படமுந்தூ

சாளுங் கொம்பு மரம்பையு மலவனும்
அம்புய முந்தலைநாள்
அன்பிற் கனலொறு மென்பிற் குதவி
யழைக்குங் கவிநாவாய்

தோளுந் தொங்கலு மாறிரு கரமும்
தொடியுஞ் சிறுமுறுவல்
சொரிகனி வாயுந் திருவரை வடமும்
தொடுகிங் கிணியொலியும்

தாளுந் தண்டையு மழகிய பெருமாள்
தாலோ தாலேலோ
சமர மயூரா குமர செயூரா
தாலோ தாலேலோ. 23

காலைத் துயிலைப் பெடையோ டொருவிக்
கடிமறு கிற்சிறகைக்
களுலக் காயிள வெயிலிற் கோதிக்
கழனித் தலைபகலே

பாலைக் கவுரி தரப்பரு கிப்புன
லாடிக் களியன்னம்
பனிமா லைச்சோ லைக்கிடை யடையும்
பாலித் திருநாடா

வாலைக் கமலத் தவரைப் பிரியா
வரிபிர மாதியரோ
டண்டமொ ராயிர கோடியு முண்டுண்
டாரவ ளர்க்குமறச்

சாலைத் தலைவி தவக்குல மணியே
தாலோ தாலேலோ
சமர மயூரா குமர செயூரா
தாலோ தாலேலோ. 24

பாயா றெனுமத் தொகுதிக் கிறைவிப்
பகிரதி செவ்விமுகப்
பனிமதி மண்டல மாயிர மிசையிற்
பசியகொ டிக்கமையாப்

போயா றடியுந் துவையா வனசப்
போதீ ராயிரமும்
பூவொடு பூவைத் தென்ன வழுத்தும்
பொலிதண் டைத்தாளா

தீயா றும்படி யேழ்கடன் மொண்டு
திரண்டெழு கொண்டலெனத்
தெள்ளமு தப்பெரு வெள்ள மடிக்கடி
திருமுலை யீராறாய்த்

தாயா றும்பொழி வாயா றுடையாய்
தாலோ தாலேலோ
சமர மயூரா குமர செயூரா
தாலோ தாலேலோ. 25

கைத்தடி கொண்டுறி பாற்குடி கொண்ட
கடம்புரை செய்துபுரைக்
கால்வழி யிற்பொழி பால்வழி யிற்கக
னத்துநி லாவழியே

கொத்தடி விண்ட மலர்க்குமு தத்திதழ்
போலிதழ் விண்டளவில்
கோவியர் கண்டிரு காவி சிவந்து
கொணர்ந்துரல் கட்டியநாள்



மத்தடி பட்டவர் தங்கை குயத்தினும்
வைகைந திக்கரைவாய்
மாறடி பட்டவர் வீறு புயத்தினும்
மாறிய டிக்கடி போய்த்

தத்தடி யிட்ட சதங்கை யடித்தல
தாலோ தாலேலோ
சமர மயூரா குமர செயூரா
தாலோ தாலேலோ. 26

**வேறு**

ஈர மனத்தவர் வாழ்வாய் நோவாய் வீழாமே
ஏம புரத்திரு வானா ரானா ரானாமே
தூர விடக்கட னீரோ டேசூ ரோடாமே
சோரி யுறப்பொரு வேலா தாலோ தாலேலோ
பார வயற்றுயி னாகூர் கால்வாய் பால்பாயப்
பாயெரு மைக்கதி யாலே மேலே சேலேபோய்
ஆர முழுக்கழி சூழ்சே யூரா தாலேலோ
ஆறு முகப்பெரு மானே தாலோ தாலேலோ. 27

சோலை வனக்கர னோடே தேர்கா லாளோடே
தோளெனும் வெற்பிரு பானா னானான்
மானானான்
வேலை யுரத்தெறி கோலே மாலே போலாவான்
மேன்மரு கப்பெரு வேலா தாலோ தாலேலோ
மாலை யெனத்திரி மீனா மீதே னானாமே
வாரி யலைத்தலை சாறே றாமே மாறாமே
ஆலை பலப்பல பாய்சே யூரா தாலேலோ
ஆறு முகப்பெரு மானே தாலோ தாலேலோ. 28

**வேறு**

வருண னுக்குலக நிகர்தரக் கமல
மலர்மடுத் தமடு மாநீர்போய்
வயல்புகப் புகுது கயல்களித் துகள
வயமருப் பெருமை காவூடே

கருண முக்கரட களிறெனச் சிதறு
கதிபடக் கதலி தேமாவீழ்
கனிகு வித்தபல குவைது வைத்தளறு
கமழு மிக்கபிறை யூர்நாடா

தருண முத்தமுலை மலைக டுத்தமதி
சயில புத்திரித னோர்பாலா
சலதி வட்டமுழு தலற நெட்டவுணர்
சமரில் விட்டெறியும் வேல்வீரா

அருண வப்பரிதி கிரண மொத்ததிரு
அழகு டைக்கடவுள் தாலேலோ
அறம்வ ளர்த்தருளு மிறைவி பொற்புதல்வன்
அறுமு கக்குரிசில் தாலேலோ. 29

மடையை முட்டுவன கரைநெ ருக்குவன
மழுவு ருக்குவன மாநீர்போய்
வயல்க லக்குவன கதிர்வ ணக்குவன
வளைது ரத்துவன தேனேசூழ்

தொடையை யெற்றுவன வளியெ ழுப்புவன
சுவைவி ழுத்துவன வானூடே
சுடர்வெ ருட்டுவன வெழிலி தத்துவன
துளியி றக்குவன கீழ்கால்வாய்

இடையை யெட்டுவன கமுக லக்குவன
எருமை மொத்துவன சேலேபாய்
இருபு றத்துவள மையுமி குத்தளகை
எனநி கர்த்தவொரு சேயூரா

அடையு மப்பரிதி கிரண மொத்ததிரு
அழகு டைக்கடவுள் தாலேலோ
அறம்வ ளர்த்தருளு மிறைவி பொற்புதல்வன்
அறுமு கக்குரிசில் தாலேலோ. 30

இமர விக்கிரண மெளநி லத்துமிடி
யிடிப டுத்துவெளி மீண்மினால்
எறிதி ரைத்திரளு மிருக ரைப்புரள
இளம ரப்பொழிலு மேயாமே



பமர வர்க்கமல கரிமு ழுக்கிவிழு
பலம லர்க்குவையு நீரோடே
படுக டற்பெரிய மடும டுத்துரக
படநெ ளித்தொழுகு பாலாறா

தமர நெட்டுவரி மகர மச்சமொடு
தடந திப்படுக ராறாயே
தவழு மிக்கசுரி முகமு கத்துவிடு
தரள வெக்கரிடு சேயூரா

அமரர் பொய்ச்சிறையு மவுணர் மெய்ப்பொறையும்
அறவ றுக்குமுனி தாலேலோ
அறம்வ ளர்த்தருளு மிறைவி பொற்புதல்வன்
அறுமு கக்குரிசில் தாலேலோ. 31

## 4. சப்பாணிப்பருவம்

பாரங்க மீரேழை யுஞ்சுமக் கின்றவப்
பணிராச ராசமகுடப்
பந்திபெய ரத்திசைத் தந்திபெய ரப்பருப்
பதகோடி கோடிபெயரச்

சூரங்க மாவடிப் பெயரவீ ரைந்துமா
ருதமுந்து ரந்துவீசச்
சுடராழி யும்பெயர வந்துபே ரமரரொடு
தொல்வரைக் கரசுபெயர

ஓரங்க மாயிரமு கப்பாணி தலைக்கொண்
டுலாவுதூ லப்பாணிதன்
உவகைக்கு மாரமுற் கரகபா ணிக்குமுடி
யுடையப் புடைக்கும்வீரா

சாரங்க பாணிதன் மருகசே யூர்முருக
சப்பாணி கொட்டியருளே
சத்தியே வற்பாணி குத்துசே வற்பாணி
சப்பாணி கொட்டியருளே. 32

வங்கக் கடற்சூழு மெழுதீ வையுந்தெய்வ
மாவின்க னிக்காவலாய்
வலம்வந்த செந்தா மரைப்புலத் தண்டையும்
வயிரச்ச தங்கைநிரையும்

திங்கட் கதிர்ப்பரிதி வெங்கதிர் வெருண்டண்ட
கூடந்தி டுக்கிடுமணித்
திருவரைக் கிங்கிணியு மொருபோது மாறாது
செய்கைநகர் வைகுமதலாய்

துங்கத் திருக்கூட லாடிறைவ னார்முனந்
துறைபெறச் சொற்றபொருளின்
தொன்மையுரையேழ்மழி னன்மையுரையீதெனும்
சோதனைக் குலகுகாணச்

சங்கத் தமிழ்ப்பலகை யேறுபுல மைத்தலைவ
சப்பாணி கொட்டியருளே
சத்தியே வற்பாணி குத்துசே வற்பாணி
சப்பாணி கொட்டியருளே. 33

பேழைத் திரட்கொண்ட வெண்டரள பந்தியைப்
பெய்யக் கவிழ்த்தபரிசிற்
பெருமுத்து குத்தவெண் சங்குநூ றாயிரம்
பின்பிடித் தொருவாளைபோய்க்

கூழைப் பிறைக்குவ்ளை சூடுமக் கடைசியர்
குழாங்கண்டு விண்டுவெருவக்
குழுமிக் கரைச்சென்று தவழத் துரக்கின்ற
கொள்ளைக் குளத்தருகெலாம்

வாழைக் குலைக்குலமு மஞ்சளிஞ் சிக்காடும்
மதுரக் கருப்படவியும்
வளவயற் சாலியும் வேலியுஞ் சதகோடி
மடியப் படிந்துசிதறத்

தாழைக் குலக்கனி கனிந்துசொரி சேயூர
சப்பாணி கொட்டியருளே
சத்தியே வற்பாணி குத்துசே வற்பாணி
சப்பாணி கொட்டியருளே. 34

நீளவட் டப்பரவை யோரேழை யுந்தனது
நிழலே கவிப்பவிருபால்
நீலக் கலாபம் பரப்பியிப் புவியெலாம்
நெளியநின் றகவிநேமி



வாளவட் டத்தையு மெட்டுநா கத்தையும்
மதநாக மோரெட்டையும்
வைக்கும் பணாமவுலி நாகமிரு நாலையும்
வாய்க்கொண்டு மூதண்டமாம்

கோளவட் டக்கிரண மாயிரமு முதுகிடக்
கொத்துமா ணிக்கமுதிரக்
கோபத்தொ டுதறியுஞ் சாபத்தொ டெழுகின்ற
கொண்டலைக் கண்டளவிலாத்

தாளவட் டத்தினடி மாயூர சேயூர
சப்பாணி கொட்டியருளே
சத்தியே வற்பாணி குத்துசே வற்பாணி
சப்பாணி கொட்டியருளே. 35

ஒப்பாரு மற்றகொற் றப்பரவர் பேதையர்
உவப்பினொரு வர்க்கொருவர்போய்
உவரிக் கரைத்தலைச் சிற்றிலை யிழைத்தந்தி
ஊருழைப் போதுபோதிற்

கப்பாரு முத்தரும் பியபுன்னை காள்கரும்
பனைகாண் மடற்கைதைகாள்
காணா தெமைத்தேடி னாலெங்கண் மகவுங்கள்
கையடைக் கலமாகையால்

மெய்ப்பாணி மஞ்சனமு மிடுமின்வெண்
ணீறிடுமின்
விழுநிலக் காப்புமிடுமின்
மெத்துமுத் தங்கொடுமின் வருகவென் றெதிருமின்
விரும்புமம் புலியையழைமின்

சப்பாணி கொட்டுமி னெனுஞ் செய்கை நகராளி
சப்பாணி கொட்டியருளே
சத்தியே வற்பாணி குத்துசே வற்பாணி
சப்பாணி கொட்டியருளே. 36

மதகோடி யாயிரங் கோடிசெஞ் சேல்புகுத
வயமருப் பெருமைக்குழாம்
வயலிற் கிடந்தனவு மாடவீ திக்கடைய
வரவிறா லைப்பொருதுபோய்

விதகோடி கண்டலை யலைக்கின்ற சேயூர
வெய்யகன லித்தேவனும்
வெண்ணிறக் கங்கையில் விடுத்தலுஞ் சரவண
மிசைச்சென்று வளர்கின்றநாள்

பதகோடி வேதங்கண் மணநாறு மாறுசெம்
பவளத்து ளாறுமீனப்
பணைமலைத் துணைமுலைப் பாலருவி பாயப்
பசுந்தாம ரைத்தொட்டில்வாய்ச்

சதகோடி பானுவொத் தழகெழத் துயில்குழவி
சப்பாணி கொட்டியருளே
சத்தியே வற்பாணி குத்துசே வற்பாணி
சப்பாணி கொட்டியருளே. 37

பௌவத் திறங்காத வைகைப் புனற்கும்
படுங்கனற் குங்கவுரியன்
பாதகக் கூனுக்கும் வெப்புக்கு மரசைப்
பதிக்கே பனைக்குமுனிவிற்

கௌவத் துரக்கின்ற வெவ்வரா வின்கொடுங்
கடுவுக்கு மக்கடுவினால்
காயத்து ளார்விடக் காயத்தை வெந்தழல்
காயவே மென்பினுக்கும்

தெய்வப் பெருஞ்சுருதி யடவியிற் கதவுக்கும்
நெறியிலாச் சிறுபுத்தனார்
திண்சிரத் திற்குமுமை திருமுலைப் பாலறாத்
திருவாய்ப் பசுந்தமிழினைச்

சைவத்தை யறிவித்த கவிவீர சேயூர
சப்பாணி கொட்டியருளே
சத்தியே வற்பாணி குத்துசே வற்பாணி
சப்பாணி கொட்டியருளே. 38

**வேறு**

முகடுகிழி வித்தமுத சிறுகுரல் செவிப்புகுது
முற்றரள மொத்தெழுநிலா
முறுவல்பொலி யக்குறுகு மறுவர்முலையிற்சுதகம்
முப்போதும் விட்டொழுகுபால்



அகடுநிமி ரப்பருகி யொருசரவ ணத்தமரு
மக்கால முக்கணுடையார்
அமலையை யெடுத்தியென மலைமக
ளெடுத்துவளர்
அத்தாவ ருத்தியரசே

பகடுகண் மருப்பொடிய வடமதுரை யிற்பொருது
பற்றாத றப்பொருதுநேர்
பணைமருதறப்பொருது துணைபெறுபிறைக்குநிகர்
பற்பேயி னைப்பொருதுவோர்

சகடுபொரு சிற்றிடையன் மருகமுரு கக்கடவுள்
சப்பாணி கொட்டியருளே
தவளமதி யக்கவிகை வளவநக ரிக்குமர
சப்பாணி கொட்டியருளே. 39

மகரசல திப்படியின் மலரடி நினைப்பவர்
மனத்தாம ரைப்பரிதியே
மறமகள் விழிக்குவளை கயமகள் விழிக்குவளை
மைப்போதி னுக்குநிலவே

நிகரவச லப்புதல்வி முகிழ்முலை முகட்டிடு
நிறத்தரவ டத்தரளமே
நிருதரென நெட்டுலகு பொருதுகவ ரத்திகிரி
நெருப்பாறு வித்தபுயலே

சிகரகிரி விற்கைகொடு திரிபுரமெ ரித்தவர்
திருக்கூடு விட்டசுடரே
திகிரியன் வயக்குலிச னிரணிய கருப்பனிவர்
செப்பார ணத்துமுதலே

சகரமடு வைக்கனலு சுடர்விடு மயிற்கடவுள்
சப்பாணி கொட்டியருளே
தவளமதி யக்கவிகை வளவநக ரிக்குமர
சப்பாணி கொட்டியருளே. 40

வளைபடு கடற்புவியி னுயிர்படு பிறப்பொழி
வழிக்காக வைத்ததுணையே
மதுரமுரு கக்கவிதை மகிழ்தரு திருப்புகழ்
மலர்க்கே மணத்தமணமே

திளைபடு தமிழ்ச்சுவையி னிருபதம் வழுத்திய
திறப்பா வலர்க்குநிதியே
திசைமுகனை யெற்றியவன் மகனையடிமைக்கொடு
செவிக்கே தெளித்தபொருளே

களைபடு துயர்ப்புணரி யினுமமர ரைக்கனக
கரைக்கேற விட்டகலமே
கயிலையர சற்கரசி பகிரதி யிவர்க்கினிய
கட்டாம ரைக்குண்மணியே

தளைபடு கடப்பமல ரளிகுல முழக்குபுய
சப்பாணி கொட்டியருளே
தவளமதி யக்கவிகை வளவநக ரிக்குமர
சப்பாணி கொட்டியருளே. 41

## 5. முத்தப்பருவம்

நத்துக் கொத்துத் திங்கட் கொத்து
நகுந்தள வுக்கொத்து
நற்கீ ரத்துக் கொத்துக் குந்த
நறுந்தா திற்போதிற்

கொத்துக் கொத்துப் பொலிவாள் கொழுநற்
கொத்தும் பைந்துளவக்
கோவிற் கொத்துக் குலிசற் கொத்துக்
குலவுந் திருவுருவாய்ச்

சித்துக் கொத்துப் பத்துத் திக்கும்
செறியவி ருள்பொதுளத்
திண்சூ தத்துக் கொத்துப் பொருவோன்
சிதறப் பொரும்வீரா

முத்துக் கொத்துப் பத்திக் கனிவாய்
முத்தந் தந்தருளே
முருகா செய்கை முராரிதன் மருகா
முத்தந் தந்தருளே. 42

வித்தே வித்தும் பழனத் தளையின்
வெள்ளிக் குறுமுளையின்
வெண்சிறை யன்ன மிதிக்குந் தோறும்
வெருண்டெழ வாணர்குழாம்



பத்தே யெட்டே யொருகைக் கேனும்
பணில மெடுத்தெறியப்
பால்வெண் டரள மேல்விண் டுதிரும்
பாலித் திருநாடா

அத்தே வர்க்குந் தொன்முனி வர்க்கும்
அனந்தற் கும்புவனத்
தட்ட திசைக்கா வலவர்க் கும்வே
றசல சலத்திற்கும்

முத்தே வர்க்குந் தேவன் புதல்வா
முத்தந் தந்தருளே
முருகா செய்கை முராரிதன் மருகா
முத்தந் தந்தருளே. 43

பாவாய் குதலைக் குயிலே மழலைப்
பசலை மடக்கிளியே
பவளக் கொடியே தவளத் தரளப்
பணியே கண்மணியே

பூவா யெனவந் திமயத் தரசன்
புகழத் திகழுமிளம்
புதல்விக் கருமைப் புதல்வா பெருமைப்
புவனத் தொருமுதல்வா

தேவா திபனே கருணா லயனே
சிவனே யத்தவனே
சேயே சுருதித் தாயே தமிழின்
திருவே யொருபோதும்

மூவா முதலே மூவிரு முகனே
முத்தந் தந்தருளே
முருகா செய்கை முராரிதன் மருகா
முத்தந் தந்தருளே. 44

கொற்றத் துழவர் புயத்தி லுழத்தியர்
கொங்கைக் குவடுபொரக்
கூடிக் கூடிப் புலவிக் கலவிக்
குலாவி யுறங்குதலும்

நிற்றம் புலரி யெழுப்பியழைக்கும்
நீர்நிறை யோடையினும்
நீலத் தகழி யினுங்கரை யேறி
நிலாவெண் சங்கமெலாம்

சுற்றப் புரியின் புரிசையும் வீதித்
தொகுதியு மாவணமும்
தொடுகா வணமும் பிறங்கிட் டாங்கவர்
தோரண மணிவாயின்

முற்றத் ததிருந் தொண்டைநன் னாடா
முத்தந் தந்தருளே
முருகா செய்கை முராரிதன் மருகா
முத்தந் தந்தருளே. 45

**வேறு**

நவக்குஞ் சரமே செறிவனத்து
நறிய முருக்கே பசுங்காந்தள்
நனைத்தண் போதே மாதளையே
நாறுங் குமுதச் சீரிதழே

உவக்குங் கொடித்தா மரைத்தோடே
உருவத் திலவே பருவத்தால்
உடலம் பழுத்த வீர்விழியே
ஒழியாக் கொவ்வைக் கொழுங்கனியே

நிவக்கும் பொருப்பி லசோகம்மே
நிறக்குங் குலிகக் குழம்பழகே
நெறிசெம் பவளத் தொளியேயென்
றிவைக ளனைத்து நிரைத்தொன்றாய்ச்

சிவக்கும் படியே சிவப்பொழுகும்
திருவாய் முத்தந் தருவாயே
செய்கைக் கரசே மயிற்கரசே
திருவாய் முத்தந் தருவாயே. 46

எஞ்சா முகிற்கு ளிரண்டுமுகில்
எறிதேன் கடலும் பாற்கடலும்
இருபக் கமும்போய் முகந்துமுகந்
திறைப்ப நறைப்பைந் துழாய்மௌலிப்



பஞ்சா யுதனென் றொருகேழல்
உழும்பே ரண்டப் பழனத்துப்
பழைய வேதச் சுவையைவிதைக்
கரும்பா யமைத்துப் பணைத்தெழலும்

விஞ்சா ரமுதப் பிறைவாட்கொண்
டிறையோ னறுப்ப வெடுத்துவட
மேருச் செக்கூ டிருநான்கு
கரியால் வெய்யோன் றிருப்பவிழும்

செஞ்சா றிழைத்த தெனுமழலைத்
திருவாய் முத்தந் தருவாயே
செய்கைக் கரசே மயிற்கரசே
திருவாய் முத்தந் தருவாயே. 47

காம்பான் மலரப் படுங்கடவுட்
கமல மிரண்டென் றதிசயிப்பக்
கஞலுந் தடந்தோ ளுடன்கடகக்
கரத்தா லிருமுத் திருமேனி

ஆம்பா லகரா முனைப்புனைப்பூ
ணாகத் தெடுத்தாங் கொருகுழவி
யாகத் தழுவி யவளுங்கை
யடங்கா வகையோ ரொழுகியநாள்

பாம்பா லனைய வணைத்துயிலும்
பரஞ்சோ தியைவிட் டிங்குமொரு
பசும்பாற் கடலோ கிடப்பதெனப்
பனிமா லிமயத் துமைமுலைக்கண்

தீம்பான் மணக்குஞ் சரவணத்தாய்
திருவாய் முத்தந் தருவாயே
செய்கைக் கரசே மயிற்கரசே
திருவாய் முத்தந் தருவாயே. 48

மருவாய் வனசத் திறையவனைச்
சிறையுட் பிணித்த பருவத்தே
மகரக் கடலே ழுடுத்தபெரும்
புவனக் குருவாய் வருவார்க்கும்

குருவா யம்பொற் செவிதாழ்த்துக்
குடிலை யுரைக்கும் படியுரைத்த
கொற்றங் கேட்டெம் பெருமாட்டி
நித்தங் களிக்குங் குலவிளக்கே

அருவாய் மதனைப் பொருவார்க்கும்
அறியாப் பொருளை யறிவித்த
அமிர்தப் பவள மிதுவோவென்
றருகே தனது முகநீட்டித்

திருவாய் முத்தந் தருவாட்குத்
திருவாய் முத்தந் தருவாயே
செய்கைக் கரசே மயிற்கரசே
திருவாய் முத்தந் தருவாயே. 49

**வேறு**

பூமாவின் மனையனைய கனைகடலி லளறுபடு
புலவினொடு பயில்வனவு முத்தமோ
போராட வுபயவிட வரவமவை தொடரவுடல்
புலருமதி பொதிவனவு முத்தமோ

வாமாயி தெனவமரர் பதிமருவு முகிலிடியின்
மடுவிலெரி பொரிவனவு முத்தமோ
மாறாத வஞ்சரண ஞிமிறுகளின் முளரிநறு
மலரின்மிதி படுவனவு முத்தமோ

ஆமாவி னவனையொரு குழவியென வுமிழ்கழையின்
அடவியனல் சுடுவனவு முத்தமோ
ஆனாது மருவினவ ரெவரெனினு மவருயிரை
அடுகரியில் வருவனவு முத்தமோ

தேமாவி னொருகனியை நுகரநிலம் வலம்வருகை
செயுமெனது குகதருக முத்தமே
சேயூர வரிமருக கிரிவனிதை தருமுருக
திரிபதகை சுததருக முத்தமே. 50

பூவாதி யுலகடைய வடையுமிரு ளுடையவொளி
பொழியுமரு கமலமலர் வத்திரா
போகாத திருவதிக மருவுமக பதிபுகுத
புகலுமிள நிலவுசொரி சத்திரா



கோவாதி விடைவலவர் படைமழுவின் வலவர்கிரி
குமரியொரு தலைவரவர் புத்திரா
கோடாத வறநெறியி னறுவகைமை லிபியை நவில்
குணநிபுண ரருணகிரி மித்திரா

மாவாதி யதிகதியி னிரதவித மிககரட
மதவுததி விகடமத மத்தமா
மாறாத வனிகமுட னவுணர்கட லெதிரவதிர்
மறிகடலி னடுவுமொரு முத்தமா

தேவாதி பதிகுமர னமரரிவர் பலருமுறை
சிறையைவிடு துரைதருக முத்தமே
சேயூர வரிமருக கிரிவனிதை தருமுருக
திரிபதகை சுததருக முத்தமே. 51

## 6. வருகைப்பருவம்

மிக்கே ருழும்பொற் பகடடித்தும்
கயலைத் தடிந்துங் குருகடர்ந்தும்
வேலிப் புறத்து வெறுத்துவெறுத்
தெறியக் கிடந்த சதகோடி

இக்கே நெரித்துஞ் சுரிமுகங்கள்
எருமைக் கருந்தாட் படவுடைந்தும்
எய்ப்பாய் வாளைக் கமுகலைத்தும்
இலைப்பூங் கமுகான் மதியலைத்தும்

தொக்கே மழையப் பொழில்கழித்தும்
சுரும்பாற் கமலக் களைகளைந்தும்
சுடருஞ் செந்நெற் காடறுத்தும்
சொரியச் சொரியக் கடையர்குழாம்

செக்கே தாளக் குவைகுவைக்கும்
செய்கைப் பெருமாள் வருகவே
செவ்வேற் பெருமாள் மயிற்பெருமாள்
தெய்வப் பெருமாள் வருகவே. 52

பம்பிற் கழியே செழியவித்திப்
பாயும் புனலு மெனக்கொணர்ந்து
பகடுங் கொழுவுந் தொடராமே
பலபுள் விலங்கும் படராமே

அமபொற் களையுங் களையாமே
அருங்கண் டகத்தால் வளையாமே
அலைக்குங் குறும்பொன் றிலாவுலகில்
அரசன் பரிசில் கரவாமே

உம்பர்ப் புயல்வேட் டுழலாமே
உமண ரமைத்த வுப்பினமும்
உழவர் விளைப்ப விளைசெந்நெற்
குவையும் வெள்ளி யொளிக்கிரியும்

செம்பொற் கிரியு மெனப்புரஞ்சூழ்
செய்கைப் பெருமாள் வருகவே
செவ்வேற் பெருமாள் மயிற்பெருமாள்
தெய்வப் பெருமாள் வருகவே. 53

பரியாற் கரடக் கடகரியால்
பார்க்குந் தரனா விளையாடும்
பருவச் சிறார்சிற் றடிப்பொடியும்
பசும்பொற் றொடியார் பலகோடி

பிரியாத் தெருவிற் சொரிசுண்ணம்
பிறங்குந் துகளு மகிற்புகையும்
பெருங்கா ரகிலா வியுங்கரும்பிற்
பிழிந்த பொழிசா றடுங்குய்யும்

அரியாற் குயிலப் பயின்மாடத்
தாடுந் துவசக் குலத்துகிலும்
அண்டத் தளவும் பிறபொதுளி
அமரா வதிக்கொத் திரவுபகல்

தெரியாப் பெரிய வளங்கிளரும்
செய்கைப் பெருமாள் வருகவே
செவ்வேற் பெருமாள் மயிற்பெருமாள்
தெய்வப் பெருமாள் வருகவே. 54

ஆணிக் கனகத் தொருதிகிரி
அருக்கன் பெருந்தேர்ப் பசுங்குதிரை
அலங்குங் கூல மயிர்க்கற்றை
அடவித் தழையென் றுடல்வெருண்டு



வேணிப் புரமே பறந்தெழுந்து
விழுந்தே னீகண் டருகணைந்து
வெவ்வா னரங்க ளிறால்பொதுத்துத்
தாமும் பருகி மிகுந்ததெலாம்

பாணித் துணையிற் கதலிமடற்
படுத்துப் பிணவுக் குணவிடுத்துப்
பசிக்குங் குருளை கொளக்கொடுத்துப்
பசிய பலாக்காய் மிசையுறங்கும்

சேணிற் புயலிற் கரங்கழுவும்
செய்கைப் பெருமாள் வருகவே
செவ்வேற் பெருமாள் மயிற்பெருமாள்
தெய்வப் பெருமாள் வருகவே. 55

நிறையோ டரிக்கண் மடமாதர்
நீலக் கமலத் தடங்குடைய
நெகிழ்ந்தே விழும்பூண் மாணிக்கம்
நீருட் கனுலக் கனியென்னத்

துறையோ டகலாக் கயல்கவரத்
திரியும் சிரலுங் குருகினமும்
தொகும்போ தாவு மிருந்தாராத்
தொகையுந் திகைத்துக் கரைபுகலும்

பிறையோ முகிலிற் புகுவதெனப் பெடையும்
பார்ப்பும் புடையணைத்துப்
பேரண் டமுங்கொண் டரவிந்தந்
துரந்து சுரும்பு பறந்தார்ப்பச்

சிறையோ திமம்போய்ப் பொழில்புகுதுஞ்
செய்கைப் பெருமாள் வருகவே
செவ்வேற் பெருமாள் மயிற்பெருமாள்
தெய்வப் பெருமாள் வருகவே. 56

பரம்பிற் குமுறுங் கடற்படுவிற்
பரவ ரிழைத்த கழைத்தூண்டிற்
படுமுட் கயிறு வயிறுபுகப்
பதைத்து வெடிபோய்ப் பரியசுறா

நிரம்பிப் பெருகும் பெருங்கழிக்குள்
விழுந்தே நிமிர்ந்து வயற்கேறி
நீலக் கயத்து ளிழிந்துகயக்
கரையிற் பயிரா நீங்காத

கரும்பிற் கரிய நிழல்புனற்கே
கண்டே வெருண்டத் தூண்டிலெனக்
கலங்கித் திசைநான் கினுமோடிப்
பிறிதோ ரிடமுங் காணாது

திரும்பிப் பழைய வழிக்கேகும்
செய்கைப் பெருமாள் வருகவே
செவ்வேற் பெருமாள் மயிற்பெருமாள்
தெய்வப் பெருமாள் வருகவே. 57

கன்னற் குலமும் பலபொதும்பிற்
கறங்கு மிறாலும் பிறங்கியமுக்
கனியும் பொழிந்த கொழுஞ்சாறும்
கழனி மடுப்பக் கழனிபடும்

பன்னெற் கதிரும் பசுந்தாளும்
பசுந்தாண் மேய்ந்த பான்மேதிப்
பைம்புற் கொளுவுங் கடைவாயும்
பருவத் தரிந்த பிறையிரும்பும்

முன்னற் கரிய பெரும்போரும்
அப்போர் விளைத்த மள்ளர்கையும்
முதிரும் வருக்கைச் சுளையழித்துக்
குவித்த களம்போன் முதன்மொழிந்த

செந்நெற் களமு மளியலம்பும்
செய்கைப் பெருமாள் வருகவே
செவ்வேற் பெருமாள் மயிற்பெருமாள்
தெய்வப் பெருமாள் வருகவே. 58

**வேறு**

குரைகழ லடியை யடியவ ரிருகை
கொடுதொழு துருக வருகவே
குவலய முழுது மலமற வறிவு
குணநெறி பெருக வருகவே



அரைவட மணியு மணிபரி புரமும்
அலைகள் பெருக வருகவே
அவுணர்த முயிரு முதிரமு மறலி
அலகைகள் பருக வருகவே

வரைமுக டிடிய மழையுடல் கிழிய
வரிமுது குரக நெளியமேன்
மகிதல மதிர வுடுகுல முதிர
வலம்வரு பரிதி யிரியவேழ்

திரைகட லகடு தெருமர முருக
சிறைமயி லிறைவ வருகவே
தெரிதமிழ் வளவ னகரியின் முருக
திருமகள் மருக வருகவே. 59

பதறிய கலப மறநெறி யுலவை
படவட குவடு மிடையவேழ்
படுகட னடுவு கிழிதர வுரக
படமுடி யிடிசெய் துலவுவாய்

உதறிய வருண மணிகண கிரண
உலகிருள் கடிய முடியவே
றுழிதரு மயிலின் மரகத துரகம்
உகையறு முகவ வருகவே

கதறிய விரலை கடகரி வருடை
கவிமரை கரடி யிடறிவீழ்
களபமொ டகிலு மடியற நெடிய
கழைபொழி தரள முருளநீர்

சிதறிய வருவி யொழுகிய பழனி
திகழ்மலை முதல்வ வருகவே
தெரிதமிழ் வளவ னகரியின் முருக
திருமகள் மருக வருகவே. 60

கரிபுரம் வெளிறு மகபதி ககன
கனபதி புகுத வெகினனார்
கருதுற வரிய வுபநிட வறிவு
கலையறி குறிய நறியநீள்

பரிபுர மழலை யிருபத விமலை
பணைமுலை யமுத மொழுகவோர்
புகிரதி நயன பதுமமு மிதய
பதுமமு மலர வருகவே

அரிபுர நிகரு முகிலிடி வயிறும்
அறைபட விடியு மலறவே
அலைகடல் பலவு மகிலமு முடுக
அடுபகை பொதுளி யிருளமா

திரிபுர மெரிய வொருவிசை முறுவல்
செயுமவன் மதலை வருகவே
தெரிதமிழ் வளவ னகரியின் முருக
திருமகள் மருக வருகவே. 61

## 7. அம்புலிப்பருவம்

வீதிப் படுஞ்சக்ர வாளமு மிவன்றோகை
வெம்பரிச் செண்டுவெளிகாண்
விடநாக பாதாள மிவனப் பரிக்கிடும்
வெங்கவள சாலையேகாண்

மோதிப் பொரும்பெருங் கடலேழு மிவன்வேல்
முனைக்கே யடக்குபுனல்காண்
முடியா யிரத்துவட மேருவு மிவன்கரையின்
முன்கட்ட நட்டதறிகாண்

சோதித் திசாமுகக் கிரியடங் கலுமிவன்
தொடுகையிற் பம்பரங்காண்
சுரராச ருஞ்சுரரு மிவனேவ லைத்தலைச்
சூடும்ப டைச்சேனைகாண்

ஆதித்த லோகமிவ னாறிரு மதாணிகாண்
அம்புலீ யாடவாவே
அயில்வனச் செய்கையின் மயில்வனக் கந்தனுடன்
அம்புலீ யாடவாவே. 62



இரணிய கருப்பன்வீ டென்றென்று முன்னையே
யிகழ்ந்தழைக் குங்கொடுமைபார்த்
திக்குற்ற மெண்ணிப் பிறர்குற்ற மேபோல
ஏறுமவ னைச்சீறினான்

தரணியை யொழித்துனக் குறவா யிருக்கின்ற
தன்மையிற் கருணை பொங்கித்
தணிகையங் குவளையிற் போதுமுப் போதினுந்
தன்புயத் தேபுனைந்தான்

முரணிய வரக்கர்க் கிடந்தந்த தானாலும்
முதலுன் பிறப்பதனினான்
மோதுசீ ரலைவாயின் மீதிருந் தருளினான்
மூவர்க்கு மொருதலைவனே

அரணிய வெறுப்பாக நீவெறுப் பாவையே
அம்புலீ யாடவாவே
அயில்வனச் செய்கையின் மயில்வனக்கந்தனுடன்
அம்புலீ யாடவாவே. 63

பூதலப் பகிரண்ட மாதலத் துள்ளார்
புறத்துளா ரெத்தேவரும்
புகுமினென் றிவன்விளித் தருளினா லமையும்
புகாதிருப் பாருமுளரோ

ஓதலிற் கதிரவன் வக்கிரன் நின்சுதன்
ஒருகுருப் புகர்மந்தனாம்
ஓராறு கோளினையு நின்போ லழைந்தழைத்
துவகையிற் பெருகினானோ

காதலிற் சடையிடைக் கங்கையில் வளர்ந்தே
தவழ்ந்தெழுங் குழவிநீயும்
கங்கையில் வளர்ந்தே தவழ்ந்தெழுங் குழவியிக்
கருணா லயக்குரிசிலும்

ஆதலிற் றுணைதனக் காமெனக் கருதினான்
அம்புலீ யாடவாவே
அயில்வனச் செய்கையின் மயில்வனக்கந்தனுடன்
அம்புலீ யாடவாவே. 64

மதனான மைத்துனன் கவிகையா யுந்தனது
மாமற்கி ருக்கையாயும்
மாறாத தன்பிதா மகுடச் சுடர்ச்சிகா
மணியாயு நயனமாயும்

இதநாக நகரா ரெனுந்தம் பதாதியர்க்
கிடுமன்ன சாலையாயும்
இந்த்ராணி யென்கின்ற தன்மாமி பெயருமுன்
பெயராயு மிதுவன்றியும்

முதனாரி வள்ளியைப் பெற்றதாய் வடிவமுன்
வடிவின்மு யக்கமாயும்
முழுதுமிப் படிபடைத் திருவருக் குந்தொன்று
தொட்டுமுன் பெருமைபிரியா

அதனா லழைத்தன னலதுனை யழைப்பனோ
அம்புலீ யாடவாவே
அயில்வனச் செய்கையின் மயில்வனக்கந்தனுடன்
அம்புலீ யாடவாவே. 65

ஊழியிற் கடவுளா மிவனடைக் குஞ்சிறை
யுறைந்தவன் மெய்க்கூறுநீ
உலகத் திவன்கொடிக் கூவலுக் கேவெறுப்
போடொளித் தோடுமவனீ

சூழியிற் கரியுரித் தேவர்தந் தேவிசெந்
துகிலிடைக் கிடைபுகாமுன்
தொட்டிலிவ னுக்கிடுந் தாமரைப் போதொடும்
தொன்மாறு பட்டவனுநீ

பாழியத் திரிமக னீயவன் றம்பிகா
சிபன்மகன் பாரசூரன்
பகையெனக் கருதினுங் கருதுவ னினநீ
பலகாலு தித்துவளரும்

ஆழியைப் பொருகினும் பொருவனிங் கிவனுடன்
அம்புலீ யாடவாவே
அயில்வனச் செய்கையின் மயில்வனக்கந்தனுடன்
அம்புலீ யாடவாவே. 66



தேயவும் பெருகவுந் தேவருன் கலைகளைத்
தினமுமோ ரொருவராகச்
சிதறிப் பறித்துண்ப தறிவையே யவரெலாம்
செவ்வேள்பெ ருஞ்சேனைகாண்

தூயவிங் கிவனிடத் தெய்தினா லமையுமச்
சுரருங்க வர்ந்திடார்காண்
தோகைவா கனமொன் றிருத்தலா லரவுனைத்
தொடவும் பயப்படுங்காண்

மாயவன் மருகனுக் கன்பெனக் கிரிமத்தின்
வைத்துனைப் புனைகிலன்காண்
மதலைக்கு நேயமென மதலையந் தாமனடி
மலர்கொண்ட ரைக்கிலன்காண்

ஆயநின் பகைபுகா வரணிவன் சரணிவன்
அம்புலீ யாடவாவே
அயில்வனச் செய்கையின் மயில்வனக்கந்தனுடன்
அம்புலீ யாடவாவே. 67

நெஞ்சா லுகந்துகந் தினிதழைத் தால்வராய்
நீயவன் றிருவுளத்தே
நிமிரும் பெருங்கோபம் வந்தா லிவன்றோகை
நீலக்க லாபத்தினான்

மஞ்சார் பொருப்பெலா மாருதப் பூளையாய்
வானமுந் தூளின்மறையும்
வடமேரு வுஞ்சேவ லின்கூவ லால்விழும்
வனசத் திருக்கைவேலால்

விஞ்சாழி யேழுங் கனல்கொண்டு புகைமண்டி
வேறிடத் தோடினாலும்
வீரவா குத்தலைவர் முதலாம் பதாதியர்
விடுத்திடா ராகலினுனக்

கஞ்சா தொளித்திடப் பிறிதிடங் கண்டிலேன்
அம்புலீ யாடவாவே
அயில்வனச் செய்கையின் மயில்வனக்கந்தனுடன்
அம்புலீ யாடவாவே. 68

கூடன்மே லைப்பரங் குன்றகத் தொருமுழைக்
கொண்டுபோய்ப் பண்டுசங்கக்
குலமுதற் கலைவாண னைக்கரந் திடுபூத
மிடுகையிற் கூறுமாற்றுப்

பாடலா முருகுகேட் டம்முழை திறந்துவிட்
டருளிய பரம்பொருளிவன்
படவரா வென்னுமப் பூதம் வளைத்துவெம்
பகுவாய் முழைக்குளிடுநாள்

நாடெலா முன்னையுங் கலைவாண னென்கின்ற
நாமத்தின் வரிசையதனால்
நளினத் திருக்கைவே லாயுதம் விடுத்தேனும்
ஞாலமே முஞ்சூழவந்

தாடலா டும்பரி விடுத்தேனும் விடுவிப்பன்
அம்புலீ யாடவாவே
அயில்வனச் செய்கையின் மயில்வனக்கந்தனுடன்
அம்புலீ யாடவாவே. 69

மையோத வாரிதித் திரையிற் பிறந்தனன்
வளவன் கழுக்குன்றனு
மாறாது நீயுமத் திரையிற் பிறந்தனை
வளவன் கழுக்குன்றனைச்

செய்யோ னெனப்புண் ணியம்புரிந் தகளங்க
னாதலிற் செவ்வேலவன்
செஞ்சிலம் பிற்சீற டித்தாம ரைப்போது
சேவிக்க வாழ்வித்தனன்

துய்யோ னலாமற்க ளங்கனா கிக்குருத்
தோகைபொற் கொங்கைபுணரும்
தொல்பெருந் தீவினை நினைந்துனைச் சேராது
தூரவிட் டானெனவுனக்

கையோ விகழ்ச்சிவரு மக்குறை யெலாந்தீர
அம்புலீ யாடவாவே
அயில்வனச் செய்கையின் மயில்வனக்கந்தனுடன்
அம்புலீ யாடவாவே. 70



தவிராத வெவ்வினை தவிர்க்கு முருகாறும்
தரித்தா றெழுத்தோதலாம்
சந்நிதிக் கருணகிரி நாதன் திருப்புகழ்ச்
சந்தம் புகழ்ந்துய்யலாம்

புவிராசன் வளவன் கழுக்குன்றன் வளமைபுரி
புண்ணியந் தரிசிக்கலாம்
பொருஞ்சூ ரனைப்பொருங் கதைமுதற் கந்தப்
புராணக் கடல்காணலாம்

கவிராச னிப்பிரான் மிசைச்செய்த திருவுலாக்
கவிவெள்ளை கற்றுருகலாம்
கவிவீர ராகவன் சொற்றபிள் ளைக்கவி
கலம்பகக் கவிவினவலாம்

அவிராட கக்கோயில் புக்குவிளை யாடலாம்
அம்புலீ யாடவாவே
அயில்வனச் செய்கையின் மயில்வனக்கந்தனுடன்
அம்புலீ யாடவாவே. 71

## 8. சிறுபறைப்பருவம்

பூநா றுவரிற் பெரிய பரப்பிற்
புதியம திக்கதிரே
பொங்குஞ் செங்கதி ரிற்சொரி கின்றது
போலப் பொய்கையின்வாய்

மீனா றுதவும் புத்தமு தத்தின்
வெள்ளரு வித்திரளே
மீதிற் பொழியப் பொழியப் பருகி
விழிதுயி லும்புதல்வா

வானா றளவுங் கிளருங் கமுகினும்
வளரும்வ ருக்கையினும்
வாழை வனத்துந் தாழை வனத்தும்
மாவினும் விட்டவிறால்

தேனா றொழுகுஞ் செய்கைப் பெருமாள்
சிறுபறை கொட்டுகவே
செந்திற் பெருமாள் கந்தப் பெருமாள்
சிறுபறை கொட்டுகவே. 72

பையிற் சுடிகைக் கொடுநா கேசன்
பாதா ளத்தளவும்
படுமா ழித்தே ரிற்பெரு மதகிற்
பகுத்த புனற்பாயும்

தொய்யிற் பழனப் பவளச் சாலித்
தொகுதிக் கதிர்வானச்
சோதிக் கதிரின் மோதித் தகையும்
தொண்டைத் திருநாடா

மையிற் சொரியக் கிரியிற் பாலி
வழிந்தா ழியின்மட்டும்
வாளைக ளெதிரப் பாளைகளுதிரும்
மடற்கமு காடவியும்

செய்யிற் புகுதுஞ் செய்கைப் பெருமாள்
சிறுபறை கொட்டுகவே
செந்திற் பெருமாள் கந்தப் பெருமாள்
சிறுபறை கொட்டுகவே. 73

கனையிற் கயமுங் கயமேல் வளருங்
கமலம லர்க்காடும்
கழுநீர் மடுவு மப்பெரு மடுவின்
காலும்ப லகாலும்

நனையிற் குமுதப் புனலும் புனலே
நாலுமி கக்கிடையும்
நாகிள மேதி முலைப்பால் வழியும்
நறுங்குழி யுங்கழியும்

முனையுப் பளமு மளத்தரு கெங்கணும்
மொய்த்தெழு கானிழலும்
முன்னும் பின்னு மினத்தொரு கோடிகள்
முரலவ லம்புரிபோய்

சினைமுத் துமிழுஞ் செய்கைப் பெருமாள்
சிறுபறை கொட்டுகவே
செந்திற் பெருமாள் கந்தப் பெருமாள்
சிறுபறை கொட்டுகவே. 74



வேறு

காழியர் நகரிற் கவுணியர் மரபிற்
காதல னாகிமலைக்
கன்னி முலைத்தலை யுண்ட முதத்தைக்
களையு மரும்பொருளே

தாழியில் வளருங் குவளைப் போதொரு
முப்போ துந்தானும்
தணிகைக் கிரிபுக் கணியுங் களிறே
சதுர்ம றையின்பேறே

ஆழியு முலகு மெடுக்குஞ் சுடிகை
அராவைப் பொருதுகிழித்
தாடுந் தோகையு மாயிர கிரணத்
தருணன் வரக்கூவும்

கோழியு மெழுதுங் கொடியுடை வேளே
கொட்டுக சிறுபறையே
குகனே செய்கையின் மூவிரு முகனே
கொட்டுக சிறுபறையே. 75

சென்று கராவின் தொகுதி துரப்பச்
செழுநீர் நாய்தொடரச்
சிதறிச் சிதறிப் பதறிப் பதறிச்
செறுவிற் கரையேறும்

துன்று வராலுக் குடலம் வெருண்டு
துவண்டோ திமசாலம்
சோலைக் கிடைபுக் கடையும் பழனத்
தொண்டைத் திருநாடா

கன்று விடாமற் பிடியுங் களிறும்
திரியுங் கனசாரல்
காய்வயி ரத்தொகு தித்திரள் பெருகக்
கதிரின் பரிபருகும்

குன்றுதொ றாடுங் குமர பிரானே
கொட்டுக சிறுபறையே
குகனே செய்கையின் மூவிரு முகனே
கொட்டுக சிறுபறையே. 76

பங்கக் கமலத் தவனைக் கமலப்
பதத்தளை களைகவெனப்
பரிதித் திகிரிக் குலிசப் பாணிப்
பண்ணவ ரிருவருமத்

துங்கத் தவருஞ் சுரரும் பிறரும்
சொல்லும் வணக்கமொடும்
தொழுத கரத்தொடும் வந்து நெருங்கும்
தொல்கோ புரமுடையாய்

சிங்கக் குருளைத் திரளே களபத்
திரளைக் குருகுகொளத்
தேடித் தேடித் திரியும் பிடியும்
திண்களி றுங்களிறும்

கொங்கப் பழனிக் கொலிமலை முதலே
கொட்டுக சிறுபறையே
குகனே செய்கையின் மூவிரு முகனே
கொட்டுக சிறுபறையே. 77

## வேறு

முதலைகவ ரக்களிறு முதலென நினைக்குமவன்
முதுமகள் விருப்பவழகா
முனிமொழி வழிக்குருகு பெயர்கொடு
கிடக்குமொரு
முகடுதொடு வெற்பழநிலா

மதலைமொள லிக்கரிய கருவிட மிடத்துணியும்
மறிகடல் விடுத்தழுவுவார்
வயரதவி தத்துரக சலதியவு ணத்தொகுதி
மரபொடு துடித்தழுவரோ

குதலையமு தச்சுவைக ளறுவர்மக ரச்செவிகள்
குடிகொள வழைத்தமுதுநீர்
குரைசரவ ணத்தருகு கவுரிதழு வித்தனது
கொடியிடையில் வைப்பவனையாள்

திதலைமுலை தத்தருவி பருகியமு மெய்க்குழவி
சிறுபறை முழக்கியருளே



திருவளவர் பொற்பதியில் வருகுளவ சத்திதர
சிறுபறை முழக்கியருளே. 78

நறியபல விற்பெரிய முடவடி வெடுத்தகனி
நவையற நிறைத்தசுளையோ
நகைமதி முதற்பரிதி தகைபடு மடற்கதலி
நனிபல பலித்தபழமோ

முறியவை சிவப்பொழுகு மழகியன கொக்குவன
முதுகிளை கிளைத்தபழமோ
முகடுதொடு மக்கடலி னெரியநெறி சைக்குளழி
முகிலென வொழுக்குபுனலோ

உறியமுது துய்க்குமவ னிருகையிலு மத்துழல
உததியி னுதித்தசுதையோ
உபநிடம றைப்பசுவின் முலைமடி சுரப்படைய
உலகிடை துளித்ததுளியோ

சிறியமழ லைச்சுவையி தெனமல ரிதழ்ச்சிறுவ
சிறுபறை முழக்கியருளே
திருவளவர் பொற்பதியில் வருகுளவ சத்திதர
சிறுபறை முழக்கியருளே. 79

புகைவிடு சுடர்க்கனலி தலைவிமடி புக்கமுது
பொழிமுலை யலைத்தகைகொடே
பொருதிரை குரைத்தொழுகு பகிரதி யுரப்பவெழு
புதுமதி யழைத்தகைகொடே

முகைவிழு மடற்பொதுளு முளரியிடு தொட்டிலினின்
முரலளி விலக்குகைகொடே
முதலறு வரைப்பருகி விமலையுட லைத்தழுவி
முடிமல ரெடுத்தகைகொடே

நகைவிடு முடிச்சுரரை வெருவன்மி னெனக்கருணை
நயனமொ டமைத்தகைகொடே
நளினனும் விளக்கரிய பொருளையறை யக்குறியின்
நடுகுழை யிழைத்தகைகொடே

சிகைவிடு கதிர்க்கடவுள் வரவறி கொடிக்கடவுள்
சிறுபறை முழக்கியருளே

திருவளவர் பொற்பதியில் வருகுளவ சத்திதர
சிறுபறை முழக்கியருளே. 80

உரைவிரி திருப்புகழை விழுமியவர் முப்பொழுதும்
ஒலிகெழ முழக்கவழுவா
உபநிட முதற்சுருதி கருதியமு னிக்குழுவும்
ஒழிவற முழக்கமுழுதே

தரைவிரி வினைத்துரிசு தனையற வறுக்குமுகில்
தருமமு முழக்கவெதிரே
தமதுசிறை யைத்தடியு மதிகவிர லைப்பகைவர்
தகுதியின் முழக்கவருகே

நிரைவிரி தமக்குறவி னறுவர்தவ சித்தியென
நிழலொடு முழக்கநெடிதே
நிருதருதி ரப்புணரி பருகலை நினைத்தவகை
நிறைகுல முழக்கமுறையே

திரைவிரி கடற்குரிய மருகமுரு கக்கடவுள்
சிறுபறை முழக்கியருளே
திருவளவர் பொற்பதியில் வருகுளவ சத்திதர
சிறுபறை முழக்கியருளே. 81

## 9. சிற்றிற்பருவம்

கோவே கொவ்வைச் செழும்பவளக்
கொழுந்தே குறவர் பசுங்கிளியும்
குலிச னளித்த விளங்குயிலும்
குனிக்கு மயிலுந் தனித்தகலாக்

காவே வேதப் பெருங்கடலே
கடலிற் கடையாக் கவுத்துவமே
கங்கைப் புனலால் வளர்ந்தெழுந்த
கரும்பின் சுவையே சுரும்பிமிராப்

பூவே பூவில் வருந்தேனே
பொருங்கோ ளரியே யரியபரம்
பொருளே யுலகுக் கொருபொருளாம்
அவற்கும் விளங்காப் பொருள்விளக்கும்



தேவே தேவக் குலமுதலே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
சேயே சேயூர்ப் பெருமானே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 82

கானே கமழும் கடம்பவிழ்தார்க்
கடவுட் கரசே சுரலோகம்
காக்குந் துணையே யவுணர்குலம்
களையுங் களிறே யிளையசிறு

மானே யுலகுக் கொருதிருத்தாய்
மகவே மகரா லயங்காயும்
வடவா முகமே யறுமுகமா
மதிய முதித்த வானகமே

தானே யுவமை தனக்கலது
பிறிதொன் றில்லாத் தனிப்பொருளே
தருமப் பொருளே யெழுத்தாறும்
தரித்தா ரிதயத் தாமரைச்செந்

தேனே தெவிட்டாத் தெள்ளமுதே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
சேயே சேயூர்ப் பெருமானே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 83

மருவிற் பசுமைத் துளவோனும்
வனசத் தவனுங் காணாத
வடிவிற் சோதி மடிப்புறத்தே
மலருந் திருத்தா மரையலவோ

உருவிற் புவனஞ் சதகோடி
உதரத் துமிழ்ந்த பெருமாட்டி
உரமுந் தனமுங் கரமுமறந்
துறையாச் சிறுபங் கயமலவோ

தருவிற் பெரியார் சிரமனைத்தும்
தரிக்குங் கமலக் குலமலவோ
சதுமா மறையின் றலைப்பூத்த
தண்டைப் புதுமுண் டகமலவோ

தெருவிற் பொடியும் புகத்தகுமோ
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
சேயே சேயூர்ப் பெருமானே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 84

உதயா தவற்கு மிமகரற்கும்
ஒழியாப் பதமு மழைவண்ணத்
தொருவன் புரந்த மாளிகையும்
உம்பர்க் கரசன் பீடிகையும்

சுதையா தரிக்குஞ் சுரர்வீடும்
உடுவி னிருப்பும் பெருமுனிவர்
சுருதி கிளைக்குந் திருமனையும்
சோரா வுரகப் பேரகமும்

மதயா னையினெண் டிசைப்பாலர்
மணியா லயமும் விஞ்சையர்கள்
வயங்குங் கோயில் பலப்பலவும்
மக்கட் குடியும் புக்கவுணர்

சிதையா துதித்த பிரானன்றோ
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
சேயே சேயூர்ப் பெருமானே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 85

உருமே கடுக்குந் திருவரைநாண்
உடுக்கு மணிக்கிங் கிணிநாவிட்
டொருசற் றொலித்தாற் பகிரண்ட
கூடந் திடுக்கிட் டுடையாதோ

மருவே திகழுஞ் செங்கமல
மலர்ச்சீ றடியிற் சிறுசதங்கை
வாய்விட் டரற்றிற் கடலேழும்
வாய்விட் டரற்றி மறுகாதோ

குருமே தகைய கடகமுங்கைத்
தொடியுங் கறங்கிற் புவனமெலாம்
கோலி வளைக்கும் பலகோடிக்
குவடும் பிதிர்பட் டுதிராதோ



திருமே னிகுழைந் திடநடந்து
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
சேயே சேயூர்ப் பெருமானே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 86

சுற்றின் முழங்குங் கடலேழும்
உலையாய்ச் சுடுதீ வடவனலாய்த்
தொல்லைத் திகிரிக் கிரியடுப்பாய்ச்
சுடர்மா மேரு கடமேயாய்

முற்றில் பிடித்துக் கொழித்தெடுக்கும்
வல்சி முகட்டி லுடுக்குலமாய்
முதிருங் கதிரே திருவிளக்காய்
முகிலூர் தியினான் மூதூரும்

பற்றில் வகுத்த பேரளகைப்
பதியும் பசும்பொன் னறையேயாய்ப்
பணிப்பா தலஞ்செம் மணிப்பேழைப்
படியா யடையும் பகிரண்டஞ்

சிற்றி லிழைப்பா டன்மகனே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
சேயே சேயூர்ப் பெருமானே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 87

நகைத்தண் டரளத் திரளரிசி
நறுந்தே னுலையுங் கவிழாதோ
நந்தின் கடமு முடையாதோ
நளிமா துளைத்தீ யவியாதோ

தொகைத்தண் பவள விளக்கணைந்து
விடாதோ வடியேம் வதுவையெனச்
சொல்லிச் சொல்லிக் கொணர்ந்தசிறார்
விருந்தும் வருந்திச் சோராதோ

முகைப்புண் டரிக முரம்பிணிந்து
முலையென் றறிந்து னிடத்திரங்கி
மொழிந்து துயிற்று மணற்குழந்தை
முழுத்தா மரைக்கண் விழித்துமனம்

திகைப்புண் டழுது தேம்பாதோ
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
சேயே சேயூர்ப் பெருமானே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 88

வெய்யோன் பகலை யிரவாக்கும்
விரகிற் பெரிய நின்மாமன்
மேனாட் பொதுவ ரகம்புகுந்து
வெண்பா லுறியி னடுக்குழிப்பக்

கையோ ரிரண்டும் பிணித்திலரோ
குடவர் மடவார் சகங்காக்கும்
கடவு ளெனத்தான் பயந்தனரோ
கட்டா தகல விட்டனரோ

ஐயோ புலந்து தமியேமும்
அன்னை மார்க்குஞ் செவிலியர்க்கும்
அழுது மொழிந்தாற் சீறாரோ
அனைத்து மொருவ னாகிநிற்கும்

செய்யோன் மகனென் றஞ்சுவரோ
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
சேயே சேயூர்ப் பெருமானே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 89

உவந்து தமியேன் முகக்கமலத்
தொளிவா டுகைக்கு நின்றிருத்தாள்
ஓரா யிரக்காற் பணிந்துபணிந்
தொழியா திரக்கு மொழியினுக்கும்

கவந்த நடிக்கு மவுணர்செருக்
களத்தே செருக்கு முனதுதகர்
கடவு ளினத்தின் கொடுமருப்பால்
கலங்கு நிலைக்குங் கழுநீராய்

நிவந்த கருங்கண் சொரிந்தெமது
நிறமுங் கறுத்த கண்ணீர்க்கும்
நிலாநித் திலமும் வயிரமுமே
கொழித்துக் கொழித்து நிலத்திழைத்துச்



சிவந்த விரற்கு மிரங்காயோ
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
சேயே சேயூர்ப் பெருமானே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 90

எழுத்தாய் நிகரு மிருகரங்கள்
வருந்தி வருந்தி யமன்முதலோர்
இயற்றும் பெருஞ்சூர் மாளிகையோ
இருங்கோ ளரிமா முகனகமோ

முழுத்தா ரகன்றன் சீரகமோ
முதிருங் கதிரா யிரத்தினையும்
முனிந்தோன் முரசும் பேரிகையும்
முழங்கி யெழும்பொற் கோயில்லோ

முழுத்தா மரைக்கை மணிமிடற்றான்
மகரச் செவியுட் பகருமொரு
வழுவாப் பொருளை யறியாது
மயங்கித் தியங்கிச் சிறையுறைந்தான்

செழுத்தா மரைப்பூஞ் சிற்றில்லோ
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
சேயே சேயூர்ப் பெருமானே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 91

## 10. சிறுதேர்ப்பருவம்

வாடை யடிப்பொடு தென்கரை யந்த
வசந்த னடிப்பொடுபின்
வடகரை கொண்டன் மடங்கு மடிப்பொடு
மேல்கரை மண்டியங்கக்

கோடை யடிப்பொடு கீழ்கரை மோதி
அலைந்த சலஞ்சலமும்
கோல வலம்புரி யும்பல கோடி
குழாமோ டிக்குடி போய்ப்

பேடை யனத்திரள் சேவ லெனத்தனி
பின்பு தொடர்ந்துசெலப்
பேரக ழிக்குழி யாழ விழுந்து
பெருங்கா லுக்குழலும்

ஓடை யிடத்தை விடுத்த செயூரா
உருட்டுக சிறுதேரே
உலகை வலம்புரி கலப மயூரா
உருட்டுக சிறுதேரே. 92

துப்பள வுங்கட லைச்சுடு தொன்மை
பறிந்தழு தக்கடலும்
சூழ விழுந்து தொழுந்தொழில் போல
எழுந்தம திச்சுடரே

வெப்பள வுங்கை மழுப்படை யாளர்
அழைத்தன ரன்னவர்சேய்
மெய்ப்பதி சேரின் வராதன வந்தது
போலவி திப்பெயரோன்

தப்பள வில்லை விடுத்தி யெனத்தன
தன்னமி னத்தொடுபோய்த்
தால மறைப்ப விரித்த சிறைக்கொடு
தாழ்வது போலவகுத்

துப்பள மெங்கு நிரப்பு செயூரா
உருட்டுக சிறுதேரே
உலகை வலம்புரி கலப மயூரா
உருட்டுக சிறுதேரே. 93

பச்சிம திக்குண திக்கு வடக்கொடு
தெற்குவி ளங்காமே
பரிதியு மிந்துவும் வழிவில கிப்பல
காலுமி யங்குதிருக்

கச்சிந கர்க்கரு கிற்பெரு கிக்கவு
ரிக்கண மாதர்வரும்
கம்பை நதிக்கரை மாவடி வைகிய
கங்கைந திப்புதல்வா

நச்சிய ளிக்குல மொய்த்த மலர்க்கம
லத்துந டுப்படுவீ
நாகிள வாளை களித்து களித்து
நறும்பா ளைக்கமுகத்



துச்சிகு தித்திழி கின்ற செயூரா
உருட்டுக சிறுதேரே
உலகை வலம்புரி கலப மயூரா
உருட்டுக சிறுதேரே. 94

**வேறு**

மாவைத் தனிக்கவிகை யெனவைத்த கம்பற்கும்
அருணவரு ணாசலற்கும்
வக்கிரே சற்குமக் காளத்தி யீசற்கும்
மயிலையங் கத்தையொருபூம்

பாவைத் திறந்தந்த நாதற்கு மொற்றியூர்ப்
பகவற்கு மாதிநடன
பதிவடா டவியற்கும் வேதபுரி யற்குமே
பரம்பரம சூரவற்கும்

கோவைப் பெருஞ்சுருதி நந்திருத் திரர்கோடி
கோதில்சம் பாதியபயன்
குலிசன்மால் கமலனார் முதல்வர்நா லிருவர்மெய்
கொண்டமார்க் கண்டன்முதலோர்

சேவைக் கழுக்குன்ற வாணற்கு மொருமைந்த
சிறுதே ருருட்டியருளே
செய்கையாய்சரவணப் பொய்கையாய்தோகையாய்
சிறுதே ருருட்டியருளே. 95

நீறெழக் கனகக் கிரவுஞ்சங் கடந்தோடி
நிலம்வெதும் பக்கடலெலாம்
நிமிடமுற் சுடுவித்து மக்கடற் குழியேழும்
நிருதர்குரு திக்கடலினால்

மாறெழப் பழையமடு விற்பெரு மடுக்கண்டு
மாசூரை வேரறுத்தும்
வடமே ருவைச்சூழ வந்துமெதிர் காணாது
வாயிரக் கமையாது போய்க்

கூறெழக் கனசக்ர வாளம் பிளந்துமக்
கோபமா றாதுமீதிற்
கொண்டலை யெரித்தண்ட கூடந்தி ரித்தண்ட
கூடப் புறப்புனலையும்

சேறெழப் பருகித் திரும்புங்கை வடிவேல
சிறுதே ருருட்டியருளே
செய்கையாய்சரவணப் பொய்கையாய்தோகையாய்
சிறுதே ருருட்டியருளே. 96

வைவத் துரந்தாடு முரகக்கு லேசன்மகன்
மகனாகு மொருதொண்டைமான்
வாரிதித் திரைநல்கு மன்னன் பெரும்பேர்
வரம்பெற்ற வொற்றிகொண்டான்

சைவத் தவப்பயனை யொத்தவன் வழிவந்த
தனையன் கழுக்குன்றனாம்
தக்க செம்பியவளவன் வந்துனக்காலயம்
சகலமும் தந்ததற்பின்

பௌவத் தலத்தெழு சகாத்தமோ ராயிரத்
தொருநாலு நூற்றின்மேலும்
பயிலுநாற் பத்துமூ வருடமாம் விடுவருட
மகரம்ப குத்ததிருநாள்

தெய்வத் திருத்தே ருருட்டியது போலவிச்
சிறுதே ருருட்டியருளே
செய்கையாய்சரவணப் பொய்கையாய்தோகையாய்
சிறுதே ருருட்டியருளே. 97

மருத்தோய் சுருப்பொலி கலித்தகற் பகமாலை
மவுலித் தலைத்தேவரும்
மாதவர் களுஞ்சிறை புக்கடிக் கடிமுன்
முறையிட்ட பொழுதுமுழுதும்

பெருத்தேர் துரக்கும் பிரானே வலிற்கைலை
பிரிதந்து தென்புலம்போய்ப்
பேரிட்ட சூரனைப் பாரிடத் தானைப்
பெருங்கடற் கொண்டுபொருநாள்

குருத்தேர் மதிக்கின்ற கோட்டுமல கோட்டுடைக்
குருகின் பெயர்க்குன்றமும்
குவலயத் தாழியுந் தூளெழப் பத்துமா
ருதமுமுட் கோல்கடாவும்



திருத்தே ருருட்டியது கண்டிலார் காணவிச்
சிறுதே ருருட்டியருளே
செய்கையாய்சரவணப் பொய்கையாய்தோகையாய்
சிறுதே ருருட்டியருளே. 98

துய்யசெங் கோடையும் பழனியுந் தணிகையுஞ்
சுற்றிய விடைக்கழியுமுற்
சொல்லிய விராலியுஞ் சிகரமுஞ் சகரர்கைத்
தொடுகடற் சூழுமீழத்

தையதென் கதிர்காம மென்னுமலை முதலாய
தாகத் திருப்புகழெனா
அருணகிரி நாதன்பு கழ்ந்தபல மாலையும்
அறிவருள மிக்கதமிழால்

வையக மதிக்கும் பரங்குன்றமுஞ் செந்தில்
வந்தசீ ரலைவாயுநீர்
வளவயற் றிருவாவி னன்குடியு மேரகமும்
மருவுகுன் றுதொறாடலும்

செய்ய பழமுதிர் சோலைமலையு நிலையாயவா
சிறுதே ருருட்டியருளே
செய்கையாய்சரவணப் பொய்கையாய்தோகையாய்
சிறுதே ருருட்டியருளே. 99

**வேறு**

வீடாம ரப்பெரிய கோடாட முப்பொழுதும்
வீழ்மாம் பழத்தினமுதோ
வீறாலு யிர்க்குலமி றாலாமி னத்தைமன
விழைவோ டலைத்தமழையோ

ஓடாவ யப்பகடு கோடாயி ரத்தினடி
யொழியா தொழுக்குமதமோ
ஓராயி ரத்துறையி னாராத் னைக்குறவர்
ஒழியா வளக்குருதியோ

நாடாவி கற்பவினை யாடாமு கத்தினிய
நறுநாக முற்றநறவோ
நானாவி தத்தருவி தானாமெ னப்பரவி
நதிகோடி யிற்பொருதுபாய்

## திக்குப் பாலகர்

வேறு

கொம்பன நுண்ணிடை மங்கையர் நுண்டுகில்
கொண்டவ ணீத்திடுவான்
கொண்டல் வணன்பல கண்கொடு நின்று
குறும்பொடு பார்த்திடல்போ

லம்புய மலரு மருந்தட மெங்கணு
மங்கனை மார்குடையு
மந்தண லருணையின் வந்தருள் கந்தனை
யன்பொடு காத்திடுவார்

பம்புறு செங்கதி ரங்கி ஞமன்னிரு
தன்பகர் தெண்கடலோன்
பங்கமி றண்வளி சந்திர னெந்தை
பதம்பெறு புங்கவனென்

றிம்பரொ டும்ப ரிருந்தவர் நெஞ்சி
னியைந்து பணிந்திடவே
யெங்கணு நின்றவர் நன்கு புரந்திடு
மெண்டிசைக் காவலரே.

## திருமகள் கலைமகள் எழுவர் வல்லியர்

வேறு

செல்லாத சொல்லையுஞ் செல்லச் செலுத்தியச்
சிறியரைப் பெரியராக்குந்
திருமகளை யுங்கல்வி தருமகளை யுந்திரி
புரம்பொடி படுத்தவள்கடல்

கல்லா லடைத்தவள் வடிவேல் விடுத்தவள்
கற்பகா டவியிருந்தாள்
கபாலத்த னூலின ளெயிற்றினுமு தாளெழுவர்
கன்னியரை யும்பன்னுவா

மொல்லாது செங்கதி ரொளிப்பவுயர் வுற்றிரு
ளொருங்குவாள் விழிபுதைப்ப
வூடலின் மடவார் பரிந்தசெம் மணிபரிதி
யொள்ளொளியின் மீக்கூர்தலா



லல்லார் கரும்பொழுது மெல்லார் பெரும்பொழுது
மணிமாட வீதிநிகழு
மருணை நகர் தழையவரு தருணவறு முகமகவை
யண்மியன் பொடுகாக்கவே. 10

## முப்பத்து முக்கோடி தேவர்

வேறு

விசிக்கும் வள் ளூறுவார் முழவினைக் கூத்தர்
விறலியர் நடிப்பமுன் னேந்தும்
விதியினின் வருக்கைப் பருங்கனி கரிய
விரல்படு கைகளான் மிசைத்தாய்

முசுக்கலை பறிப்பப் பிணாமகிழ் கொண்டு
முன்னுறக் குதிக்கும்வண் பொழில்சூழ்
மொழிபுக ழருணைக் கொழிதமிழ்க் கடவுண்
முருகனை யினிதளித் திடுவார்

பசுக்களி னெய்பா லவிசொரிந் தவனிப்
பண்ணவர் பண்ணுறும் வேள்வி
பலவுடன் மகிழ்ந்து நலனருள் விண்ணிற்
பண்ணவ ராகிநண் ணுநராம்

வசுக்களோ ரெண்மர் மருத்துவ ரிருவர்
மன்னுருத் திரர்பதி னொருவர்
வளரொளி யருக்கர் பன்னிரு வர்களா
வைத்தமுப் பத்துமூ வருமே. 11

## 2. செங்கீரைப் பருவம்

அருணிலை படைத்தவுமை யம்மைநீ ராட்டிநீ
றள்ளியிட் டார்ந்தசுண்ண
மட்டிநற் றிலகமிட் டணிபல திருத்திமெய்க்
காலத்தி சுற்றியார்க்கு

மிருணிலை படைத்தமல மகலவரு ஞானவமு
தேற்றுப் புகட்டிநின்வா
யினிதூறு தேறறன் மடிநனைப் பக்கொண்
டிருத்திமுத் தாடியியல்சொற்

பொருணிலை படைப்பநன் மரகதத் தொட்டிலொளி
பொங்கக் கிடத்தியம்பொற்
புரிவட மசைத்துநின் றரிதுதா லாட்டவப்
பொருவிலிசை கேட்டுமகிழ்கூர்

தெருணிலை படைத்தொளிரு மருணைவளர் முருகவேள்
செங்கீரை யாடியருளே
திங்களுக் குதவுசடை யங்கணற் கொருபுதல்வ
செங்கீரை யாடியருளே 12

பார்கொண்ட வெள்ளப் பரப்பிடை மிதந்தவப்
பணிமாமன் மார்பின்மணியும்
பருவர லகற்றன்னை சிறுவிரலி னாழியும்
பற்றா தெறிந்துநுந்தை

கார்கொண்ட கண்டக் கறைத்திரு மணிக்குளங்
காவா துடன்வலித்துக்
கைம்மலர்கள் கொண்டுகலுழ் கண்மலர் பிசைந்து சிறு
காலுதைந் தழுதல்கண்டங்

கேர்கொண்ட நும்முன்வர வாங்கவன திருசெவியு
மீர்ம்புழைக் கையுநால்வா
யெழிலுறும் பேழைவயி றும்பிடித் தழுகைதீர்ந்
திளநகை புரிந்துமகிழுஞ்

சீர்கொண்ட தென்னருணை நேர்கொண்ட கந்தவேள்
செங்கீரை யாடியருளே
திங்களுக் குதவுசடை யங்கணற் கொருபுதல்வ
செங்கீரை யாடியருளே. 13

மருவுருவு மவைநிலவு தலமுமிவை யிவையென
வகுத்தெவர்க் குந்தருமொரு
மலரா தனத்தனெண் கண்ணினுமு னண்ணினரை
மாத்திரைப் பொழுதுமீயாக்

கருவரை யெனும்பகட் டூர்தியான் சூர்செயெரி
கால்விழியி னும்பெருத்த
கலியினுறு மிடியினினை காரியந் தகையுமக்
கரியவ ளொடுஞ்சுற்றமா



மொருவரிய கூட்டத்தர் நாட்டத்து மண்டு
யுதித்தவ ரடைந்திறந்தோ
ருற்றுமுன் கண்டவர்க் கருள்செயுந் தலமெனா
துன்னினர்க் குதவுதலமாந்

திருவருணை நகர்பெருக வருகருணை யுருமுருக
செங்கீரை யாடியருளே
திங்களுக் குதவுசடை யங்கணற் கொருபுதல்வ
செங்கீரை யாடியருளே. 14

மாசகலு மணியணிந் தவரிடத் துறவதன்
மன்னுபே ரொளிபரந்து
வயின்வயி னிமைப்பதென மகிழுமைம் பொறியி னொடு
மனவாக் கினுக்குறாநம்

மீசனந் நிலையினி லிருப்பவவ னடிமலர்க
ளெண்ணியேத் திப்பணியுமவ்
விணையிலன் பாளர்தமிடந்தொறு மெதிர்ந் தருள்செ
யேந்தனீ யென்பதுணர

நேசமலி ’வானவ ரிறைஞ்சவறு பொறியினர
னெற்றிவிழி யிற்போந்துவா
னின்றுபுவி துன்றிருஞ் சரவணத் துற்றவர்த
நீள்குறை முடித்தருள் செயுந்

தேசமலி தருபுகழ்த் தென்னருணை வாழ்குகன்
செங்கீரை யாடியருளே
திங்களுக் குதவுசடை யங்கணற் கொருபுதல்வ
செங்கீரை யாடியருளே. 15

துத்திப் படத்தரவு வேணிமுடி யும்பிறை
துளங்குநுத லுங்கொண்டவத்
தொல்லோ னிருங்குமர னெனன்னினைப் பிக்குமச்
சூழியுஞ் சூழியார்ந்த

பத்திப் பகட்டுவயி ரச்சுட்டி யுஞ்சுடர்
பதிந்தாட நெற்றியம்பொற்
பட்டமா டத்திரு விளங்குகுழை பெறுசெவிப்
பானிலை குதம்பையாட

வெத்திக்கு மொளிவீசு மார்பினணி யாரமு
னிசைந்தசைந் தாடமேரு
விகலிவளை யரவெனும வகலிலரை வடமாட
வெண்ணினோ ரெண்ணியவெலாஞ்

சித்திக்க வருளுமொரு திருவருணை முருகவேள்
செங்கீரை யாடியருளே
திங்களுக் குதவுசடை யங்கணற் கொருபுதல்வ
செங்கீரை யாடியருளே. 16

வேறு

திருமா முகமென வருமா சறுநிறை
திங்க ளசைந்தாடத்
திகழ்கா தெனும்வளை நிகழ்வார் குழையொடு
திவளுபு நின்றாடப்

பொருமா றடுபுய வருமால் வரைபல
பூணொ டொளிர்ந்தாடப்
புகழ்மார் பணிபணி புதுமா நிலவு
பொருந்தி விரிந்தாடப்

பருமா நிலமொடு பெருவா னுலகுறு
பண்டி சரிந்தாடப்
பகல்கா லரைவட மிகவோர் திருவரை
பந்தனை கொண்டாட

வருமா தவர்புனை குருமா மணியவ
னாடுக செங்கீரை
யருணா புரசுக கருணா கரகுக
னாடுக செங்கீரை. 17

வேறு

ஒருபொற் பொதுவினி லிருநற் றிருநட
முயிரிடர் பொன்றிடமே
லுயர்வுற் றருணல மதுபெற் றிடநினை
யுளனொடு நுந்தைதனோர்



மருவைத் திடுமடி யலகைப் புறமதின்
மதனிற வூன்றியிடா
மலர்மற் றொருதிருவடிமிக் குயர்தர
மகிழ்வி னெடுத்திடல்போ

லிருண்மொய்த் திடுமல மிரிவுற் றிறநில
னிருகை பதித்தொருதா
ளிருவிக் கதிநல முறமற் றொருபத
மெழிலொ டெடுத்துநிமிர்ந்

தருண்மெய்த் திருமுக மலர்வுற் றசைதர
வாடுக செங்கீரை
யருணைப் பதிவரு கருணைக் குருபர
னாடுக செங்கீரை. 18

வேறு

பண்ணுறு வானெனு நீல விதானப்
பந்தர் பொறுப்பமதன்
பவளப் போதிகை மரகத மியல்கால்
பல்க நிறுத்தியென

விண்ணுற விடுசெம் பாளையி னீளுபு
மிளிர்பல பைங்கமுகின்
விரிமட லிடையிடை மதுகரம் வைத்த
வியன்றே னடையருகா

நண்ணுறு திரையெறி வெண்ணில வுமிழ்தரு
நந்து தவழ்ந்தவைதா
ஞால மளப்ப நிமிர்ந்தொளிர் சக்கர
நத்திரு கைத்தலமா

ரண்ண லெனப்பொலி பெண்ணைநன் னாடா
வாடுக செங்கீரை
யாரரு ணாபுரி யூர்கொண் மயூரா
வாடுக செங்கீரை. 19

நளிகட லிற்றுயில் பவன்முத னத்தி
நலஞ்சா ருங்கோவே
நலிவினை வெப்புறு மெலிவு தவிர்ப்ப
நயந்தா ருங்காவே

யொளிபெறு நற்றவ ரெனுமளி சுற்றி
யுவந்தே றும்பூவே
யொருவில் கொடிச்சிமுன் மருவு புனத்தி
னுழன்றோ டுஞ்சேவே

துளிமுகி லொத்திரு விழிபுனல் வைத்தவர்
துன்பீ ருந்தூவே
தொழவு ணினைக்குமுன் முழுதருள் வைத்துறு
தொண்டோ ருந்தேவே

தெளிதமி ழுக்கொரு களிவரு மற்புத
செங்கோ செங்கீரை
திகழரு ணைப்பதி மகிழுறு மெய்க்குக
செங்கோ செங்கீரை. 20

வேறு

வென்றே றுஞ்சீர் குன்றா விண்சேர் கின்றாரும்
வெம்பா சந்தீர் கென்றே யொன்றோர் நன்றாரு
மின்றே நன்றா நின்றா டந்தா ளெந்தாய்நீ
யென்றே நின்பா லன்பாய் முன்பே நின்றோதக்

குன்றே யுங்கா னின்பால் வந்தா டன்பான்மால்
கொண்டே தண்டே னுண்டே வண்டா ருஞ்சாரல்
சென்றே யந்தா டந்தாய் செங்கோ செங்கீரை
செங்கேழ் குன்றார் கந்தா செங்கோ
செங்கீரை. 21

## 3. தாலப் பருவம்

உண்ணா ரமுதம் யாம்பெறுவா
னுறுவெங் கடுவைக் களத்தடக்கு
மொருவற் கினியாம் புரிவதெவ
னுளதென் றுளத்தி னொருங்குன்னி

விண்ணா ரமரர் தம்முலகின்
விளங்க வெழுமத் திருவுருவின்
மேவித் தொழுவான் புகுந்துமிகு
வியன்வா னதியி னாட்டியெனக்



கண்ணார் முகடு தொடுத்தெங்குங்
கவினப் பரவிக் கடிமலர்மொய்க்
களிதே னளவிக் கல்லெனிசை
காட்டிச் சந்தங் கமழருவி

மண்ணா ரண்ணா மலையின்வளர்
மருந்தே தாலோ தாலேலோ!
மந்தா கினியா டந்தவருண்
மைந்தா தாலோ தாலேலோ! 22

கஞ்சா தனத்தன் படைத்திடுமக்
கடமா வுயங்கிக் கான்மடியிற்
கருதுந் திசைக ளவைபொறுப்பான்
கனிவின் முனிவின் றினிதளித்து

நஞ்சார் கண்டன் புரந்திடுமந்
நலத்தி னெங்கு நனிதிரியு
நால்வாய்க் களிறு பிளிறவத
னயக்குங் குரலு முருவுமிடை

யெஞ்சா நசைகொள் பிடிதெரியா
தினைய வனைய துணராமே
யிகல்வன் களிறு மிடருழப்ப
விளியிற் குளிறி வெளிறின்றி

மஞ்சா ரண்ணா மலையின்வளர்
மருந்தே தாலோ தாலேலோ!
மந்தா கினியா டந்தவருண்
மைந்தா தாலோ தாலேலோ! 23

மயங்கு மிருண்மெய்க் கானவர்தம்
வன்கைச் சிறுவர் விளையாட்டின்
மகிழ்வோ டெறிந்த கவணிருந்து
வான்போய்த் துகிலின் முகில் கிழித்தங்

கியங்குங் கதிர்த்தேர் மாமுடுக்கி
யியல்வெண் மதியின் முயறுளைத்தே
யிமையா நாட்டத் தமரர்நக
ரெழிற்கற் பகக்கா டுழக்கியதின்

முயங்கும் பொலன்செய் மலருதிர்த்து
மூங்கிற் றலைத்தே னடைகீறி
முழவுப் பலவின் கனிபோழ்ந்து
மொய்த்த விழும்பன் மணியெங்கும்

வயங்கு மண்ணா மலையின் வளர்
மருந்தே தாலோ தாலேலோ!
மந்தா கினியா டந்தவருண்
மைந்தா தாலோ தாலேலோ! 24

தேன்றோய் கமலந் திறந்தடைக்குஞ்
செங்கைக் கதிரோன் றேர்ப்புரவி
திகழ்மெய் பசுமை போய்வெளுப்பத்
தீய வவுணர் செடிகொண்முடை

யூன்றோய் குலிசப் படையண்ண
லுகைக்குங் களிற்றினுடல் வெண்மை
யொருவிக் கருக வுடுபதியென்
றொருபேர் படைப்பவெண்டிங்கண்

மீன்றோய் விசும்பி னவரிமையா
விழிகளிமைப்ப வெண்சுதையும்
விழுநீ லமுஞ்செம் மணியுமொளி
வீச நகரி வியன்சிகரி

வான்றோ யண்ணா மலையின்வளர்
மருந்தே தாலோ தாலேலோ!
மந்தா கினியா டந்தவருண்
மைந்தா தாலோ தாலேலோ! 25

வினையோங் கிடுமவ் வெம்பிறவி
வேலை நீந்திக் கரையேற
விடுக்கும் புணையா விப்பிறவி
விழுப்பங் கருது மதுவன்றி

நினையோம் பிறிது நல்லறத்தி
னிற்போ மற்போம் படியென்னு
நேயத் தவர்மெய் யடியர்வரி
னிறைபே ரன்பா னெடுஞ்செல்வந்



தனையோம் புறுதற் பயன்றெரிந்து
தாண்மேல் விழுந்து தகைந்தழைத்துத்
தக்க வகையிற் புறந்தருமத்
தருமந் தழையத் தழைத்திடும்பன்

மனையோங் கண்ணா மலையின்வளர்
மருந்தே தாலோ தாலேலோ!
மந்தா கினியா டந்தவருண்
மைந்தா தாலோ தாலேலோ! 26

வேறு

ஆரண முரைமெய்ப் பொருளா முதல்வ
னனைத்து மழித்துடனே
யவைமீ ளத்தரு மவனெனு மதனை
யகந்தெளி வித்ததெனக்

காரண வுறுவிண் ணிலனென நிலனுயர்
ககன மெனத்திரியக்
களிசெய் குறும்பொடு நீவிளை யாடுதல்
கருதார் பொருதிடுமச்

சீரண வுறுவிண் ணவர்தமை மேருச்
சிமயத் திடையட்டுச்
சேர வெழுப்பிநி னொருபே ருருவவர்
தெரிசித் திடவருள்வோய்!

தாரணி புகழண் ணாமலை முருகா
தாலோ தாலேலோ!
தண்டமி ழுக்கொரு வண்டனி முதல்வா
தாலோ தாலேலோ! 27

காதல்செ யுளமெனும் வயலெழு முக்கட்
கழைதரு நன்முத்தே!
கலைமக ளலைமகள் பணிமலை மகடரு
காமரு மாமணியே!

கோதறு மைங்கைக் குஞ்சர நெஞ்சு
குளிர்ந்தழை மென்களிறே!
கோகன கவ்விழி மாமடி கண்மகிழ்
கொளுமொர் கவுத்துவமே!

தீதறு தெய்வப் பிடிமலை மலையே!
தேவர் தமக்கமுதே!
செறிகான் கொடிபடர் தருவே! யடியவர்
சேம நிதித்திரளே!

தாதவிழ் பொழிலரு ணைக்கரு ணாநிதி
தாலோ தாலேலோ!
தண்டமி ழுக்கொரு வண்டனி முதல்வா
தாலோ தாலேலோ! 28

கலைமலி புலவர்த மலைவற வருமொரு
கண்ணே தாலேலோ!
கண்டே! பாகே! கனியே! யினிய
கரும்பே தாலேலோ!

மலைமகண் மடியின் வளர்ந்து கிளர்ந்தெழு
மதியே தாலேலோ!
மணியே! முத்தே! மரகத மே!நன்
மருந்தே தாலேலோ!

புலமலி யடியவர் நலமலி தரவடை
பொழிலே தாலேலோ!
பொன்னே! யொளியே! .பூவே! மணமே!
பொற்பே தாலேலோ!

தலமவை தமிலுய ரருணையி லறுமுக
தாலோ தாலேலோ!
தண்டமி ழுக்கொரு வண்டனி முதல்வா
தாலோ தாலேலோ! 29

வேறு

வான்முக மீனினர் பான்மா றாவா யானோ காண்
மாமுதல் வோனென வேதா டாழா தேயேகு
நான்முக னார் தமை வேதா போதா யோதாயோ
நாடுமெய் தானென வேதூ ழாவா ளாமீள்வோ
னூன்முக மார்தலை சாடா வேடா நீயோ நீ
டூழ்புரி வோனென வேகா வாவோ வாமேபார்
மேன்மையொ டேபுரி வோனே தாலோ தாலேலோ!
வீறரு ணாபுரி வாழ்வே தாலோ தாலேலோ! (30)



தாதுகு நீபமொய் தாராய் தாலோ தாலேலோ!
தாழ்கிலர் பாலருள் தாராய் தாலோ தாலேலோ!
வேதம தோதுபல் பேராய் தாலோ தாலேலோ!
மேவுநர் பானிலை பேராய் தாலோ தாலேலோ!
ஏதமின் ஞாலமெய் வேராய் தாலோ தாலேலோ!
ஏழைய மேய்பிழை வேராய் தாலோ தாலேலோ!
ஆதிய ணாமலை யூராய் தாலோ தாலேலோ!
ஆய்மயி லேயல தூராய் தாலோ தாலேலோ! 31

## 4. சப்பாணிப் பருவம்

முட்டைக் குறும்வடிவு மொழிபெயரு முழுதுடைய
மூதுலக மீன்றவன்னை
மொய்யொளிக் கிண்கிணிகள் சிற்றரை வடத்தினொடு
முரலோசை யோர்த்துநிற்பக்

கட்டைமுட் டாண்முளரி யோனைவின வும்பொருள்
கருத்தொடும் வினவியெழில்வாய்க்
கனியுறு தேறலென மொழிமழலை யோசைமுக்
கட்டாதை யோர்த்துநிற்ப

நிட்டைக்கு வைத்தமன வடியர்விரை செலுமயிலி
னிகழோசை யோர்த்துநிற்ப
நீடினைப் புனமதனி லோடியொர் குறத்தியந்
நிறைகிள்ளை யோப்புமோதை

தட்டைப் புடைப்பொலியொ டுற்றோர்த்து நின்றவன்
சப்பாணி கொட்டியருளே
தருணவெழி லுறுமுருவொ டருணைவரு மறுமுகன்
சப்பாணி கொட்டியருளே. 32

காமரை முனிந்ததன் னுருவினொடு பெயர்புனை
கருத்தரை யுருத்திரித்துக்
கைம்மலர் சுமக்கெனத் தந்தவத் தாதையுட்
கவலாது நோக்கினும்பின்

னாமரைக் கூற்றவனொ டணியிருந் தேகென
வமர்க்குவிடு தாய்நோக்கினு
மவுணன் கழுத்திலிடு மாழிபெற வவைமகிழு
மம்மாம னேர்நோக்கினு

மூமறை நிகர்த்தொருசொ லுரையாது குட்டுண்ட
வுவனுவகை யொடுநோக்கினு
முற்றமைத் துச்சென்னி வைத்தகைக் கடியவ
ருளம்பதைத் திடுதலறிவேந்

தாமரை மலர்ச்சிறுகை நோவாது மென்மெலச்
சப்பாணி கொட்டியருளே
தருணவெழி லுறுமுருவொ டருணைவரு மறுமுகன்
சப்பாணி கொட்டியருளே. 33

அங்கைத் தலங்குவித் துச்சிவைத் தேத்தும
வகத்திய முனிக்கினிக்கு
மத்தமிழொ டெத்தலத் தார்க்குமரி தாமறை
யளித்தருள்செய் திட்டவதுவுஞ்

செங்கைத் தலஞ்சிவக் கக்குட்டி வேதனைச்
சிறையிட்ட நீயவன்றான்
றெரிகிலா துற்றபொரு டெரிதிகொ லெனுஞ்சிவன்
செவிதரத் தேற்றுமதுவு

மெங்கட் களித்தவித னொடுநோக்க வோரிறை
யிறும்பூது பயவாவென
வின்பமுறு மன்பினைந் திணையென்னு நுந்தைநூற்
கிசையுமெய் யுரைமெய்யினாற்

சங்கத் தமிழ்ப்புலவர் தங்கட் கிசைத்தவன்
சப்பாணி கொட்டியருளே
தருணவெழி லுறுமுருவொ டருணைவரு மறுமுகன்
சப்பாணி கொட்டியருளே. 34

தோளம் மலைக்குலந் திசைதொறுஞ் சுலவச்
சுடர்ப்பரிதி மதிமண்டிலஞ்
சுடுகனலி யடுகனலி யொடுமுன்வரு மனையமுத்
தொகுவிழியி னூடொளிப்பக்

காளந் தரித்தவக் கண்டமென வண்டங்
கறுக்குமிரு ளூற்றுமுற்றுங்
ககனச் சுரக்குழா முனிவரர் குழாஞ்சிவ
கணத்தொடும் பரவவண்ட



கோளந் தனக்கெழில் குலாவவெளி நின்றே
குனிக்குந் தனிக்குநுந்தை
கூத்தினுக் காத்தமா வாய்த்தநின் னன்னையுங்
கோகனத னும்முறைதருந்

தாளத் திருத்தநின் நாளம்புயக் கையிற்
சப்பாணி கொட்டியருளே
தருணவெழி லுறுமுருவொ டருணைவரு மறுமுகன்
சப்பாணி கொட்டியருளே. 35

குலாமிட்ட தெய்வங்க ளாய்ச்சில ருளத்தினுங்
கோட்டத்து முற்றிருக்குங்
கோடானு கோடியாந் தேவரை யெலாங்கொடுங்
கோலினி லலைத்தலைத்துக்

கலாமிட்ட வவுணக் கடும்பகை தொலைத்தவக்
கைக்கினிமை பெறவாயிரங்
கண்ணுடைய விண்ணரசு நண்ணியுத வொண்ணுதற்
கடவுட் பிடிக்கணுற்றுந்

துலாமிட்ட வன்புடைமை தோற்றாது வேற்றுருத்
தோற்றியெதிர் தோற்றுசெவ்விச்
சொல்லாடி யல்லாடு வில்லாடு குழனுதல்கள்
சுட்டியொர் குறக்கொடிக்குச்

சலாமிட்ட சேயொளி தழைக்குந் திருக்கையொரு
சப்பாணி கொட்டியருளே
தருணவெழி லுறுமுருவொ டருணைவரு மறுமுகன்
சப்பாணி கொட்டியருளே. 36

வேறு

அள்ளற் பழனக் கழுநீர்த் தாமரை
யாய்மலர் மேய்மேதி
யவைமுனி வுற்றுக் கவையடி யிட்டங்
கணைகழை மென்றுவிடாப்

பள்ளத் தடமலர் விள்ளப் புகவெடி
பட்ட தகட்டுவரால்
பருமடி முட்டக் கருவடிவத்துப்
பரிவுறு கன்றென்ன

வுள்ளிச் சொரிபால் வெள்ளத் தனைய
வுருக்கார் மேதியுற
லொலிகெழு பாற்கடன் மலிமகிழ்வாற்பட
ருற்றுத் துயில்மாயன்

கொள்ள னிகர்க்கு முனைத்திரு நாடா
கொட்டுக சப்பாணி
குரவிரை கமழ்திரு வருணையி லறுமுக
கொட்டுக சப்பாணி. 37

வெய்ய சுடர்க்குந் தண்ணிழ றந்துபின்
மென்கால் கொளவீசு
மிடைதுகி லின்கொடி படுமா ளிகைகளின்
மேனிலை வானுலவு

மைய நகிற்கொடி கட்கிடை யார்வமொ
டாடு நறுஞ்சுண்ண
மடையப் பொத்தலி னளிமூ சிடவா
னரமங் கையர் தங்கா

மொய்யத் திருமலர் தம்மல ரலவென
முற்றும் விடுத்தெதிரா
முன்னொளிர் மாடப் பொன்னொளி ரோவிய
முட்டறு பன்மலர்தாங்

கொய்ய நினைக்கு முனைத்திரு நாடா
கொட்டுக சப்பாணி
குரவிரை கமழ்திரு வருணையி லறுமுக
கொட்டுக சப்பாணி. 38

வேறு

வட்டணை பெற்றொளிர் சக்கர மற்ற
வருத்த வளைப்பாணி
வக்கிர நற்கிர கக்கதி செப்பு
வகைக்கர கப்பாணி

கட்ட மளப்பில வுற்ற மனத்தழு
கைக்குலி சப்பாணி
கட்புல முற்ற வழிப்படர் பெய்த்த
களைத்த கடற்பாணி



துட்ட ருயிர்த்தொகை பற்ற வடற்கை
துடித்த கதைப்பாணி
துற்ற மகிழ்ச்சியின் மிக்க புயத்தவர்
சொற்பெறு மெய்ப்பாணி

கொட்டமு னெட்டயி றொட்ட கரத்தவ
கொட்டுக சப்பாணி
குற்ற மறுத்தவ வெற்பரு ணைக்குக
கொட்டுக சப்பாணி. 39

முக்கணர் நெற்றி விழிக்கன லிற்றரு
மொய்த்த வொளிச்சேயே
முத்தமி ழிற்பயில் கிற்பவர் சொற்ற
முடிக்கு மளித்தாயே

மிக்க வுயிர்ப்பயிர் கட்கு வளத்தை
விளைத்த வருட்காரே
மெய்க்கலை கற்றவர் நித்த லெடுத்து
விரித்த பொருட்சீரே

மைக்க ணெழிற்பிடி தொக்க குறத்தி
வரித்த திருப்பேறே
மற்றொரு பற்றிலர் சித்த மினித்தெழு
மட்டில் பெருக்காறே

குக்குட மெய்க்கொடி வைத்த கரத்தவ
கொட்டுக சப்பாணி
குற்ற மறுத்தவ வெற்பரு ணைக்குக
கொட்டுக சப்பாணி. 40

வேறு

முற்றும்வெளி றுற்றகளி றுற்றிவரு மெய்க்கண்விழி
மொய்த்தகுலி சப்பாணியோன்
முற்சுரர்த மக்குமசு ரத்திண்மக ளிர்க்குமவர்
முற்பட நினைப்பாகுமா

றுற்றிடுவ லத்துவிழி கொட்டவசு ரர்க்குமவ
ருட்குமவ ருக்குமிகுமா
லுய்க்குமவ ருக்குமிட முற்றவிழி கொட்டவிதி
யொத்துவழி தெற்கேகிவான்

பெற்றவல னுற்றபணை கொட்டவவு ணத்தகுவர்
பெட்குநக ரெப்பாலுமே
பெற்றியினெய் தற்பறைகள் கொட்டவுயி ருற்றவர்கள்
பிற்றையடி யிட்டோடவே

கொற்றவயில் வெற்றியொடு தொட்டகர முற்றுநனி
கொட்டியருள் சப்பாணியே
கொட்பமர ருற்றுலவு வெற்பருணை நித்தகுக
கொட்டியருள் சப்பாணியே. 41

## 5. முத்தப் பருவம்

அவ்விய மகன்றநெஞ் சத்தன்ப ரகமெனு
மகன்றடந் தன்னின்மலர
வடியிணைநன் மலரருள்வை யமரா பதித்தலைவ
ரடுபகை யகன்றுவாழ

வெவ்விய குணத்தவுணர் கவ்வைக் குழாமடும்
வீறுவே லருள்வையென்றும்
வேலுமயி லுந்துணை யெனப்பரவு சொற்குறு
வியன்செவிகள் பலவுமருள்வை

நவ்வியங் கட்குஞ் சரிக்குங் குறத்திக்கு
நகை முகம்வண் மார்வத்தொடே
நன்னெஞ்சு மருள்வைநின் னாமமொரு காற்சொல்லி
னயனமருள் வாயெமக்கே

செவ்வியின் விள்ளுமொரு சேதாம்ப லனையநின்
செவ்வாயின் முத்தமருளே
திருவா ரறத்தருணை முருகா வெமக்குனது
திருவாயின் முத்தமருளே. 42

பொலிவுபெறு நாற்கோட்டு மதமலையின் மேல்வரு
புரந்தரனை யாதியாய
புலவர்போ னின்னையா மவுணக் குழாத்தினொடு
போரேற்க வேண்டகில்லே

மொலிகடலி னஞ்சுண்டு பலிமகிழ்செய் தாதைபோ
லுண்ணுமொரு கனிகாட்டியே
யுலவாப் பரப்புடைய வண்டமுழு தோர்நொடியி
லோடிவர வேவகில்லே



மலிவளக் கூடல்வாய் நக்கீரன் முதலாய
வண்டமிழ்ப் புலவர்போல
மாறுபடு முரைபல வகுத்தவற் றின்றர
மதித்திட விருத்தகில்லேஞ்

செலின்மகி ழகத்தே மிரப்பதொன் றேயுனது
செவ்வாயின் முத்தமருளே
திருவா ரறத்தருணை முருகா வெமக்குனது
திருவாயின் முத்தமருளே. 43

காரார் குழற்கணிய தாமலர் முடித்துக்
களித்திட விரும்பிலுள்ளங்
கருதரிய மறைமுடியு மறிவரிய வாகுநின்
கான்மல ரலாதுமுடியே

மேராரு நறுமலரி னெழுநறா வேட்பின
விருந்தமி ழகத்தியற்கு
மிறைவற்கு மருமொழி யிசைக்குநின் வாய்மொழியி
னின்றே னலாதுபருகே

மூராரு நறுமண முவத்துமே லுனதுதிரு
வுச்சியல் லாதுமோவே
மொள்ளொளிய முத்தம் விரும்புவே மாயினின்
னுயர்பவள வாயின்மிளிருஞ்

சீராறு முத்தமல் லாதெதனை விழைகுவேஞ்
செவ்வாயின் முத்தமருளே
திருவா ரறத்தருணை முருகா வெமக்குனது
திருவாயின் முத்தமருளே. 44

முந்தமிழ்த மன்னநீர்ச் சரவணத் தொருமகவின்
முளரியிடை வந்துற்றநாள்
முற்றவ மவர்க்கெய்த வறுகுழவி யாயறுவர்
முலையுண் டமர்ந்தகனிவாய்

கந்தமல ரயனையோ மெனுமொழிப் பொருளது
கடாவிமு னதுக்கு கவிர்வாய்
கறைமிடற் றண்ணனீ யப்பொரு ளுரைக்கெனக்
கட்டுரைத் திட்டமலர்வா

யந்தரத் திந்திரன தாம்பல்வா யன்றியு
மகன்புவிக் குறவர்கொடிதன்
னலரின்வாய்த் தேன்சுவைத் துண்பவள வாயெம்
மகத்தியற் கோத்துரைக்குஞ்

செந்தமிழ்த் திருவா யெனப்பரிந் தனமுனது
செவ்வாயின் முத்தமருளே
திருவா ரறத்தருணை முருகா வெமக்குனது
திருவாயின் முத்தமருளே. 45

கண்முத்தம் விழவிழக் கரைமுத்த மெற்றுபொய்
கைக்கரையி னின்றுநோக்கிக்
கலுழுமொரு பிள்ளைக்கு நின்றந்தை தேவிதன்
கனதனப் பாலளித்துப்

பண்முத்த மிழைநலம் பகரவைத் தெங்கணும்
படர்பொழுது கொள்ளமுத்தாற்
பந்தருஞ் சிவிகையுஞ் சின்னமுங் குடையும்
பரிந்துநன் றேயளித்தான்

பெண்முத்த மாய்க்கடலி னொண்முத்த வாணரிற்
பேணுநின் றாயுமொருதன்
பிள்ளைத்த மிழ்க்கவிதை கேட்டுமுத் தாரம்
பிறங்குபுல வற்களித்தா

திண்முத்த ரோடியா மெண்முத்தமா நினது
செவ்வாயின் முத்தமருளே
திருவா ரறத்தருணை முருகா வெமக்குனது
திருவாயின் முத்தமருளே. 46

**வேறு**

தாவா முத்தம் பிறக்குமிடந்
தம்மை யெண்ணித் தொகுத்தவவர்
தம்பே தையையே தலைக்கீடாத்
தகுமென் வாயென் தீங்கரும்போ

வோவா முழக்கிற் கருங்கடலோ
வுடும்போ கயலோவூன்கொக்கோ
வும்பன் மருப்போ தாமரையோ
வுரையீ ரென்ன வுரையாதி



யாவா வனைய விடத்துதிக்கு
மம்முத் தங்க ணின்றிருவா
யவிர்முத் தத்திற் கோரணுவு
மமையா வென்ப தறிவேம்யா

மூவாச் செல்வ முத்தர் தொழு
முதல்வா முத்தந் தருகவே
முத்தித் தலமாந் திருவருணை
முருகா முத்தந் தருகவே. 47

தம்மை மதிக்குந் தலைமதியாற்
றரணி தனையு மதிக்குமவர்
சால மதித்து மணியினியல்
சாற்று நூலிற் றகவாய்ந்து

வெம்மை தவிர்த்துக் குளிர்மைதரு
மேன்மை முத்தத் தியல்பென்ன
விரித்து நிறுத்த வப்பொருளின்
மெய்ம்மை நோக்கின் வியன்ஞாலத்

திம்மை யுடலுக் கலதுயிருக்
கேலா தென்றல் வெளியதனா
லிடர்வெம் பிறவி யகன்றருளி
னினிதாந் தண்மை யுறவிழைவே

மும்மை மலந்தீர் முத்தர்தொழு
முதல்வா முத்தந் தருகவே
முத்தித் தலமாந் திருவருணை
முருகா முத்தந் தருகவே. 48

அதிருங் கடன்முத் தொருமுனிவ
னங்கைத் தலத்தி னடங்குமுத்த
மலர்தா மரைமுத் தரிவையர்த
மடிதோய்ந் திடத்தேய்ந் திடுமுத்தம்

வெதிருங் கரும்புந் தருமுத்தம்
வெடிபோ முத்தம் வியன்சாலி
விளையு முத்தங் களையினொடு
விரவு முத்த மிகுகொண்மூ

வுதிரு முத்த நிலைநில்லா
தோடு முத்தம் பிறபிறவு
மோரோர் குறையை யுடையவென
வுகவே மெமக்கிங் கவைபணியேல்

முதிரு முணர்வின் முத்தர்தொழு
முதல்வா முத்தந் தருகவே
முத்தித் தலமாந் திருவருணை
முருகா முத்தந் தருகவே. 49

**வேறு**

சுற்று மடுத்த கடற்புவி விட்டொர்
சுவர்க்க தலத்துறுவோர்
துய்க்கு நலத்தினு மிக்க வளித்தொர்
துளக்கினின் மெய்ப்பதிவாய்த்

துற்ற முகிற்குலம் விட்புல நற்பதி
தொட்டெழு வெற்புறுவேய்
தொக்க முழக்கரு விக்குல மிற்ற
துளைக்கை மருப்பிவையே

யுற்றவர் பெற்றிட முத்தமளிக்கு
முவப்பி னிவப்பனவே
லுட்கனி வுற்றளி முத்த மெனப்பி
னுனக்குரை மற்றெவனோ

முற்று நலத்தரு ணைக்கரு ணைக்குக
முத்த மளித்தருளே
முச்சுட ருக்கொரு மெய்ச்சுட ரொத்தவ
முத்த மளித்தருளே. 50

அத்த ரிடத்தனை நித்தன் முகத்தொ
டணைத்தெழு நித்திலமே
யப்ப மவற்பொரி மொக்குநர் கைக்கொ
ளரத்த விரத்தினமே

மைத்தழை மெய்க்கண னுற்று விழித்துணை
வைத்த கவுத்துவமே
வைக்குலி சப்படை யத்தன் மனத்துறு
மற்றை மணித்தனமே



மொய்த்த சுரக்குழு விற்கு முடித்தலை
முக்கிய விற்பரலே
முட்டி றவத்தவ ருட்டெளி வுற்றணி
முட்டின் மணிக்கலனே

முத்த ருயிர்க்குயி ரொத்த சுடர்ப்புலன்
முத்த மளித்தருளே
முற்று நலத்தரு ணைக்கரு ணைக்குக
முத்த மளித்தருளே. 51

## 6. வருகைப் பருவம்

தஞ்செனு மவர்க்குதவு செஞ்சரண கஞ்சமேற்
றண்டைகிண் கிணியொலிப்பத்
தமனிய வடஞ்சுற்றி நிரையினிடு மரையின்மணி
சற்றொர்சிற் றொலியெழுப்ப

விஞ்சொளி பரந்தமார் பிற்சன்ன வீரமும்
விலையிலா ரமும்வில்வீச
மேருமண் டலமெனச் செவிமகர குண்டலம்
வியன்றோளின் வெயிலெறிப்ப

வெஞ்சலில் பட்டமுஞ் சுட்டியும் விட்டிலக
வீராறு கண்மலரொடே
யெழுமதியொ ராறெனு முகந்தொறுஞ் செவ்வாயி
னிளநகை நிலாமுகிழ்ப்ப

வஞ்சொன்மலை மங்கையொடு சங்கரன் கண்வரு
மருட்குமா ரன்வருகவே
யமரர்பதி பணியவரு குமரகுரு பரனெங்க
ளருணைவாழ் குகன்வருகவே. 52

பங்கயனை முதலாய பண்ணவர்க ணண்ணியெம்
பரிபவந் தீர்த்தருளெனப்
பரமனறு நுதல்விழிப் படர்சுடர்ப் பொறியிற்
பயப்பவெளி வளிதீவழிக்

கங்கையை யணைந்தொழுகி யுங்கொர்சர வணதடக்
கமலத்தொர் குழவியாய்ப்பின்
கார்த்திகைப் பெண்டிரறு வோர்க்கு மாறுருவாய்க்
களித்துமுலை யுண்டிருப்பச்

செங்கைமழு வோன்றனது பங்கிலுறை மங்கையொடு
சீர்த்தவிடை மேலணுகும்வாய்த்
தேவிமகிழ் வோடெனது சேய்வரு கெனாவாறு
சீருருவு மோருருவமா

வங்கையி னெடுக்கவவள் கொங்கைபொழி பாற்குவரு
மாறுமா முகன்வருகவே
யமரர்பதி பணியவரு குமரகுரு பரனெங்க
ளருணைவாழ் குகன்வருகவே. 53

பண்டருந் திவவியாழ்ப் பாண்முனிவ னொருபகற்
பண்ணுமொரு வேள்வியின்கட்
படுபிழையி னாலுலக மடுவதென வேயெழீஇப்
பாய்ந்தவெந் தகரொன்றுதன்

கண்டருஞ் சுரருயிர் குடித்துல கிடித்துமைக்
ககனமுற் றுஞ்சுலாவக்
காவென விறைஞ்சிமுறை யோவெனுஞ் சுரர்களிடர்
கண்டருகு நின்றுபோற்றுந்

திண்டிறல்கொ ளிளவன்முன் கொண்டணைய மண்டதன்
செம்புற மிவர்ந்துபற்றித்
திசாதிசை நடுங்கமு னிசாசர ரொடுங்கவெவர்
திட்டிக்கு மெட்டவரிதா

வண்டரண் டங்களு மடங்கவூர்ந் தேவரு
மடற்கந்த வேள்வருகவே
யமரர்பதி பணியவரு குமரகுரு பரனெங்க
ளருணைவாழ் குகன்வருகவே. 54

தருஞ்செயல் புரிந்திடத் தந்தைதாய் விடைதரத்
தண்கயிலை விட்டணைந்து
தஞ்சமென நஞ்சருறை வஞ்சகிர வுஞ்சமொடு
தாரகன் றன்னையட்டு

வருஞ்சுரரொ டெண்ணிறலம் வழிபடுஉத் தெற்கணலை
வாய்வந் திருந்துமுதுசூர்
மனமது தெரிந்தினிது வருதியென வேவீர
வாகுவை விடுத்தஞான்று



பெருஞ்சுர பதிக்குமக னுற்றிடு கனாவினிற்
பெரிதவ னிறும்பூதுறப்
பெட்குமுக மோராறு மீரறு கரத்திற்
பிறங்குபடை களும்விளங்க

அருஞ்சிறை யிருந்தவன் வருந்துதல் திருந்தவரு
மருண்முருக வேள்வருகவே
யமரர்பதி பணியவரு குமரகுரு பரனெங்க
ளருணைவாழ் குகன்வருகவே. 55

மாகண்ட கத்தவுணர் பேய்கண் டெனக்கண்ட
வளநகர்க் கேயணித்தாய்
வளரேம கூடத் திலக்கரொடு நவவீரர்
மலிபூத ரோடும் வைகி

சேகண்ட ரகலவரு சிங்கமுக னாதியர்ச்
செற்றபிற் சூரபன்மன்
செய்மாயை யாவுந் தெரிந்தவன் றேரொடு
திரிந்துலா விடவெழுந்து

போகண்ட மெங்கணும் போயமர் விளைத்தவன்
புணரியிடை மாவாய்வரப்
போழ்தலுஞ் சேவலொடு மயிலா யிடக்கொண்டு
புகலமரர் தஞ்சிறைவிடுத்

தாகண்ட லன்றனகர் நேர்கண் டிறைஞ்சவரு
மயில்வேற் பிரான்வருகவே
யமரர்பதி பணியவரு குமரகுரு பரனெங்க
ளருணைவாழ் குகன்வருகவே. 56

வேறு

அலையார் புனலின் நன்குமலர்ந்
ததன்பிற் கூம்பாத் தாமரைபோ
லங்கை யிரண்டும் நீட்டிவிரித்
தையா வருக வெனவழைத்தே

நிலையா ரன்பொன் றிலரெனவே
நினைந்தாய் போலப் புறநோக்கி
நீட்டித் தின்னும் வாராது
நிற்பா யெனில்யா மென்புகல்வே

மிலையார் கொடிகொம் பிலதெனவே
யிடருற் றிருக்கு மதுவன்றி
யெண்ணம் விடுத்து நினக்கயலா
வெங்கும் பெயர மாட்டேமால்

மலையான் மடந்தை தருமருமை
மைந்தா வருக வருகவே
வளமா ரருணை யாறுமுக
வள்ளால் வருக வருகவே. 57

முருகா வருக வருடருசண்
முகனே வருக வமரர்தொழு
முதல்வா வருக வெனப்பலகான்
மொழிந்து மெம்பால் வாராயேல்

ஒருகா னினைக்கி னிருகாலு
முடன்வந் தருளுமெனவுரைத்தோ
ருரையும் பொய்யாங் கண்கண்ட
வொருதெய் வமதா வுற்றவருக்

கருகா வருள்செ யமலனெனு
மதுவும் பழுதா மென்றென்று
மகலா விளமை யவனெனலு
மாகா தம்ம வம்மாயோன்

மருகா மறவர் குலவள்ளி
மணவா வருக வருகவே
வளமா ரருணை யாறுமுக
வள்ளால் வருக வருகவே. 58

விதியே புகலும் பழமறையின்
வித்தே வருக மெய்த்தசுவை
விசும்பும் விரும்பும் பசுந்தமிழின்
விளைவே வருக வணையன்பர்

கதியே வருக வெவ்வுயிர்க்குங்
கண்ணே வருக வெண்ணுசுவைக்
கரும்பே வருக நிரம்புமருட்
கதிரே வருக துதியறிஞர்



நிதியே வருக நீடுவத
நெறியே வருக நெறிநின்றோர்
நிலையே வருக நிலையின்ப
நிறைவே வருக நிறைஞான

மதியே வருக வமரர்சிகா
மணியே வருக வருகவே
வளமா ரருணை யாறுமுக
வள்ளால் வருக வருகவே. 59

வேறு

தமையு முடைய தனையு முணர்நற்
றகுநன் மதியன் வருகவே
சதுநன் முகனுமரிய பொருண்மை
தருமொர் முதியன் வருகவே

சமைய மெவையு மறிய வரிய
சரத நிலையன் வருகவே
தனைமு னெவரு நணிய வருமொர்
தணிகை மலையன் வருகவே

இமையி லவரு மடிகள் பரவ
விகலு மிறைவன் வருகவே
எனைய பொருளு மொழிவி னுழைவி
னியலி னிறைவன் வருகவே

யுமையு மரனு மமைய நடுவ
ணொளிரு மமரன் வருகவே
யுயரு மருணை யயர்வில் கருணை
யுதவு குமரன் வருகவே. 60

வடிவு கடலி னெழுமொர் பரிதி
மயிலன் வருக வருகவே
வலனு மிடனு மருவு மகளிர்
மகிழ்நன் வருக வருகவே

அடியர் வினைகள் கெடமுன் விடுமொ
ரயிலன் வருக வருகவே
யமல கமல பதமு னருளு
மமுதன் வருக வருகவே

படியி னினைய விடர்க ளடுமோர்
பகவன் வருக வருகவே
பகலு மிரவு மகலு நிலைகொள்
பரமன் வருக வருகவே

முடியு முதலு மறிய வரிய
முதல்வன் வருக வருகவே
முகில்கொ ளருணை நிகரில் கருணை
முருகன் வருக வருகவே. 61

## 7. அம்புலிப் பருவம்

உலகமுழு துங்குளிர்செ யொள்ளொளி பரப்பிநின்
றுவகைமிகு வித்தியென்றோ
வுன்னரிய நின்கிரண நன்னர்வைத் திந்நிலத்
துறுபயிர் வளர்த்தியென்றோ

குலவமரர் பலருங் குலாய்க்கொண்டு நாடொறுங்
கொளவமு தளித்தியென்றோ
குறையினுந் திரியாது நிறைபுகழ்த் தந்தைதன்
கோடீர மணிதியென்றோ

நிலவுபாற் கடலிடைத் தன்மாமி யோடன்று
நேர்வந் திருத்தியென்றோ
நேயமுறு தன்றமிழை யாயும்வழு தியர்குடியி
னெடுமுதல்வ னாதியென்றோ

வலகிலிவ னொருதனுட னருகுற வழைத்தனன்மெய்
யம்புலீ யாடவாவே
யருணைநகர் நின்றுபொலி கருணைமுரு கன்றனுட
னம்புலீ யாடவாவே. 62

ஏயுமொரு கடைநிலை யிகந்துமுற் பக்கம்வரி
னிரவுகாய் பவனாகுவா
யியலுமொரு பருவத் தியைந்தவெவ ருக்குமெதி
ரெழின்மயி லிவர்ந்துவருவாய்

காயுநிலை போயவல் லாதவற் புல்லாத
கலைமதிய னாய்த்திகழுவாய்



கருதுறு முரோகிணிக் கொருதின முதற்கண்வரு
கார்த்திகையை யுளமுவப்பாய்

பாயும்விடை மேன்மலைப் பாவையொடு மேவும்
பரன்கண்ணின் மணியின்வளர்வாய்
பகர்சசியி னாகிவள ராம்பல்வன வல்லியொடு
பரிவின்மகிழ் கொளமருவுவா

யாயுமறை போற்றிவனை நீயுமொவ் வாதிரா
யம்புலீ யாடவாவே
யருணைநகர் நின்றுபொலி கருணைமுரு கன்றனுட
னம்புலீ யாடவாவே. 63

விண்ணிரு டுடைத்தொளி விளைத்தலால் விரவலரின்
வேலைமுன் விடுத்துவரலால்
வெந்தக ரடுத்துச்ச மேவலால் விளிசெயளி
மிகுமிர வலர்க்கருளலாற்

பண்ணொளியி னாவியிடை யகலாது நிற்குமொரு
பாதகம லம்வாட்டலாற்
பாசொளிய மான்மருக னாகவர லாற்றேவர்
பரவியுடு பதியென்னலா

னண்ணொளிச் செக்கர்வாய் நகையரும் பிறையென்ன
நல்லார் தொழத் தோன்றலா
னம்பனொண் முடியினிடை நண்ணலாற் கங்கைபா
னவில்குழவி யாய்த்தவழ்தலா

லண்ணவிவ னுக்குநீ யொப்பெனுஞ் சொற்பெறுதி
யம்புலீ யாடவாவே
யருணைநகர் நின்றுபொலி கருணைமுரு கன்றனுட
னம்புலீ யாடவாவே. 64

உடுக்கள்சில வற்றொர்பதி நீயிவன் றானகில
வுலகிற்கு மொருமாபதி
யொருநாளி னிறைவுடையை யாதிநீ யிவனென்று
மொருகுறை விலாநிறைவினான்

வடுத்தரு களங்கமும் பெறுதிநீ யிவனென்று
மன்னுமக ளங்கனாவான்

வருசில விராவினிற் சிற்றொளியை நீயிவன்
வரைவிலொளி யுடையனென்றும்

கடுத்தருங் கண்டன்முடி நிற்றிநீ யிவனவன்
கவின்மேனி முழுதுலவுவான்
கருதுமிரு குன்றிடைப் படுதிநீ யிவனெலாக்
கனமலையும் விளையாடுவா

னடுக்குமிவன் முன்னர்நீ மேருமுன் னணுவுமலை
யம்புலீ யாடவாவே
யருணைநகர் நின்றுபொலி கருணைமுரு கன்றனுட
னம்புலீ யாடவாவே. 65

மண்டல னொளிக்குநீ யஞ்சுவா யவனிவன்
வடிவே லொளிக்கஞ்சுவான்
வாளர வினுக்கென்று நீயஞ்சு வாயிவன்
மயிற்குமவை போதுங்கொலோ

விண்டலத் தவருன்னை யுண்டுறைவ ரவரையிவன்
விடுபூத மொன்றுண்ணுமால்
வேலையிடை வருதிநீ யதுவிவற் பணிமுனிவன்
மென்கையி னோருழுந்தாந்

தண்டலறு சிலர்சாப முனைவாட்டு மவரிவன்
றண்ணளிக் கேங்கிநிற்பார்
தையலார் மையலிடை யாழ்திநீ யதுவிவன்
றன்னடியர் திசையு மெய்தா

தண்டமுற் றுதவிவற் கெண்டகுமோர் பொருள்கொனீ
யம்புலீ யாடவாவே
யருணைநகர் நின்றுபொலி கருணைமுரு கன்றனுட
னம்புலீ யாடவாவே. 66

முருகுவிரி கமலத் திருந்துல களிக்குமம்
முன்னவனு முகில்வண்ணனு
முப்பத்து முக்கோடி வானவரு மவர்பரவு
முதல்வனாம் புருகூதனும்



பெருகுதவ முனிவருஞ் சித்தரு மிவன்காட்சி
பெற்றிட வடைந்தணைவுறப்
பெறுசெவ்வி யிலராகி மறுகுளத் தொடுவரிசை
பின்முனவ ரிவரென்னவே

யுருகுதுதி பாடியரு ணாடியெதிர் கூடிமு
னொருங்குட னெருங்கிநிற்ப
வுற்றவரு ளொருவரையு மழையாது தன்செங்கை
யொருவிரற் சுட்டியுனையே

யருகுவரு கெனவழைத் தனனுன ததிட்டமென்
னம்புலீ யாடவாவே
யருணைநகர் நின்றுபொலி கருணைமுரு கன்றனுட
னம்புலீ யாடவாவே. 67

கதிரயிலி னொளிகொண் டுடற்களங் கத்தினொடு
கருதுமக விருள்போக்கலாங்
கலவமயில் கொண்டர வெனும்பகையொ டைம்புலக்
கள்ளவெம் பகைநீக்கலா

மெதிரிலிவன் வெற்புகொடு கயரோக முடனுளத்
தேய்கவலை யுந்தீரலா
மிணையிலிவன் மொழிகொண்டு மெய்க்கூனு முள்ளத்
திருங்கோட்ட முந்தவிரலாஞ்

சதிர்பெறு மிவன்கடைக் கண்ணோக்கி னிற்றேய்தல்
தகவளர்த லின்றிநிற்குந்
தகையன்றி நன்றழிவி னிலையொன்ற லாமிவன்
றனிநாம வாறெழுத்தா

லதிர்கட லொடும்பிறவி யகலலாஞ் சமையமீ
தம்புலீ யாடவாவே
யருணைநகர் நின்றுபொலி கருணைமுரு கன்றனுட
னம்புலீ யாடவாவே. 68

தன்றாதை பூசைதனி லொன்றாத பிழைகண்டு
தணியாத பசியொர்பூதன்

தானிட்ட சிறைவிடத் தமிழிட்ட கீரனைத்
தண்ணளி சுரந்தளித்தான்

குன்றாத தன்கோ புரத்துமிசை நின்றுவீழ்
குணவருண கிரியையேற்றுக்
கலையாத செந்தமிழ்க் கலையாய வாக்கினொடு
குறைவிலனு பூதிதந்தான்

பொன்றாத நின்பெரும் பாபமுஞ் சாபமும்
போக்கியுய்ந் திடவெண்ணினாற்
புகலுமெங் குமரனும் வருகென வழைத்தனன்
பொழுதுமிது போலுண்டுகொ

லன்றாத வன்பகையை வென்றான்றன் முன்னிவனொ
டம்புலீ யாடவாவே
யருணைநகர் நின்றுபொலி கருணைமுரு கன்றனுட
னம்புலீ யாடவாவே. 69

தேவரொடு மூவர்க்கும் யாவர்க்கு மறிவருஞ்
செவ்வேற் குமாரனிவனீ
செப்பருங் குரவற்கு மிழைபிழைக் கஞ்சாத
தீவினைய னென்றறிந்தும்

வாவென வழைத்திடவும் வாரா திருத்தியேன்
மற்றிவன் றிறல்கிடக்க
வன்பகையை வானட்ட மொய்ம்புடைத் தம்பியிவண்
மாறா தடிக்கணின்றான்

றாவெனவும் வேண்டாது தாவிநின் றன்னையொரு
தாளா லுதைத்துவீழ்த்தித்
தரணியிடை யொருசகட் டினிலுருட் டிக்கொடிரு
தாணிழற் கீழ்ப்படுப்பா

னாவதறி மதியென்னி னீயினித் தாழாம
லம்புலீ யாடவாவே
யருணைநகர் நின்றுபொலி கருணைமுரு கன்றனுட
னம்புலீ யாடவாவே. 70



தருக்குமிகு நான்முகனை முன்றலை புடைத்துவன்
றளையொடு சிறைப்படுத்தான்
தஞ்சென வடைந்துபணி விஞ்சமரர் மகிழவவர்
தமரிருஞ் சிறைவிடுத்தா

னுருக்கொடுயர் கனகவரை யுறுபொழுதி னமரேற்ற
வும்பரனை வரையுமட்டா
னொண்குரு வடைந்தநனி பண்டுதிக் கவரெலா
முயிர்பெற வெழுப்பிவிட்டான்

செருக்கினொடு நீயிவன் றன்மையறி யாதெதிர்
சினப்பிப்பி னென்னாதியோ
சென்றொருவன் வேள்விதனி லன்றொருவ னாற்பட்ட
செய்தியு மறத்திபோலா

மருக்கனென வினிதொளி பெருக்கிவாழ் வுறவெண்ணி
னம்புலீ யாடவாவே
யருணைநகர் நின்றுபொலி கருணைமுரு கன்றனுட
னம்புலீ யாடவாவே. 71

## 8. சிற்றிற் பருவம்

மருவார் கொன்றை மலர்ச்சடையோன்
மகிழு முண்ணா முலைத்தாயென்
மணியே வருக வெனவழைத்து
மகிழ்ந்து புகழ்ந்து நீராட்டி

யுருவார் நீற்றி னொடுதிலக
மொளிரத் தீட்டி யுவமனிலா
தொளிர்பொன் வள்ளத் துறுசுவையி
னுண்பா லடிசி லுவந்தூட்டி

யிருவார் குழையி னொடுமிணையி
லினிய பணிகள் பலபூட்டி
யெழிலார் முன்றில் விடுத்ததெமக்
கிடுக்க ணிழைத்து நடுக்கிடவோ

திருவா ருருவிற் றிகழ்குமரா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
சேணார் சோணா சலச்சேயே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 72

கொழிக்கும் வயிரச் சுவரெடுத்துக்
குலவும் பவள விளக்கேற்றிக்
கொள்ளு நீல மணியடுப்புக்
கூட்டித் தீச்செம் மணிகொளுவிக்

கழிக்கு மூன்சங் கக்குழிசிக்
கமழுந் தேனி னுலைவார்த்துக்
கதிர்முத் தரிசிச் சோறட்டுக்
களிக்கு மெங்க டிருமனைக

ளழிக்கு மதற்கோ நீபோந்த
தையா மெய்யா வெமக்கெய்தற்
கரிய விருந்தா வகமகிழ்ந்தே
மயர்வேம் விருந்து மடியவர்பாற்

செழிக்குங் கருணைத் திருக்குமரா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
சேணார் சோணா சலச்சேயே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 73

தந்தா ரிருவர் கருமணியாய்த்
தவமிக் கவர்தங் குருமணியாய்த்
தழைக்கு மமரர் தலைமணியாய்ச்
சாற்றும் புலவர் கலைமணியாய்

முந்தார் வமுறுங் குலமணியா
முழுதா மின்ப நலமணிநீ
முன்னுஞ் சிலர்க்குப் பெண்மணியா
மொழியு மெமக்கு விண்மணியாய்

வந்தா யென்றே நனிமகிழ்ந்தேம்
வண்டன் மனைக ளவைசிதைத்து



மறுக்கம் புரிவா யெனினுரைக்கு
மாற்ற முளதோ மனநினைவார்

சிந்தா மணியே சிவமணியே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
சேணார் சோணா சலச்சேயே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 74

அல்லும் பகலு நினைபவர்த
மகத்தின் ஞான விளக்கேற்று
மண்ணா ணீயெம் பவளவிளக்
கவித்த லழகோ வார்வமொடு

புல்லுந் தமிழாற் போற்றுநர்க்குப்
பொன்னி னுலக மளித்திடுநீ
புகுந்திங் கெமது வண்டன்மனை
பொருக்கென் றழித்தல் பொருந்துவதோ

வெல்லும் புலனின் மேலவர்க்கு
விளியா வின்ப மிகத்தருநீ
விரும்பெஞ் சிறுசோ றெங்கும்விழ
வீச றகுமோ விழைந்தறிவர்

செல்லுங் கதியாந் திருவடியாற்
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
சேணார் சோணா சலச்சேயே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 75

ஐயார் மேனிச் சுரர்பிடியு
மழகார் வேடர் குலக்கொடியு
மாகே மெனினு மசுரமின்னா
ரல்லே மென்ப தறிந்துமியாங்

கையா லிழைத்த வண்டன்மனை
காலா லழித்துப் போகின்றாய்
கண்ணீ ராறா வுறினுமியாங்
கண்ணீ ராறா வதுகாணாய்

மையார் தடங்கண் மலைநீலி
மற்றுன் றாய்முன் வந்துரைப்பின்
வருவ தறியே மாயினுமவ்
வழக்கு நினையேஞ் சழக்கெவர்க்குஞ்
செய்யா வருமைத் திருக்குமரா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
சேணார் சோணா சலச்சேயே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 76

முந்தி யெழுந்து மழவிடைபோன்
முடுகி நடந்து முனிவினொடெம்
முன்றின் மனைக ளழிப்பாயேன்
முதிய மறையின் முடிபொருளும்
புந்தி மகிழ்ந்து புலவர்சொன்மெய்ப்
புகழும் படியுஞ் சீறடிகள்
பொய்ம்மை படியும் பொருள்படியும்
புழுதி படியும் போற்றாயோ
தந்தி மருப்புந் தடமருப்புஞ்
சந்தோ டகிலுந் தகத்தள்ளித்
தருவின் மலரும் பொருவிலொளி
தயங்கு மணியு மிருமருங்குஞ்
சிந்தி யெழுபெண் ணையினாடா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
சேணார் சோணா சலச்சேயே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 77

ஏரார்ந் தொளிர்கற் கொண்டேயா
மிழைத்த வகமுஞ் செய்குன்று
மெங்கோ னினக்கா மேரகமு
மெழில்கொள் பரஞ்சீர்க் குன்றுமலாற்
கூரார் வேன்மு னெதிர்ந்திகலுங்
கொடிய ரகமுங் குருகுபெயர்க்
குன்று மலவே நன்றுணர்ந்துங்
குலைய வழிக்கு நிலையெவனோ



வாரார் கொங்கை மடமகளிர்
மகிழ்விற் குடைய வவர்மார்பின்
மலியுங் களப மணநாறி
மலரும் புனைந்தொர் வான்மகளாஞ்
சீரார் பெண்ணைத் திருநாடா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
சேணார் சோணா சலச்சேயே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 78

வானார் நடுங்க வருமவுணர்
வைய மழித்தி மாவழித்தி
மதியா வவர்தங் கொடுமுகத்தின்
வயங்கு மூரல் வகையழித்தி
யானா மகிழ்வி னியாமிழைத்தே
யாடும் வண்டன் மனையழியே
லதன்கட் கோல மாவழியே
லாக்கு மூரல் வகையழியேல்
கானார் மலருங் கவின்மலையிற்
கழையின் றலையுங் கரைக்கமுகின்
கழுத்தின் வைத்த சுரும்படையுங்
கரும்பின் பணையுங் கழியவழி
தேனார் முனைநற் றிருநாடா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
சேணார் சோணா சலச்சேயே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 79

வாக்கு மனமுங் கடந்தசுடர்
வடிவு நீக்கி வளர்புனத்தோர்
மரமா கியதுங் கரவினற
மலிவே டங்கொண் டதுவுமதன்
கோக்குஞ் சரங்க டுத்தியென்றோர்
குறவர் மகளைக் கைகுவித்துக்
கும்பிட் டதுவும் புகன்றேமோ
கொள்ளும் வெகுளிக் கென்முதறா

னாக்கும் பாவி லழிவில்புக
மௌவை பாடற் கமுதனைய
வந்தீம் பாலுஞ் செந்தேனு
மளவின் றோடி யவலெங்குந்
தேக்கும் பெண்ணைத் திருநாடா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
சேணார் சோணா சலச்சேயே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 80

களிக்கு மெமது சிறுமனைநீ
காணும் விருந்தா யினுமெதிர்வேங்
கரவில் குரவ னாய்வரினுங்
கழல்கள் சென்னி முடிக்கிற்பே
மளிக்குந் தெய்வ மெனிற்றொழுவே
மனைத்தும் விடுத்து மணமகனே
யாகி வரினு மகற்றகிலே
மழிக்கு முனிவிற் கடியிலையால்
பளிக்கு மாடத் தகம்புறமும்
பயில்வோ ரனைய நிலையுணராப்
பரிசு துரிசின் மெய்யுணர்வு
படைத்த வவர்தம் பண்பினிது
தெளிக்குஞ் சேதித் திருநாடா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
சேணார் சோணா சலச்சேயே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 81

## 9. சிறுபறைப் பருவம்

சற்றொலி திருத்தாதை தமருக மெழுப்பவரு
தாவிலாப் பயனுலகெனுந்
தன்மையா னன்மைசா லறிவரெல் லாந்தந்
தவாமன நினைந்திருந்து
முற்றொலி யினிற்பொலியு முதுமறை முழக்கினொடு
மும்மைநற் றமிழ் முழக்கு
முரிதிரை முழக்கிமறி விரிதரு கருங்கடன்
முகந்துபொழி வான்முழக்குஞ்



சுற்றொலிப் புனல்கண்டு வயன்மண்டு செயல்கொண்டு
தொகுமுழவ ரேர்முழக்குந்
துகளில்பல வைப்பின்முப் பணைமுழக் குஞ்சுரர்க
டுந்துபி முழக்குநீயோர்
சிற்றொலி யெழுப்பவிளை பேரொலி யெனக்கொளச்
சிறுபறை முழக்கியருளே
தெருணனி யளித்துமிளி ரருணகிரி மெய்க்குமர
சிறுபறை முழக்கியருளே. 82

இருளவுணன் வாணனீ ராயிரக் கைகளி
னியக்குகுட முழமுழக்கு
மேனமாய் நேடியறி யாதமான் மானமொ
டிசைக்குமத் தளமுழக்கும்
பொருளறி விலாதுமறை புகலயன் றாளம்
பொருந்தவொற் றிடுமுழக்கும்
பொற்பினுறு சிற்பர னடத்தியல்பு முற்றப்
பொருந்தாமை புகலுமதுவென்
மருளுயி ரகன்றுநனி யருளுறும் படியருண்
மாதா விழைந்துகாண
மகிழ்கொளுந் தாதைமிகு புகழ்கொள்வகை பலவும்வர
மன்றினிடை நின்றுபுரியுந்
திருநடன மதுதனக் கிதுமுழுது மிசைவெனச்
சிறுபறை முழக்கியருளே
தெருணனி யளித்துமிளி ரருணகிரி யிற்குமர
சிறுபறை முழக்கியருளே. 83

ஒள்ளொளி மணிச்சுடிகை யோராயிரப்படத்
துற்றபே ரரவுறுமென
வுளந்துணுக் குற்றுமா மேருமலை சுற்றுபே
ருடலணை முடக்குறாமே
யள்ளொளி முகிற்குழா மதுகிடந் ததுவென்ன
வதன்மிசை கிடக்குமாம
னஞ்செவி மடுத்துமிக விஞ்சொலியி தேதென்ன
வறிதுயில் விடுக்குறாமே

விள்ளொளிய மலரவன் கற்பவொலி யென்றுதன்
விதிநிலை யொடுக்குறாமே
விண்டலவர் மண்டலவ ரெண்டலவர் யாவரும்
வெரீஇயுள நடுக்குறாமே

தெள்ளொளி மலர்க்கரம் வருந்தாமன் மென்மெலச்
சிறுபறை முழக்கியருளே.
தெருணனி யளித்துமிளி ரருணகிரி யிற்குமர
சிறுபறை முழக்கி யருளே. 84

மெய்க்களங் கற்றமதி முகமகளிர் மகிழ்மாட
மேனிலைச் சிகரிவைத்த
விழுநீல மணியொளியி னழிவில்கற் பகநீழல்
வெண்கரி கருங்கரியதா

மிக்கவள மாளிகைச் சுதையொளியின் ஞாலத்து
வெங்களிறு வெண்களிறதா
மேவிடக் கண்டென்கொன் மேதினியும் வானமு
வியன்றட்டு மாறினவெனக்

கைக்கவள மாவரு புரந்தரனு மித்தலக்
காவலரு முண்மருண்டு
கண்விழித் துறநோக்கி யண்முதற் கெண்மிகக்
காட்டுநெடு வீதிபலவுந்

திக்களக் குந்திரு முனைப்பாடி நாடனே
சிறுபறை முழக்கியருளே
தெருணனி யளித்துமிளி ரருணகிரி யிற்குமர
சிறுபறை முழக்கியருளே. 85

மாமா னிருக்குமவ் வாவிமல ரணையன்ன
மகிழ்திரு மணத்தினுக்கு
வண்கயி ரவத்தீயி னொண்கனிக ணெய்வேட்ப
மலிபுன்கு பொரிசொரிதரத்

தூமாண் கரைக்கண்மயி னடமிடக் கார்முழவு
தோற்றவரி வண்டியாழ் செயத்
துன்றுஞ் செருந்தியுங் கொன்றையும் பொன்றரச்
சுற்றமென முற்றும்வளாய்ப்



பூமாந்த ரவையெனப் பொலிவலி முகங்கண்முட்
புறவருக் கைக்கனியுகிர்ப்
போழ்ந்துதீஞ் சுளையிறால் வார்ந்தொழுகு தேனளாய்ப்
புகழ்விருந் துண்டுமகிழுந்

தேமாம் பொழிற்றிரு முனைப்பாடி நாடனே
சிறுபறை முழக்கியருளே
தெருணனி யளித்துமிளி ரருணகிரி யிற்குமர
சிறுபறை முழக்கியருளே. 86

வேறு

மதுமல ருற்றவன் மறைகண் முழக்கு
வயக்குரல் பொருவுமெனா
வலிதி னொருக்குப லிசைகள் பயிற்றி
மனத்திடர் மிகவவனேர்

விதுவெனு மெய்க்கலை மகள்கை யெடுத்த
விறற்கரு வியினிசையே
விழைதக வொப்பது சரத மெனத்தன்
விரற்செயல் புரிவுறமேற்

பொதுவர் மனைப்புகு புயற னெழிற்கை
பொருத்திய வளையொலியேர்
பொருவுமெனத்தன திதழ்கொள மிக்க
புனற்றலை யொடுமிளிரோர்

முதுகரு ணைக்கட றமருக மொப்ப
முழக்குக சிறுபறையே
முருகன லற்புத னருண மலைக்கண்
முழக்குக சிறுபறையே. 87

வேறு

வந்துறு கின்றவ ரஞ்சலி ரென்று
வகுத்தழை திருமுரசா
வம்பு செறிந்தவர் வெம்புதி ரென்று
மறுத்தொழி யருமுரசாச்

சிந்தை மருண்டயர் கின்றவர் துஞ்ச
றெளித்திடு பருமுரசாத்

திண்டிறல் கொண்டற மொன்றலர் நன்று
திருத்திடு பெருமுரசா
வந்தமிழ் கொண்டவ ரின்புற நண்பி
னளித்தளி தருமுரசா
வஞ்ச லகன்றெதிர் கின்றவ ரெஞ்ச
வழித்திடு செருமுரசா
முந்துறு பந்தனை சிந்திடு கந்தன்
முழக்குக சிறுபறையே
முன்றழ லென்றுரு வொன்றிய குன்றன்
முழக்குக சிறுபறையே. 88

**வேறு**

தோகைகொண் மாமயின் மேகநன் மாரி
துளித்திடு மொலியெனவே
சோர்வரு வானவர் சூரடு வாகை
துதித்திடு மொலியெனவே
யோகியர் நாடொறு மோர்தச நாடி
யுதித்தெழு மொலியெனவே
யோவலின் மாவிருள் போகுநர் சேவ
லுரத்தெழு மொலியெனவே
பாகம தாயின ரேர்பர நாத
பதத்தெழு மொலியெனவே
பாயிர மாமறை யோதுந ரோதல்
பயிற்றிடு மொலியெனவே
மோக மிலாதுறு மாதவர் பாலன்
முழக்குக சிறுபறையே
மூதரு ணாசல மீதுறு வேலன்
முழக்குக சிறுபறையே. 89

**வேறு**

ஒழிவில் கருத்தொடு தொழுநர்
களித்திடு பெருநிதியே
உயநினை கிற்பவர் மயலற
முற்பெற வருமதியே



இழிவில் பதத்துற வெழுமவ
ருக்குத வுறுமொளியே
யிணையி லருட்கட றுளையு
மவர்க்குளம் வருகளியே
கழிவில் செருக்கொடு மிகவக
லுற்றவர் திணியிருளே
கருது கலைப்பொரு கடலை
மதிப்பவர் துணிபொருளே
யழகு தமிழ்க்கொரு புலவன்
முழக்குக சிறுபறையே
யருண மலைத்திரு முருகன்
முழக்குக சிறுபறையே. 90

தமர மிகுத்திடு கடலெழ
லற்றவொர் சுவையமுதே
தகுமலர் மொய்த்துறு மதுகரம்
வைப்பறு தகைமதுவே
திமிர மகற்றிட வெழுன்மறை
வற்றுள னொளிர்கதிரே
திகழ்கலை மிக்குறல் குறைத
லகற்றிய குளிர்மதியே
பமர மொலித்துற மலர்மலர்
பற்றிலொர் நறுமணமே
பலவகை பெற்றிய நிரிதர
லற்றுய ரொருகுணமே
யமரர் படைக்கொரு தலைவன்
முழக்குக சிறுபறையே
யருண மலைத்திரு முருகன்
முழக்குக சிறுபறையே. 91

## 10. சிறு தேர்ப் பருவம்

இலகுற்ற வயிரத் தியற்றியமை வண்டிலு
மெழின்மர கதத்தச்சுநீ
டினியகோ மேதகத் தட்டுமேற் பவளத்
திருத்திய நிரைக்கால்களு

நிலவுற்ற நீலத்து மேன்முகடு மாடக
  நிறக்கலச மும்பொலிந்து
 நிழல்விதா னத்தினொடு குடைவடமு நித்தில
  நிறைந்துற வலங்கரித்து

வலனுற்ற நம்பரன் வைதிகத் தேருமிதன்
  வளனுற்ற தில்லையெனவே
 வானுற்ற விந்திரன் மான்முதலி யோர்சூழ
  மண்ணினொடு விண்ணுமெங்குஞ்

செலவுற்று வருகொற்ற மலர்வுற்ற நலனுற்ற
  சிறுதே ருருட்டியருளே
 திருமா றனக்கரிய வருணா சலக்குமர
  சிறுதே ருருட்டியருளே. 92

வெங்களப் பட்டவ ருடற்குவைக் குன்றேறி
  விளையாடு குட்டிவன்பேய்
 மிதந்தோடு குடர்மாலை கொள்வலென் றறியாது
  வீழ்ந்திடக் கைவிதிர்த்துப்

பொங்களக் கர்க்குநிக ராழமும் வேகமும்
  போற்றுபு பிடித்தீர்க்குமப்
 புலவுவாய்க் குழிகட் டிரங்குகொங் கைப்பெண்ணை
  பொருவுடற் றாய்ப்பேயையு

மங்களற் றுப்பட வலைத்துப் புரட்டியீர்த்
  தடுகரியொ டரிபரியைநே
 ரவுணர்பஃ றலைகவந் தங்களொடு செங்குருதி
  யாறவை யுருட்டியோடச்

செங்களத் தெங்கும் பெருந்தே ருருட்டினோன்
  சிறுதே ருருட்டியருளே
 திருமா றனக்கரிய வருணா சலக்குமர
  சிறுதே ருருட்டியருளே. 93

புகழுற்ற வமரர்பலர் புரமட் டளிக்கெனப்
  புரிசடைப் புங்கவற்குப்
 பொதுவற்ற முறையின்வரு பொருளுற் றமைத்தவப்
  பொருவற்ற வைதிகத்தே



ரகழுற்ற கடலதிர நிலனதிர வேகவூர்ந்
  ததினுற் றிருக்குமவரிவ்
 வகிலாண்ட கோடிபிர மாண்டமும் வணங்குமென்
  னத்தரா யினுமென்வர

மிகழுற் றகன்றிடற் கெண்ணலொண் ணாதென்ன
  விடையச்சு முரிவித்தவவ்
 விபமுகத் தண்ணறன திதயங் களித்தெழு
  மிளங்கிளைப் பேரன்பினாற்

றிகழுற்று நன்குசெல மகிழ்வுற்று நோக்கநின்
  சிறுதே ருருட்டியருளே
 திருமா றனக்கரிய வருணா சலக்குமர
  சிறுதே ருருட்டியருளே. 94

மறுதே ரிதற்கெதிர்வ தில்லையென வரமதின்
  மன்னுமிந் திரஞாலமா
 மாத்தே ரினைச்சூர வன்மனொடு நில்லாது
  வருகென நிறுத்திஞால

மிறுதேர்கொ லிதுவென வரன்றிரு வுளத்தா
  லியற்றிமு னளிப்பவளிதா
 னிசைவலவ னாகிமுன் றூண்டவண் பரியோ
  ரிலக்கமவை யீர்ப்பவிருளைத்

தெறுதே ரவன்றனைச் சிறைசெய்மைந் தற்றந்த
  திண்டிறலவ் வவுணர்தலைவன்
 சிங்கமொடு பேய்பரிக ளெவ்வெழுப தாயிரஞ்
  சேர்ந்திழுத் திடுபெருந்தேர்

சிறுதே ரெனப் பெருந் தேரூர்ந்து நின்றவன்
  சிறுதே ருருட்டியருளே
 திருமா றனக்கரிய வருணா சலக்குமர
  சிறுதே ருருட்டியருளே. 95

எறியொளிக் குலிசத்தன் வான்முழுது மின்பமுட
  னெழிலியந் தேரூரவு
 மீரிரு முகத்தவனு மிச்சைவழி யெங்குந்த
  னெகினவந் தேரூரவு

மறிதுயிற் பாற்கடற் கண்ணனு மகிழ்ந்துபுள்
ளரசவந் தேரூரவு
மாயிரத் தெட்டென்னு மண்டமுழு தும்போகி
யமர்விளைத் தெய்த்தசூரன்

மறிநெடுங் கடலினொரு மாவாகி யெழவேலின்
மற்றதனை யிருகூறிடா
மயிலினொடு சேவலுரு வாயெதிர்ந் திடவருளி
மலிபுவன முழுதும்வலமாய்ச்

செறிகலவ வம்மயிற் றேரூர்ந்து நின்றவன்
சிறுதே ருருட்டியருளே
திருமா றனக்கரிய வருணா சலக்குமர
சிறுதே ருருட்டியருளே. 96

வேறு

நாடி யிறையே நீயதிர்ப்பின்
ஞால மதிரு நளிகடலு
நரன்று துளும்புந் திசைக்களிறு
நடுங்கிப் பிளிறுங் குலமலைகள்

வீடிக் குலுங்கு மளவில்படம்
விரிக்கு மரவுந் தலைபனிக்கும்
விண்ணு மதிரு மிருசுடரும்
வீழு முடுக்கண் மிகவுதிருங்

கோடி கோடி யளவின்மிகக்
குறிக்கு மண்ட மவையடுக்குக்
குலையு மவைகள் குலையாமே
கோக னகக்கை வருந்தாமே

ஓடி மெலியா மேமெல்ல
வுருட்டி யருள்க சிறுதேரே
உண்ணா முலையாண் மகிழ்மைந்தா
வுருட்டி யருள்க சிறுதேரே. 97

அரிய தவமாங் கோயிலினு
ளாசின் ஞான மண்டபத்தி
னலகில் கலையா மமைச்சர்குழா
மருகு சூழ வாறாறாய்த்



தெரியுங் கருவி யென்னுமணிச்
சிங்கா தனத்தின் மிசையேறித்
திருவா ரருளா நெறிசேரச்
செங்கோல் பிடித்து முத்தியெனும்

பெரிய நாடாள் பவர்தலைக்கொள்
பேரா னந்த மாமுடியே
பிறங்கு மருள்வா னெழுமதியே
பிழைதீ ரன்பாற் பேணுமவர்க்

குரிய நிதியே யொண்சுடரே
வுருட்டி யருள்க சிறுதேரே
உண்ணா முலையாண் மகிழ்மைந்தா
வுருட்டி யருள்க சிறுதேரே. 98

ஆறு சமயங் களும்வணங்கு
மறுமா முகத்தெம் மருட்டேவே
யழகா வாடு மயிலின்வரு
மரிய மணியே வருணிதியே

மாறு படுசூர் மாளவிடு
வடிவே லரசே சீரலைவாய்
வருமோர் திருவே மலைகடொறு
மன்னு மருந்தே மதிஞருளந்

தேறுங் கதியே தெளிபவர்க்குச்
சிந்தா மணியே கற்பகமே
சிந்தைக் கினிக்குந் தீங்கனியே
தேனே கண்டே செறிந்துசுவை

யூறு மமுதே யுயிர்க்குயிரே
வுருட்டி யருள்க சிறுதேரே
உண்ணா முலையாண் மகிழ்மைந்தா
வுருட்டி யருள்க சிறுதேரே 99

வேறு

காமர் சகத்திர ராயினு மொப்பறு
கட்டழ காவானார்
கடவுட் பிடியொடு குறவர்க் கோர்கொடி
கட்கிசை காதலனே

தீமன முற்றவர் பாலணு காத
திருத்தகு மெய்த்தாளா
திகழ்தரு நீபநன் மகிழ்தொடை யாறிரு
திண்வரை பெறுதோளா

தூமதி வைத்த சடைப்பெரு மான்சொற்
சுவைபெறு திருவாயாய்
தொழத்தொகு தேவர் படைக்கொரு காவ
றுறப்பறு முதல்வோனே

ஓமெனு மெய்ப்பொரு ளேயரு ணைக்க
ணுருட்டுக சிறுதேரே
யுமைக்கொரு பால னெமக்கருள் சீல
னுருட்டுக சிறுதேரே. 100

அருட்கட லான கறைக்கள நாத
னளித்தருள் மகன்வாழ்க
வகத்திருள் போக மிகுத்துறை மூவி
ரருட்டிரு முகன்வாழ்க

விருட்கடல் போலு மறக்குலர் வீட
விறுத்தருள் குகன்வாழ்க
வினித்திடு தேவ ரிடர்க்கட லேறி
யிடத்தரு சுகன்வாழ்க

திருத்தணி யாதி மலைச்சுடர் வாழ்க
வெனத்திகழ் தமிழாலேர்த்
திருப்புக ழோதி யிருப்பவர் பார்மெய்
செழித்திட வதன்மேலோ

ருரைப்பரு வாழ்வி னிருத்திடு வேல
னுருட்டுக சிறுதேரே
யுனற்கமை சோண கிரிக்கும ரேச
னுருட்டுக சிறுதேரே. 101

திருவருணை முருகன் பிள்ளைத்தமிழ் முற்றிற்று



உ

# தேவகோட்டை
# முருகன் பிள்ளைத்தமிழ்

## தண்டபாணி சுவாமிகள்

### காப்பு-வெண்பா

ஆழமலி நெஞ்சத்(து) அடியார் பலரறிய
வேழமுகங் கொண்டொளிர் செம் மேகமே-வாழருணைக்
கிள்ளைக் கவிக்குவப்பான் கேட்கப் பகர்தேவைப்
பிள்ளைக் கவிக்குனருட் பெய். 1

## 1. காப்புப் பருவம்

### திருமால்

மணிநிலவு வாயிற் புறத்தரண் மனைத்திரு
மலிந்ததென் மதுரை ஆளும்
மன்னர்புரி யுந்தவமெ னத்திரு வுருக்கொண்டு
மாநிலத் துயிர்கள் வாழத்

திணிநிலவு மேருவைச் செண்டா லடித்தெழிற்
றேவைமா நகரில் வந்து
செட்டிகள் குலத்திறை யெனப்பெயர் தரித்துமகிழ்
செவ்வேல னைப்புரக்க

பணிநிலவு துத்திப் பணாடவி மிதித்தாடல்
பயில்பங் கயத்து ணைத்தாட்
பசுமுகிலை வென்றிவிற் பார்த்தன்உயி ருய்யஒரு
பகலையிர(வு) ஆக்கினானை

அணிநிலவு சங்கெடுத்(து) ஊதிஇக லோர்குலம்
அடங்கலு மயங்கல் காணும்
ஐயனைப் பதின்மர்புகழ் துய்யனை நினைந்துருகி
அநுதினம் பணிகு வோமே. 2

## பரமசிவன்

*தானதன தானதன—தந்தாத் தனத்தனா*

பாதிமதி தாதகிநன் நீரிதழி ஆதியமர்
பாரம்அக லாதசடி லக்காட்டனைப் பொலார்
பால்இயம னேநிகர்கி ரீடிசிலை மோதஒரு
பாணம்அருள் வேடனுரு வத்தீர்த் தனைப் பொனேர்
பாவைகொளும் ஊடலத னால்மெலிகு வான்உரைசெய்
பாடல்விழை வால்அவள்ம னைப்பாற்செல் ஒற்றர்நேர்
பான்மையனை யாழ்முயல்ந லோனொருவன் ஆளென்மொழி
பாரறிய ஓதியும்இ சைத்தாற்றல் உற்றதோர்

ஆதியைம யேசனைஉ மாபதியை நாரணனொ(டு)
ஆரணன்அ நாள் அமர்இ டற்றீர்க்கை நத்தலால்
ஆரழல தாநிமிர்ச தாசிவனை ஈடில்கரு
ணாநிதியை வேள்பொடிப டத்தீய்த்த கட்பராய்
ஆகுலமெ லாம்ஒழியு மேலவருள் ஆடல்செயும்
ஆர்வனை முன் நால்வர்கள்உ யப்பார்ப்ப தற்கெனா
ஆலடியில் மேயகுரு தேசிகனை மாசுதவிர்
ஆகமவி னோதனைமி கப்போற்றி டற்கொள்வாம்;

மேதினியெ லாம்நொடியு ளேவலம தாகவரும்
வேகமயில் வாகனனை வெற்பாட்சி மிக்கசீர்
மேவியவி சாகனை மகாரதர்கள் பேணும்நவ
வீரர்தொழும் நாதனைவி றற்சூர்ச்செ குத்தகூர்
வேல்குலிசம் வாள்பலகை வாளிசிலை சூலம்நிகர்
வீறுபடை தோய்தரு திறற்றோட்பெ ருக்கம்ஆர்
மீளியைஎ னோடுபல வாய்மைசொலி நாடுதொறும்
வீடுதொறும் ஏகிவெரு ளற்காட்டும் வித்தைதேர்

தீதில்அருள் நீதியுடை யானை இமை யாஅமரர்
சேனைமிகை சூழ்தலைவ னைக்கார்த்தி கைப்பெணார்
சேலனைய வாள்விழி யெலாம்நுகரும் ஏர்கொடவர்
சேயமுலை யீயும்அமு தத்(து)ஏப்ப மிட்டுநீள்
சேயைமக வான்மகளும் வேடர்தரு மாதும்நனி
சேருமண வாளனை அடற்கூக்கு ரற்செய்ஓர்
சேவலுறு கேதனனை ஈகைமலி சீர்நிலவு
தேவைநகர் வாழ்முருக னைக்காத்த ளிக்கவே. 3



## பார்வதி

*தானன தானன—தய்யனத் தாத்தனா*

மேதகு சீரிம வான்மகிழ் கூர்எழில்
மேனைமி னாள்தரு செல்வியைத் தீக்கணால்
வேள்உடல் நீறமு னாள்முனி வார்மயல்
மீறிடு மாறுசெய் தையலைப் பாச்சொல்வார்

ஏதமெ லாம்அறும் வாழ்வருள் வாளைநல்
ஈரமு ளாருணர் கிள்ளையைப் பேர்க்கொணா
ஈரிரு மாமறை மூலம தாமிளிர்
ஈடுறு கோமள வல்லியைப் போற்றுவாம்

மாதவர் யாவரும் நாணுற நீடொளி
யார்வடி வேல்புனை கையனைப் பூட்கைமா
வால்வரு போர்வையு ளார்விழி யால்அருள்
ஆறிரு தோள்பெறு பிள்ளையைப் போர்க்குநேர்

சீதரன் ஆழிகொள் வான்விழ மோதிய
தீரனை வேடுவர் கள்வனைப் பார்த்தன்ஊர்
தேர்தரு வானிகர் சீலனை நீர்மலி
தேவையில் வாழ்முரு கையனைக் காக்கவே. 4

## விநாயகர்

*தானத் தனதன தானனத் தாத்தனா*

தானக் கலுழிகொள் மாமுகத் தாற்பலோர்
தாமுற் கருதுக ணாதிபற் கார்க்கொண்மூ
வானத் தமுதம தேயெனத் தேக்குநீர்
வாவிக் கரையில்வி நாயகற் போற்றுவோம்;

ஏனற் குறமகள் கேள்வனைக் கூர்த்தவேல்
ஏயப் புனைதரு தோளனைப் பூக்கள்தோய்
தேனத்(து) அளிபயில் சோலையிற் சீர்த்ததோர்
தேவைப் பதிமுரு கேசனைக் காக்கவே. 5

## திருமகள்

நான்முகப் பிரமனைத் தந்தமலர் உந்திகமழ்
நாரணன் உரத்தில் வைகும்
நல்லாளை உம்பர்முதல் எம்பரும்வி ரும்புபல
நாகரிகம் நல்கு வாளை

நூன்முழு துணர்ந்தவர் தொழுங்கலச மாமுனி
நுவன்றருள் புகழ்ச்சி யாளை
நுண்ணிடைச் செந்திரு மடந்தையை நினைந்துதினம்
நூறுதரம் அஞ்ச லிப்பாம்;

வேன்முதற் பகர்பல படைப்பொலி வுறுங்குமர
வேள்தனைக் குறவர் ஏனல்
மேவுமுது வேதியனை வெண்ணிறச் சேவலணி
மின்னுகைக் கோள னைச்செந்

தேன்முரல் கடப்பமலர் மாலையொடு தண்டும்
திருக்கைவே லும்பு னைந்து
தேவைமா நகரில்இரு தேவிமார் நடுநிலவு
செட்டியை அளித்த ருளவே. 6

## சரசுவதி

கம்பன் வருந்தி இரத்தலுந்தன்
கமல மலர்த்தாட் சிலம்புதவும்
கருணைக் கடலைப் பலகோடி
கலையும் வழுத்தக் களிகூரும்

செம்ப வளவாய் ஓதிமத்தைச்
செறியும் நிரைக்கால் வரிப்பூரம்
செலுத்து மவளைப் பலகாலும்
தினமும் நினையச் சலியேமால்;

வம்பர் உரத்து நிணம் குடிக்கும்
வடிவேல் பிடித்த கரத்தானை
மணிமா மயிலிற் பவனிவரும்
வளமைக் குமர குருபரனை

உம்பர் புகழுந் தமிழ்த் தேவை
யூரில் இறைவன் தழல்நயனத்(து)
உதிக்கு முருகப் பெருமாளை
உரிமை யொடுகாத் திடஎன்றே 7

## நவக்கிரகம்

*தானன தந்தன தானன தந்தன தானன தந்தனனா*
ஆதவன் அம்புலி சேய் புலவன் குரு
ஆரும் இரண் டுயர்கோள்
ஆயுள்த ருஞ்சனி ஓரிரு வெங்கடு
ஆர்அர(வு) என்பனவே



போதவும் நன்றெனும் நூலுணர் கின்றவர்
போம்வழி கண்டெழிலார்
பூதவு டம்பத னாலும் வணங்கிடு
பூரண அன்புறுவாம்

வேதமு டன்சிவன் ஆகம மும்பகர்
வீடுவி ரும்புநர்நேர்
மேவிக டம்புரி தாள்பெறு கந்தனை
வேடர்த ருங்கொடிபால்

நீதயை இன்றுசெய்(து) ஆள்என வும்புகல்
நேயனை உம்பரெலாம்
நேடும் நலந்திகழ் தேவையின் மைந்தனை
நீடுபு ரந்திடவே. 8

## மெய்ப்பொருள்

கொற்கைஅதி பன்றனது கூன்உடல் நிமிர்த்தழற்
கொடுநோய் தவிர்த்த நீற்றைக்
கோதறும் உருத்திராக் கத்தை ஒரு பொதுநலம்
குலவுகல் லாடை தன்னைக்

கற்கையொடு கேட்கைஅருள் மாதவமு தற்றொனூல்
கழறுவன முற்றும் உற்றுக்
காசினிக் குதவுதிறல் நாடுமெய் அடியவர்
கழற்றுகளை அஞ்சலிப்பாம்

விற்கைவன வேடுவர்வ ளர்த்தகிளி அனையாள்தன்
வியன் எழிற்(கு) உருகுவானை
வேழமகள் கேள்வனைச் சங்காழி மால்பகரும்
வென்றிவேற் படையு ளானைத்

தெற்கையிட மாவுடையன் அணுகாது பச்சிலைத்
திருநீறு நல்கு வானைத்
தேவைநகர் வாழவரு சிவகுரு பரன்றனைத்
தினமும் புரப்ப தற்கே. 9

## பல தெய்வம்

சைவ முதலா மறை பகரும்
சமயம் ஆறும் முடிவில்உணர்
சமயா தீதப் பதத்தில் நின்று
தவத்தோர் நினைவே சகளம்எனும்

தெய்வ நிலைதேர்ந் துயிர்வருந்தச்
செய்யா விரதத் தினர்குழுவிற்
சேர்ந்து பழகி அவரவர்சொற்
றிறங்கண் டுரைத்துத் தினம்பணிவாம்

ஐவர் மனைவி அலமரல்கண்(டு)
அளவில் கலைமுன் அளித்தானுக்(கு)
அருமை மருக னாங்குகனை
அருணைக் கிளிசொற் றுதிவிழைவார்

மெய்வந் தனைகேட் டுவப்பானை
வேலு மயிலும் துணையென்பார்
மிகுக்குந் தேவைப் பதியானை
விரும்பும் நெறிகாத் திடஎன்றே. 10

## பொதுத் தெய்வம்

*தானன தத்தந்த—தானனத் தாந்தனா*

ஆரண முற்கண்ட நூல்கள் உரைக்கின்ற
தாகும்அ ருட்பொங்க வாரியைச் சீர்த்தநீ
ராளர் உளத்தின்கண் ஊறிய கற்கண்டை
ஆவிய னைத்துஞ்செய் சோதியைக் கோட்டுமால்

வாரணம் ஒக்கும்பல் பாவலர் பற்றின்ப
வாழ்வினை உத்துங்க நீதிவித் தாச்சொல்சீர்
வாய்தரு கட்சிங்கம் நேர்சில ருட்டுன்றும்
வாய்மையினைச் செஞ்சொல் மாலையிட்
டேத்துவாம்

காரண னற்றங்கை பால்நுகர் முச்சங்க
நாவல னைச்செங்கை வேலனைத் தாக்குபோர்
நாடும்அடற் செம்பொன் மேடம்ந டத்(து)உம்பர்
நாயக னைக் கந்த சாமியைச் சேற்கணார்

காரண மிக்கன்றி ஆடல்வி ளைத்தன்பர்
காணவெ றுக்கும்பல் பூண்ஒளிக் காட்சிசால்
காமர்வி யப்பொன்று தேவைந கர்த்தொண்டர்
காதலு டைத்தண்ட பாணியைக் காக்கவே. 11



# 2. செங்கீரைப் பருவம்

### அம்பிகை முருகனை அருமை பாராட்டல்

பந்தைநிகர் மென்மொழிப் பார்ப்பதிதன் மணவாளர்
பாலலோ சனம் அளித்த
பாலகன்எ னக்கண் டெடுத்துச்சி மோந்தெழிற்
பங்கயச் செங்கை மிசைவைத்(து)

எந்தையெனல் முதலாய அருமைமொழி பலகூறி
இனிதுநீ ராட்டி ஆற்றி
இலகுதிரு வெண்ணீ றணிந்துபுவி உய்யும்நலம்
எண்ணிஒரு பொட்டும் இட்டுத்

தந்தையணி யும் பணிகள் அணியாது மாதுலன்
தன்மனைவி கண்டு வப்பத்
தக்கபணி பலபூட்டி ஞானமொடு சித்தியும்
தரும்அமு தருத்தி முத்திச்

சிந்தைமகிழ் கூர்வது தெரிந்துவளர் சிறுவனே
செங்கீரை ஆடியருளே
சேவலங் கொடிநிலவு தேவையம் பதிமுருக
செங்கீரை ஆடியருளே. 12

### முருகனைப் பெறத் தவ முயன்றவர் பண்பு

மைதரு மிடற்றின் அழல் வரையெனப் பரமன்ஒரு
வடநீழ லிடையி லிருந்தும்
மணிமுகிலை அனையநெடு மால்அலை
கடற்கண்உறு
மாசுண மிசைக் கிடந்தும்

பொய்தவிரும் நான்மறை விதித்த புத் தேள்ஒரு
புதுக்கமல மலர மர்ந்தும்
புரவிமகம் நூறியிற் றியமகிபன் அமையெனப்
பொன்னியின் கரையில் நின்றும்

கைதவர் மனம்பொரு சிறைச்சாலை யிடை உம்பர்
கட்டமுற் றும் துறந்(து)ஓர்
கானிடை திரிந்துமுது சூர்தரு பெருந்துயர்
கழிந்துவப் பதுகு றித்துச்

செய்தவ முழுக்கஒரு வடிவான கந்தனே
செங்கீரை ஆடி யருளே

சேவலங் கொடிநிலவு தேவையம் பதிமுருக
செங்கீரை யாடி யருளே. 13

### ஆறுமுகங்கள் அமைந்த விவரம்

கூர்ந்தமதி யாளருக் கானந்த நிலயம்
கொடுத்தருள் வல்ல குருவும்
கொக்கிறகு மதியிதழி ஆதிய அணிந்தருட்
கூத்தாடு கின்ற சிவனும்

ஆர்ந்தணுவில் அணுவாகி நின்றுயிர்த்
தொகைமுழு(து)
அளித்தருளும் அம்மை யாரும்
அகிலமொரு பதினாலும் உண்டுண் டுமிழ்ந்தளவில்
அவதாரம் ஆகு வானும்

நேர்ந்த அவல் பொரிகடலை ஆதிய படைப்பவர்
நினைப்பவை முடித்து ளானும்
நித்தநித் தம்ககன வெளியில்எவ ருக்கும்அவர்
நேரென நிலாவு கதிரும்

சேர்ந்தறு முகத்தொடொரு திருவுருக் கொண்டவா
செங்கீரை ஆடி யருளே
சேவலம் கொடிநிலவு தேவையம் பதிமுருக
செங்கீரை யாடி யருளே. 14

### முருகனுக்குள்ள முறைகள் உரைத்தல்

அத்தருக் கும்கலப மயிலனைய சாயலுறும்
அமலைக்கும் மதலை யாகி
ஆனைமுக னுக்கும்நவ வீரருக் கும்பொருவில்
அளியுதவு துணைவ னாகிக்

கைத்தலத்(து) ஆழிபுனை மாயனுக் கும்திருக்
கமலைக்கும் மருக னாகிக்
கண்எட்டு ளானுக்கும் மதனனுக் கும்பெருங்
கருணைமைத் துனன்ஆகி ஓர்

மத்தகக் களிறுதவு மகளுக்கும் மானருள்
மகட்கும்மண வாளனாகி
மலயமுனி அருணகிரி சிவஞானி போரூரில்
வரு தவசி ஆதி யாய



சித்தர்பற் பலருக்கொர் குருவான குமரனே
செங்கீரை ஆடி யருளே
சேவலங் கொடிநிலவு தேவையம் பதிமுருக
செங்கீரை ஆடி யருளே. 15

### முருகன் ஆடும்போது ஆடக் கூடியவை

உம்பர்முனி வரர்சித்தர் ஆதியர்கள்
உள்ளத்தொ(டு)
உலகங்கள் பலவும் ஆட
உயர்மறையும் ஆகமமும் ஆதியா கியநூல்கள்
உள்ளவை யனைத்தும் ஆட

வம்பவிழ் கடம்புகுர வம்செச்சை கூதள
மலர்ந்தசிறு சடிலம் ஆட
மதியம்நிகர் வதனங்க ளிற்சிறிது வெயர்வாட
வார்செவிக் குழைகள் ஆட

நம்படியர் தலைதொடும் கரபந்தி ஆட இரு
நளினமல ரடிகள் ஆட
நகுமணிக் கழலொடு சிலம்புகல கலஎன
நவிற்றொலி விளைத்தாட ஓர்

செம் பவளவரையசைந் தாடியதெ னச்சிறிது
செங்கீரை ஆடி யருளே
சேவலங் கொடிநிலவு தேவையம் பதிமுருக
செங்கீரை யாடி யருளே. 16

### வேறு

### மகுடம்

### கயல்மீன்கள் விளங்குமிடம்

துங்கமத னன்றனது வார்துகிற் கொடியினில்
தோகைநல் லார்கண்களில்
தொடியணிகை விரலிற் கணைக்கால் களிற் சுருதி
சொல்நெறி வழாதபெரியோர்

தங்கள்செவி யில்புனல் வளங்குறைவு றாதுயர்
தடங்களில் சாலிவயலில்
தவயோக மலிகுரவர் சீடரைப் பார்க்கின்ற
தன்மையில் கதிருமதியும்

பங்கமொடு நுழைதரப் பெரிதுநீ டிப்புலவர்
பதியிலுள தருவைவென்று

பசுமலர்த் துணர்விரித் துக்குணலை யிடுகின்ற
பசுமலர்த் தலையில் என்றும்

அங்கயல் நலங்குலவு தேவைநக ராதிபா
ஆடியருள் செங்கீரையே
அயில்வேல் எடுத்திணையில் மயிலேறும் ஒருவனே
ஆடியருள் செங்கீரையே. 17

**வேறு**

**நாட்டிலுள்ள எருமைகளின் பெருமை**

கருமைக் கரியென்(று) ஐயுறுவார்
கனைக்குந் தொனியால் தெளியவரும்
கவைக்கால் மேதி யினம்சிலபோய்க்
கரும்பைச் சுவைத்துக் கடைவாயால்

பருமைத் தரள மணியுமிழ்ந்து
பழுதென் றிகழ்ந்தா லெனத்திரும்பிப்
பனிமென் மொழியார் பலர்ஒதுங்கப்
பங்கே ருகப்பூந் தடத்துழக்கிப்

பெருமைப் பொழிலின் கனியிடறிப்
பிரச மலர்கால் உகுத்தவற்றிற்
பிரிய மிலவாய்ச் சிறிதருந்திப்
பெய்பா லொடுதம் தொழுவில்வைகும்

அருமைத் திருத்தே வையில்முருகா
ஆடியருளாய் செங்கீரை
அணிசேர் பாண்டித் தமிழ்வணிகா
ஆடியருளாய் செங்கீரை. 18

**வேறு**

**மகுடம்**

**உலகினியல்பு உரைத்தல்**

*தானன தானன தானன தானன*
*தானன தந்தான*

நாவலர் யாவரும் ஊர்தொறும் ஏகியும்
நாணமி ழுந்தார்கள்
நான்மறை தேர்பெரி யோர்களை ஏசும்அஞ்
ஞானர்ம லிந்தார்கள்



காவலர் பூமகள் கோவென வாய்விடல்
காணமு யன்றார்கள்
காதுத லேதொழி லாம்அதி பாதகர்
காதல டைந்தார்கள்

சேவல தேஉயர் வாமென ஓதிய
சீலர்கு றைந்தார்கள்
சீரியர் வாழ்வுற ஏனையர் தாழ்வது
தேடியு மூன்றேனுள்

ஆவலெ லாமுடி வாகிடு மாறினி(து)
ஆடுக செங்கீரை
ஆசறு தேவையில் வாழ்மு ருகாநனி
ஆடுக செங்கீரை. 19

*தானா தனதன தானா தனதன*
*தானா தந்தான*

நானா விதமய லால்நான் மெலிதலை
நாடாய் என்றாலுன்
ஞானா கரமிது தானோ எனஎணி
நாவா லுங்கூறி

ஊனார் தருமவர் பேர்ஊர் வரைபொருள்
ஊடே யுங்காதல்
ஓவா தெழநலி வேன்நீ நவில்வன
ஊறார் வம்போசொல்

வானா டரும்அகல் பூலோ கருமிக
வாழ்வான் நின்றாளில்
மாறா விழைவுறல் வீணா கிடுமுனம்
வாவா என்பேனுள்

ஆனா அருளுறு மாதே வையில் எளி(து)
ஆடாய் செங்கீரை
ஆறா னனமுரு கேசா ஒருசிறி(து)
ஆடாய் செங்கீரை. 20

*தந்தன தானன தந்தன தானன*
*தந்தா தந்தான*

மந்திர மூலமு ணர்ந்தினி(து) ஓதுபொன்
வண்டே அன்பாளர்

வண்டமிழ் மாலைவ ரைந்துப ராவும
ருந்தே நம்பார்செய்
தந்திர யோகம்அ றிந்தணு காதப
தஞ்சேர் கந்தாமெய்
தங்கிய மாதவர் சிந்தனை யூடமர்
தந்தாய் விண்பேணும்
இந்திர கோடிதொ ழுங்கும ராகுர
வின்தார் கொண்டாய்பொய்
இன்றிய நாவினர் தந்தலை வாமயில்
என்றோ துஞ்சீர்கொள்
செந்திரு நாதன்வி யந்துசொல் சேவக
செங்கோ செங்கீரை
திண்பொலி தேவையில் வந்தமர் தேசிக
செங்கோ செங்கீரை. 21

## 3. தாலப்பருவம்

### சங்கு விளங்குமிடம் இவையென்பது

செங்கண் விடையார் நெடுஞ்செவியில்
சிவையா தியராம் பலமடவார்
செழும்பொற் கரத்தில் மணிப்பூணும்
திருமங் கலமுந் திகழ்கழுத்தில்

பங்கப் பழனப் பெரும்பரப்பில்
பங்கே ருகப்பூந் தடங்கரையில்
பகட்டு மதம்நா றியமறுகில்
பசுமைக் கதலி இளங்குருத்தில்

பொங்கக் கவின்பூ விரிக்கும் வரிப்
பூக மடலில் அகல்முன்றிற்
புனற்சால் அருகில் பெருஞ்செல்வம்
புனைவார் அகங்கைப் பொறிநலத்தில்

சங்கம் மிளிரும் புகழ்த்தேவைத்
தவமே தாலோ தாலேலோ
தமிழ்ச்சொற் புலவர் குலத்தினுக்கோர்
தலைவா தாலோ தாலேலோ. 22



### திருஞான சம்பந்தராக அவதரித்தது

புண்பட் டுளதோர் குலச்சிறையும்
பொன்னித் துறைக்கோன் திருமகளும்
பொருவில் களிவா ரியில்மூழ்கப்
போர்வேல் வழுதி புரைதவிர்தன்

பண்பிற் றிகழ வளமதுரைப்
பரமன் அருட்பூ சனைநடக்கப்
பாண்டித் துயரம் பறிபோகப்
பறிக்குந் தலையார் கழுவேறத்

திண்பெற் றுளதோர் கவுணியனார்
தெண்ணீர்த் தடம்புக் கியற்றுதவம்
சிறக்க மறைநூற் பொருள்பலர்க்கும்
தெரியத் திருநீற் றிசைவிளங்கச்

சண்பைப் பதிபோய் வருந்தேவைத்
தருவே தாலோ தாலேலோ
தமிழ்ச்சொற் புலவர் குலத்தினுக்கோர்
தலைவா தாலோ தாலேலோ. 23

### வள்ளி திருமணம்

வண்ணம் சிறந்த முலைக்குறப்பெண்
வனப்(பு) ஓர் முனிஓ திடல்வினவி
வானத்தமரர் குலந்துதிக்கும்
மகவான் மகளுட் கருத்தயர

எண்ணம் பெருக்கிக் கிழமுனிவன்
என்றோர் வடிவும் எடுத்துமுதிர்
ஏனற் புனத்திற் றடியொடுபோம்
இசைமிக் குரைப்போர்க் கெளியோனே

கண்ணம் புயமா யவன் மருகா
கலச முனிவன் தொழும்குரவா
கமலா சனத்தான் அழப்புடைத்தாய்
கடம்பும் குரவுங் கலந்தணிவாய்

தண்ணம் பொழிற்றே வையில் இறைவன்
தனையா தாலோ தாலேலோ
தமிழ்ச்சொற் புலவர் குலத்தினுக்கோர்
தலைவா தாலோ தாலேலோ. 24

### ஆட்டு வாகனம் ஊர்ந்த விவரம்

மழமால் விடையார் நிகர் ஒருவன்
வானத் தினர்க்கும் தவத்தோர்க்கும்
மறையோர் களுக்கும் நலம்உதிப்ப
வஞ்சத் தகுவக் குலமடவார்

அழமா மாயை தரும்புதல்வர்
ஆதி யோர்கள் இறுமாப்போ(டு)
அழியக் கருதி மணியெறியும்
அலைவா ரிதிசூழ் அம்புவியின்

நிழலார் இமய மலையருகில்
நேமித் தடுக்கின் மிசையிருந்து
நெல்லின் பொரிநெய் அடையாதி
நிறையச் சொரிகால் நிவந்தொலிக்கும்

தழலூ டுதித்துக் குலவுபெருந்
தகரா தாலோ தாலேலோ
தமிழ்ச்சொற் புலவர் புகழ்தேவைத்
தலைவா தாலோ தாலேலோ. 25

### முத்து விளங்குமிடம்

பரவுந் திரைநீர் வயற்சாலிப்
பயிரின் கதிரில் கழைக்கணுவில்
பாக்கு மரத்தில் பசும்மூங்கிற்
பண்ணைப் பெருக்கில் பலவாழைத்

திரளில் கமல மலர்த்தடத்தில்
சினைச்சங் குலவுந் தெருத்தொகையில்
செவ்வேல் விழியார் முலைத்துணையில்
சிறியோர் உருகுந் திருநகையில்

உரலிற் றிகழ்கால் கரிமருப்பில்
உலவா மழைமா முகிற்றிரளில்
உதிர்பூ அருந்தும் ஆன்எயிற்றில்
ஒண்மைத் தவள முழுமதியில்

தரளம் பொலியுந் தமிழ்த்தேவைத்
தலத்தாய் தாலோ தாலேலோ
தமிழ்ச்சொற் புலவர் பலர்க்கும்ஒரு
தலைவா தாலோ தாலேலோ. 26



### வேல் தாக்கப் பெற்ற இடம்

நீடு மயக்கந் தரும்கிரியை
நிணம்உண் டுவக்கும் கருங்களிற்றை
நிரைமா முகம்ஆ யிரத்(து) அரியை
நிறைநீர்க் கடலுள் வளர் மாவைக்

கூடும் அடியார் புகழருணைக்
குவட்டின் குடபால் எழுவரையைக்
குறைதீர் புலமைத் திறற்கீரன்
குறுகும் குகையைக் கொடும்பேயைப்

பாடும் கிளிவாய்ப் பனுவலில்ஓர்
பாடல் உரைப்பான் றனைஉறுக்கும்
பலர்மார் பகத்தைக் கவுமாரப்
பத்தர்க்(கு) இகலாம் அவர்குலத்தை

சாடும் வடிவேற் படைக்குமரா
தாலோ தாலோ தாலேலோ
தமிழ்ச்சீர்த் தேவைப் பதிமுருகா
தாலோ தாலோ தாலேலோ. 27

### வேறு

### குரங்குகளின் ஆடல்

பனிமதி வரக்கண் டுவக்குங் கருங்கடற்
படுபுனல்குடித்த மேகம்
பளபள பளீரென்று மின்னி உரும் ஆர்த்துவரல்
பார்த்துள குரக்கி னங்கள்

கனிதரு பலாவ்தனை மாவைவிட் டுச்சிறிய
கமுகினில் கதலி தன்னில்
கைநொடிப் பளவினிற் பாய்ந்துவிரி பாளையுட்
கண்ணிறுக மூடி வைகி

நனிபொருமி மழைத்தாரை யிற்சிறிதும் மெலியாத
நன்னலம் பெற்று வந்து
நாரணன் சிறுமகன் விழாநடத் திக் குதிகொள்
நறுமலர்ப் பொழில் விசாலத்

தனிவளம் புனைதேவை மாநகரில் வேலவா
தாலேல தாலேல வே
தண்டணி தடங்கைத் தமிழ்க்குமர குருபரா
தாலேல தாலேல வே. 28

**வேறு**

**சந்தம்**

*தந்தன தானன தந்தன தானன—தானா தானானா*

இந்திரன் நாடுபு ரந்துயர் சீர்சொலில்
ஏனோ கேளாய்நீ
இன்பவி னோதமி குங்குற மாதுடன்
யார்பால் நேர்வாயோ

கந்திறு தாள்உறு செம்புகர் மால்வரை
காணா மேனாள்ஓர்
கங்கையி னூடுபெ றுங்கொடி பேணிய
கால்நா டேனோயான்

நொந்தியல் பாடல ணிந்தும்ஐ யோவினை
நோயூ டேசேரேன்
நொண்டிசொல் பாவல னும்புகழ் மேவில
னோவீ ணாவேனோ

சந்திர சேகரர் தந்தருள் பாலக
தாலோ தாலேலோ
தண்பொலி தேவையில் வந்தமர் வேலவ
தாலோ தாலேலோ. 29

*தத்தன தானன தத்தன தானன—தானா தானானா*

அத்தனும் ஆயியும் நிற்கரு காயினர்
ஆடூர் நீஆன்மீ(து)
அப்படி யேறிய தெத்தினமோ விளை
யாடா(து) ஓய்வாயோ

புத்தமு தேநிகர் சொற்றிரி வார்கவி
பூண்நாள் ஏதாலோ
பொக்கமில் வாய்மையு ரைத்தனை வீணது
போகாதே கா கா

முத்தலை வேல்இய மற்கய ராதவர்
மோகா காராஓர்
முத்தம்என் ஆகம்அ ணைத்தருள் நீர்கொடு
மோவாய் மூடாதே

சத்தச தாசிவன் மெச்சிய தேசிக
தாலோ தாலேலோ



தட்டறு தேவையில் உற்ற மனோகர
தாலோ தாலேலோ. 30

*தானன தந்தன தானன தந்தன—தானா தானானா*

ஆரண மந்திரம் ஆகம தந்திரம்
ஆனாய் தாலேலோ
ஆரல்ம டந்தையர் மோகமு றும்குர
வாரா தாலேலோ

வீர மலிந்தெதிர் சூரனை வென்றவை
வேலா தாலேலோ
மேதகு குன்றுதொ றாடல்செ யுங்குக
வேளே தாலேலோ

கோரமி குந்தகர் மீதிவ ருஞ்சிறு
கோவே தாலேலோ
கோதறு தொண்டருள் நாடலில் வந்தவிர்
கோலா தாலேலோ

சீரமை கின்றதொர் தேவையி டந்திகழ்
தேவே தாலேலோ
சீதர னும்புகழ் கூறும் நலம்புனை
சேயே தாலேலோ. 31

## 4. சப்பாணிப்பருவம்

### முருகன் சப்பாணி கொட்டுதலால் கொட்டும் பொருள்கள்

வண்குலவு சோலைதொறும் உலவைவந் துலவுதலின்
மலர்கொட்ட முகிலினங்கள்
வானரம்ந டுங்கமயில் களிகூர ஓயாத
மழைகொட்ட வான ளாவும்

திண் குவடு தொறும்நின்று கல்லென இரைந்துபல
தெள்ளருவி கொட்ட இமையாத்
தேவர்அவர் மாதரொடு வந்(து) எயினர் அறியாது
சிறிதுகண் கொட்ட ஒருபாற்

பெண்குடிகொள் ஆதிப் பிரான் அனையர் மலர்மகப்
பேரழலில் அவிகள் கொட்டப்
பெருமுலைக் குறமகளிர் பிணையினது தோல்கொடு
பிணித்தமண முழவு கொட்டும்

தண்குறிஞ் சிக்கிறைவ னானகும ரேசனே
சப்பாணி கொட்டி யருளே
தமிழ்வளம் பெறுதேவை நகர்புரந் தருள்வேல
சப்பாணி கொட்டி யருளே. 32

வானவர் பிரானரண் மனைக்கோபு ரத்தடியில்
மருவுமும் முரசுகொட்ட
மறிதிரைப் பாற்கடலின் மதியொடு பிறந்தபல்
மங்கையர்கள் செங்கை கொட்ட

மீனவன் வளர்த்ததமிழ் வாரிநுகர் முகிலனையர்
மிகுகவிதை மாரி கொட்ட
வெண்ணீ றிடாப் புலையர் குலவே ரறக்கறுவும்
வீரர் தம்தோள் கொட்டவிற்

கானவர் குறிச்சியிற் றொண்டகம் கொட்டக்
கருங்குழற் கற்றை படரும்
கனகமயில் நிகர்பதும கோமளை முதற்பலோர்
கண்கள் நீர்கொட்ட லெண்ணித்

தானவர்கள் நெஞ்சகம் பறைகொட்ட ஒருசிறிது
சப்பாணி கொட்டியருளே
தமிழ்வளம் பெறுதேவை நகர்புரந் தருள்வேல
சப்பாணி கொட்டியருளே. 33

### முருகன் கைகள் தொடுமிடம்

காமனை யெதிர்த்தவர் சடைக்கொன் றையும் கவுரி
கார்த்திகை உடுக்கள் என்னும்
கன்னியர்கள் கண்களும் கனகநக ரிற்குலவு
களிறுதவு மகள் கொங்கையும்

கோமளக் குயிலனைய குறமகள் பதங்களும்
குட்டுணும் பிரமர் தலையும்
குளிர்பொழிற் றிருவருணை மாநகரில் ஒருபழைய
கோபுரத் துய்ந்த கிளியும்

நாமகள் படிக்கக் கொடுத்த சுவடியும் வழுதி
நலமுற எடுத்தநீறும்
நம்பியு மறந்த ஒரு தொண்டன்மனை யிற் களியும்
நாடொறுங் கமழ மலரும்

தாமரை மலர்த்திரள் எனத்தகு கரங்களாற்
சப்பாணி கொட்டியருளே



தமிழ் வளம் பெறுதேவை நகர்புரந் தருள்வேல
சப்பாணி கொட்டியருளே. 34

### முருகன் கரங்கள் முன் செய்த செயல்கள்

இரவுபகல் மாறாடி மலைகளைப் பந்தென
எடுத்தெறிந்(து) ஆழிஏழின்
இடையுழக் கித்திசைப் பாலகரை வென்று புவி
யாவும் படைத்த வன்றன்

கரமொடு பதங்களுக் கானதளை யிட்டுக்
களிற்றுமுகன் ஆதியாய
காரவுண ரைச்செற்று வானகத் தமரர்தம்
காற்றளை களைந்து மகவான்

அரவபடம் நிகரல்குல் அயிராணி யொடுமகிழ
அம்பொன்மணி முடிசூட்டி வெள்
ஆனைமக ளீடேற மங்கலம் அணிந்(து) உண்மை
அடியவர் விருப்ப முற்றும்

தரஒரு சலிப்பின்றி மிளிர்கின்ற கைகள் கொடு
சப்பாணி கொட்டியருளே
தமிழ்வளம் பெறுதேவை நகர்புரந் தருள்வேல
சப்பாணி கொட்டியருளே. 35

### சப்பாணி கொட்டும் காரணம்

இமையசையு மவ்வளவு போதுமுனை மறவார்
இடர்ப்பிணி யிடைப்படாமல்
ஈரிரு மறைப்பொருள் உணர்ந்தபெரி
யோர்பலரும்
ஈனருக் கொல்குறாமல்

கமையொடு தராதரம் அறிந்(து) உதவ வல்லவர்
கலிக்கடலின் மூழ்கிடாமல்
கபிலையொடு கன்றரிந் துண்பவர் இடத்தினிற்
கமலைகுடி கொண்டிடாமல்

சிமையமுழு மைக்கும் தமிழ்க்கவி சொலக்கருது
சீரியர் திகைப்புறாமல்
சேவலங் கொடியே செயம்செயம் எனப்பகர்
திருப்புகழ் மறைந்திடாமல்

சமையங்கள் ஈராறும் நம்பியத டங்கைகொடு
சப்பாணி கொட்டியருளே
தமிழ்வளம் பெறுதேவை நகர்புரந் தருள்வேல
சப்பாணி கொட்டியருளே. 36

**வேறு**

**மகுடம்**

**வண்டுகளின் செயல்**

அளியினம் மொகுமொகெனும் இசையொடு பறந்து வந்(து)
அணிபொழிற் றலையின் மலர்வீழ்ந்(து)
அதைவிட்டு மறுகுதொறும் உலவுகளி றுமிழ்மதம்
அருந்திஅத னையும்நீத் துமேல்

தெளிபுனற் றட மனந் தந்தொறு மலர்ந்தபல
செங்கமலம் ஆதிநல்கும்
சிறுதுளித் தேன்பருகி அமையா தெழுந்தணி
திருந்திழை மடந்தை நல்லார்

களிநலம் பொலியாடல் பயிலரங் கிற்சென்று
கண்கள்முத லாம்உறுப்பைக்
கருதிஇமை குவிதல்முத லாவன குறித்துக்
கழித்(து) அளகமலரில் வைகிக்

குளிர்வியன் திகழ்தேவை நகரில்வந் தமர்சாமி
கொட்டியருள் சப்பாணியே
குமரகுரு பரமுருக சரவணப வாஇனிது
கொட்டியருள் சப்பாணியே. 37

**வேறு**

**மயிலின் தன்மை**

நாலா னனத்தான் முதல்மூவர்
நண்ணும் தலமாம் இரவியையும்
நளிர்வெண் கதிர்கால் மதியினையும்
நடுங்கப் படுத்தும் இருபாம்பைக்

காலா னவற்றில் இருபணியாய்க்
கவினப் புனைந்து கனற்கோபக்
கலுழன் வெருளக் கனன்(று) அகவிக்
கலபச் சுமையாற் களையாமல்



வேலா வலயம் சிலகடந்து
வெள்ளை நிறப்பாற் கடல்நடுப்போய்
விண்டு வுறங்கு மாசுணத்தை
விரைவி லெடுத்து நடமாடும்

கோலா கலமா மயிற்குமரா
கொட்டியருளாய் சப்பாணி
குலவுந் தேவ புரிக்குகனே
கொட்டியருளாய் சப்பாணி. 38

**வேறு**

**சந்தம்**

*தனதன தானன தனதன தானன*
*தத்தன தத்தான*

இருநில மாதிகொ(டு) உயிர்வரை ஓதிடும்
எட்டுரு வத்தோனும்
எழில்மலி தாமரை மலர்வளர் பூமகள்
இச்சையு டைக்கோனும்

அருமறை நூல்பகர் பிரமனும் நாடும்நின்
அற்புதம் எப்போதும்
அறைதரு பாவலர் பழவினை வேருடன்
அற்றொழி தற்காக

ஒருதர மாயினும் மயில்மிசை நீவரல்
உட்கரு தித்தாழ்என்
உரிமையெ லாம்அறி திறல்இலி நீயெனில்
ஒப்பிலன்; நத்தாய்கொல்

குருபர; தேவையில் வருகும ராநனி
கொட்டுக சப்பாணி
குணமலி சீர்திகழ் கணபதி சோதர
கொட்டுக சப்பாணி. 39

**சேவலொலியால் திகழும் செயல்கள்**

*தனதன தானன தனதன தானன*
*தத்தன தத்தான*

இடிநிகர் பேரொலி தருதிசை வேழம்இ
டுக்கண் உறத்தேவர்
இதுமுடி வூழிகொல் எனமலை யாவும்
இருப்பில் மிகப்பேர

வடிவில் மகோததி அலறிட வீரர்ம
 னத்துணி வைப்போட
வலிகெழு தானவர் அனைவரும் நாணிவ
 னத்திலொ ளித்தோட

அடியவர் சேகரம் உனதருள் பாடிஅ
 ளப்பில்உ வப்பாக
அணிகட காதிகள் ஒலிதர ஆறணி
 அத்தனெ னச்சீர்கொள்

கொடிநிமிர் தேவையில் அமர்கரு ணாகர
 கொட்டுக சப்பாணி
குணமலி சீர்திகழ் கணபதி சோதர
 கொட்டுக சப்பாணி. 40

*தத்தன தானன தத்தன தானன—தத்தா னத்தான*

விற்றகை வேடுவ ருக்குநல் வாழ்வருள்
 வெற்பே முத்தேவர்
மெச்சிய தேசிக ஒப்புறு தாரக
 வித்தே சிற்றேனல்

உற்றமி னாள்பிசை யப்படு மாநுகர்
 உற்சா கக்கார
உத்தம வீரர்வ ழுத்திய வேல்புனை
 உற்பா தச்சீல

நற்றமிழ் தேர்அரு ணைக்கிளி பாடல்கள்
 நத்தார் வத்தேவ
நச்சர வேறி நடிக்கு மயூரம்ந
 டத்தாண் மைப்பால

குற்றமில் தேவையி டத்தமர் காவல
 கொட்டாய் சப்பாணி
கொக்கற மோதிவ ரத்தகு சேவக
 கொட்டாய் சப்பாணி. 41

## 5. முத்தப்பருவம்

பத்தர்க் கெளியான் எனவுலகும்
 பழைய மறையும் ஆகமமும்
பகரும் பெருமான் தரும் புதல்வா
 பனிமால் வரையின் தவப்பயனாம்



அத்தக் கடகக் கரக்குயில்நேர்
 அம்மை முலைப்பால் மணம்கமழ
அலர்செங் குமுத மலர்வாயாய்
 அரவிற் றுயில்கூர் அரிமருகா

சத்தக் கடலின் அமுதனைய
 தனிமந் திரத்தின் பொருள் உணர்வாய்
தந்தி முகப்புங் கவன் றுணைவா
 தலைமைக் குறுமா முனிமுதலாம்

முத்தர்க் கினிய குருபரனாம்
 முதல்வா முத்தம் கொடுத்தருளே
முதிருந் தமிழ்த்தே வையில் வளரும்
 முருகா முத்தங் கொடுத்தருளே. 42

### தனது அநுபவம் கூறல்

பொன்னார் சுணங்கு முலைமனையாள்
 பொறித்த முடங்கல் வழியுய்ந்த
போரே றியற்றும் பணிவாய்ந்து
 பொருநைக் கிடபாற் றிகழ்பதியில்

பன்னா கத்திற் கொடியசினம்
 படைத்த சமணன் அழுக்காற்றால்
பவளக் கிரிநேர் உனைஒருவன்
 பார்த்த மலைச்சார லின்ஒருபால்

உன்னா ருயிரே நிகர்ஒருத்தி
 உழைப்பால் உதித்து வளர்தலத்தில்
உண்மை யறிய எனதுமனம்
 உருக உடலும் புளகம்உற

முன்னாள் உதவும் நலமறவேன்
 முறையால் முத்தங் கொடுத்தருளே
முதிருந் தமிழ்த்தே வையில் வளரும்
 முருகா முத்தங் கொடுத்தருளே. 43

### முருகனிடத்தில் முத்தம் பெற்றவர்

ஊசு லெனவால் வளையிரண்டுற்(று)
 உலவுஞ் செவியார் தமக்கும்மதி
யொடுசெஞ் சடைக்காட்டு டுறும்அவட்கும்
 உயர்சீர் இமவான் றருமகட்கும்

பாச மலிகார்த் திகையார்க்கும்
பணியிற் றுயில்மா மனுக்கும்அவன்
பன்னி யருக்கும் எளிதில்மிகப்
பலிக்கும் உனது பவளமுத்தம்

நேச மிலர்போற் பெரி(து)இகழும்
நீலக் குறத்தி தனக்கும்உனை
நிதமுந் திருடன் எனக்கவியால்
நிகழ்த்தும் கிளிக்கும் அளித்திலையோ

மோசம் வருமென் றொருசிறிதும்
முனியா முத்தம் கொடுத்தருளே
முதிருந் தமிழ்த்தே வையில் வளரும்
முருகா முத்தம் கொடுத்தருளே. 44

**தெய்வயானை யம்மையிடம் முருகன்**
**கொள்ளும் பரிவு**

மலையாம் இனத்துள் உயர்கயிலை
மலைபோ லசைந்து மதத்தருவி
வயங்கக் காட்டுந் தவளநிறம்
மலிவா ரணம்அன் றெடுத்துவந்து

கொலைவா ளவுணர்க் கெமன்போலும்
குலிசா யுதத்து மகபதிபாற்
கொடுக்க அமரா பதிநகரிற்
குடிகொண் டிருப்போர் பலர்போற்ற

இலையார் பசும்பொற் கொடியேபோன்(று)
இனிது வளர்ந்தாள் எழில்மார்பத்(து)
இருகுங் குமக்கோ டெனநீடி
இரதி மதவேள் உருக்காட்டும்

முலைதோய்ந் துவப்ப வலிதுமுத்தும்
மோகா முத்தங் கொடுத்தருளே
முதிருந் தமிழ்த்தே வையில் வளரும்
முருகா முத்தம் கொடுத்தருளே. 45

**ஆட்கொண்டமையும் அவன் அருள்வேண்டலும்**

துத்திப் பணப்பாந் தளில்நடிக்கும்
தோகை மயில்வா கனமுதுகில்
சுடர்வேற் படையும் முத்திரையும்
சுவண நிறக்கண் டிகைப்பொலிவும்



எத்திக் கருமெச் சியமுழுநீற்
றெழில்ஆ தியவுந் துலங்கிடவந்(து)
இலைவெண் திருநீ றளித்தொருநாள்
இரவிற் பகர்ந்த படியாண்டு

பத்தித் துறையை யிகழாதார்
பலருங் களிப்பப் பிறர்நாணப்
பாவ மிகையோர் பரிதியெதிர்
பனிபோல் ஒழியப் பயன்காட்டி

முத்திக் கடலுள் விடல்நிசமேல்
மூவா முத்தங் கொடுத்தருளே
முதிருந் தமிழ்த்தே வையில் வளரும்
முருகா முத்தங் கொடுத்தருளே. 46

**வேறு**

**முருகன் புயத்தில் உள்ள கிளியின் இயல்பு**
**(அருணகிரிநாதர் கிளியென்பது)**

நெய்த்த மலர் சொரிதருங் கற்பக மரங்கண்டு
நிகரில்சந் தம்பொலிந்து
நீடிய திருப்புகழ் அநந்தங் குலாவிஅருள்
நெறியுளார்க் குரிமை யினதாய்ப்

புத்தமுதி னும்பெரி தினிக்கு நீர் மிகைமல்கு
புனிதத்த தாகி விண்ணூர்ப்
போகமட வார்நனி வியப்பச்சி றந்துபைம்
பொற்கிரண மிகைமன்னிஎண்

சித்தடைந் தழகிய கலாபமயி லும்பொருவில்
சேவலும் விரும்ப மிளிரும்
செம்முகத் தினதாய்க் குலத்திலுயர் தலைமையாய்த்
தென்றலங் கிரியை நிகராம்

முத்தமிழ்க் கிளியொன் றிருந்தகைக் குருபரா
முத்தங் கொடுத்தருள்வையே
மூவர்புகழ் தேவைநகர் மேவுகும ரேசனே
முத்தங் கொடுத்தருள்வையே. 47

## முத்துகளின் இழிவு

வகைமல்கு முத்தங்கள் உலகில்உள எனினும்அவை
மாதவந் தருப அன்(று)அம்

மட்டினும் இராதளவில் மடமலி தரச்செய்து
மமதையில் அமிழ்த்தும் அன்றித்

தகைமலியும் நெற்கெதிரில் விளைமுத்தம் மேதித்
தடங்கால் மிதிக்க நெரியும்
தண்மலர்க் கணைமதன் சிலைமுத்தம் ஆலையிற்
றவிடுபடும் மூங்கில் முத்தம்

மிகைபடும் நெருப்பில்ஒவ் வொருவேளை வேம்இந்த
விதமாக மற்றெவைக்கும்
விலையாதி ஊறுண்டு விழையேம் மறைத்தலை
விளம்புபிர ணவமணக்கும்

முகைமுல்லைதிகழ் குமுதம் அனையதிரு
வாய்கொடொரு
முத்தங் கொடுத்தருள்வையே
மூவர்புகழ் தேவைநகர் மேவுகும ரேசனே
முத்தம் கொடுத்தருள் வையே. 48

**வேறு**

**சந்தம்**

*தத்தன தானன தத்தன தானன*
*தத்த தனத்தானனா*

ஒப்புயர் வோதரு முத்தமிழ் பாடிடும்
உத்த மரைப்பழியேன்
உக்கிர வாசனை அற்றவர் தாள்தொழும்
உட்டு ணிவைக்கழியேன்

எப்புவி யோரும்வ ழுத்தும்நின் வார்கழல்
இட்டம் விடுக்கறியேன்
இக்கது போல்மொழி செப்புமி னார்முலை
இச்சை யினைக்குறியேன்

வெப்புறு பாழ்நெறி யிற்சுழல் பாதகர்
வெற்றி சகித்தமையேன்
மெய்த்திரு நீறுடல் முற்றணி சீர்பெறும்
வித்தக ரைப்பிரியேன்

முப்புரம் நீறந கைத்தவர் பாலக
முத்த மளித்தருளே
முற்பகர் தேவைந கர்க்கும ராஒரு
முத்த மளித்தருளே. 49



*தனதன தான தனதன தானன—தத்தந் தந்தனனா*

ஒருபொரு ளேபரம் எனவுணர் சீரியர்
உட்குந் துன்பொழிவார்
உயிர்வதை ஆதிய புரிவர் யாவரும்
உய்த்தங் கண்டழிவார்

தருமமி லாநெறி மருவிய தீயவர்
தர்க்கங் கொண்டெதிரார்
சதுமறை நூல்பகர் அறுமத வாணர்கள்
தத்தம் பண்படைவார்

திருமகள் கோன்நுவல் உனதிசை தேறுநர்
திக்கெங் குந்திகழ்வார்
திரைகடல் சூழ்புவி மகள்துயர் போய்மகிழ்
சித்தந் துன்றிடுவாள்

முருகவிழ் தாதகி அணிபவர் பாலக
முத்தந் தந்தருளே
முனைமலி தேவையில் வளர்முரு காஒரு
முத்தந் தந்தருளே. 50

*தானன தத்தந் தானன தத்தந்*
*தானன தத்தந் தனதனா*

கார்மரு பொற்பொன்(று) ஆகம றப்பெண்
காதலன் முத்தந் தருகவே
காய்தகு வர்க்குஞ் சாரண ருக்குங்
காதகன் முத்தந் தருகவே

சூர்மடி யக்கொன் றார்வம் விளைக்குந்
தோளினன் முத்தந் தருகவே
தோகை மயிற்கொண் டூர்தரு கொற்றந்
தோய்பவன் முத்தந் தருகவே

பார்மகிழ் தற்கென் றாய்பவர் பற்றும்
பாவகன் முத்தந் தருகவே
பார்வதி பக்கம் சேர்பவர் நத்தும்
பாலகன் முத்தந் தருகவே

சீர்மலி யத்தென் தேவை புரக்குஞ்
சேவகன் முத்தந் தருகவே
தீயினை யொக்குஞ் சேவ லெடுக்குந்
தேசிகன் முத்தந் தருகவே. 51

## 6. வருகைப் பருவம்

### முருகனை அம்மை பாராட்டும் உயர்வு

தளஞ்சேர் கமல மலர்விழியான்
தங்கை மனம்நெக் குருக முலைத்
தடத்திற் சுரந்து வழிபால்முன்
தானைநனைப்பக் கரம்நீட்டிக்

குளஞ்சேர் விழியால் எனையுடையார்
கொடுத்த மதலாய்! அருள்ஞானக்
குன்றே! யிமையார் பலர்க்கும்ஒரு
கோவே! அருமைக் குறுமுனிவன்

உளஞ்சேர் குரவா வருக!என
உரிமை யொடுபோய்ப் பசியாறி
உவகைக் கடலில் அவளொடுதான்
ஒருங்கு மூழ்கி உயர்ந்துபல

வளஞ்சேர் தேவைப் பதிபுரக்கும்
வாழ்வே! வருக வருகவே
வடிவேல் முருகப் பெருமாளே!
வருக வருக வருகவே. 52

கந்தா வருக! சிவஞானக்
கனியே வருக! பரமனுதற்
கண்ணின் மணியே வருக!அருட்
காரே வருக! கருமருப்புக்

குந்தா வருக! குறமடந்தை
கொழுநா வருக! பிரணவச்சற்
குருவே வருக! மலைத்தொறும்வாழ்
கோவே வருக! குலவுமறை

அந்தா வருக! தமிழ்க்கடலின்
அமுதே வருக! வினைப்பிணிவேர்
அறுப்பாய் வருக! சகமுழுதும்
ஆனாய் வருக! அறம்வளர்த்தாள்

மைந்தா வருக! தேவைநகர்
வணிகா வருக! வருகவே



வடிவேல் முருகப் பெருமாளே
வருக வருக! வருகவே. 53

### முருகன் காட்சிக்கு உரியரானவர்கள்

சந்த வரைமா முனிமகிழத்,
தையல் ஒருத்தி கரமுளைக்கச்,
சங்கப் புலவன் தளைநீங்கத்,
தழற்பா லையிலோர் கவிஉய்ய,

அந்தண் அருண கிரிவாழ,
அரையன் ஒருவன் அகம்களிப்ப,
அருமைப் பனுவல் பகர்ஒருவன்
அம்பொற் பதக்கம் பெறச்,சூர்மாச்

சிந்தப் பொருத கதையுரைத்தோன்
திடுக்கம் தவிர, மணியணிநாத்
தெறித்து விழப்பாடி னன்முதலோர்
சிந்தை குளிரச், சிகிப்பரிமேல்

வந்த(து) உளதேல் தேவைநகர்
வரதா வருக வருகவே!
வடிவேல் முருகப் பெருமாளே
வருக வருக வருகவே. 54

### தனக்கு அநுபூதி கிடைத்த இடம்

தண்மைக் குலம்சார் தருமூங்கிற்
றடமால் வனத்தில், உருமலையில்,
தயங்குந் திருமா மலைக்குவட்டில்,
தழற்பே ருருவாம் மலையருகில்

பெண்மைக் குயர்ச்சி தரும்நாட்டில்
பின்னும் பலவா கியதலத்தில்,
பிரிய முளார்போல் நனிதோன்றிப்
பேசல் முழுதும், பெறலரிதாம்

உண்மைப் பயனே யாகில்எனை
உலகோர் இகழ்தற் கானவிதம்
உஞற்றி மனத்தோ(டு) உடலுமிளைத்து
உழலக் காண்ப தியல்பாமோ?

வண்மைத் தமிழ்த்தே வையில் ஒருக்கால்
மயில்மேல் வருக வருகவே!
வடிவேல் முருகப் பெருமாளே
வருக வருக வருகவே. 55

கொஞ்ச வருக! கவுமாரர்
கூட வருக! புறநெறியோர்
கொதிக்க வருக! திருவருட்சீர்
கொடுக்க வருக! தமிழ்ஆண்மை

மிஞ்ச வருக! பழவினையை
விலக்க வருக! எனதுளத்துள்
மேவ வருக! மயற்பேயை
வெல்ல வருக! விரும்பியவா(று)

அஞ்ச லருள வருக!என
அடிமை முறையிட் டிடல்முழுதும்
அறிந்தும் அறியா தவரேயொத்(து)
அகிலத் தலைய விடல்முறையோ?

வஞ்சர் மருவாத் தேவைநகர்
மன்னே வருக! வருகவே!
வடிவேல் முருகப் பெருமாளே
வருக வருக வருகவே. 56

**வேறு**

**தன்னிலையும் வேண்டுகோளும்**

தொண்டலது மற்றொன்றை மதியாத மெய்யன்பர்
துணையடித் துகளை முடிமேல்
சூடியுன(து) ஆறெழுத்தும் கருதி நாடொறும்
துதிசெய்து மறுகு மென்பால்

விண்டலம் புகழ்பழனி மலையினிற் செந்திலை
வியந்துரைத் ததும்,அ தெண்ணி
மேவியதும், அங்குவிளை யாடியதும், இத்துயர்
விளைத்ததுவும், உலகர் அறியார்;

பண்டலகில் அருள்பெற் றிருந்தவுயி ரென்றெனைப்
பகரல்முத லாய பிறவும்,



பழுதுபடில் எனையவர் இகழ்ந்திடலில் உன்னைப்
பழிக்கும் நின்மனம், ஆதலால்

மண்டலத் துயர்தேவை நகரில்ஒரு தரமென்முன்
மயிலில்வந் தருள்செய் வாயே
மரகத கலாபம்விரி தருகுடை நிழற்றருபொன்
மயிலில்வந் தருள்செய் வாயே. 57

**யானைகள் உலாவும் சிறப்பு**

கதமீறி யெதிர்நின்ற கந்தைத் தகர்த்(து)உரற்
காற்றளை முறித்து, விண்ணிற்
கைந்நிமிர்த் துப்பிளிற லொடுபெயர்ந்(து)
அருகில்வரு
கனபாக ரைச்சி தைத்துப்,

பதம்ஆ றுடைத்தும்பி யினமொய்த் திசைப்பமிளிர்
பந்தாடு மாதர் கொங்கை
பார்த்தினம் எனக்கருதி, இடைசீயம் என்றுட்
பயங்கொண்டு பைம் பொழிற்கண்

விதம்ஆ யிரம்படு மரங்களை முறித்துத்தம்
வெம்பகைப் பெயர் புனைந்த
வெண்பற் குரங்கினம் வெருட்சியுற மகிழ்
வெய்தி
மேகத்தின் நீர் குடிக்கும்

மதவேழ மலிதேவை நகர்வேல! ஒருபோது
மயிலில்வந் தருள்செய் வாயே
மரகதக லாபம்விரி தருகுடை நிழற்றருபொன்
மயிலில்வந் தருள்செய் வாயே. 58

**வேறு**

**சந்தம்**

***தனன தான தனனதான தனனதான தனதனா***

அருமை யாதும் அறிகிலாரை
அணுகிஆசி பகர்தல்போய்
அடியர் கூடும் அவையில்மேவி
அளவில்பூசை முயலுவேன்

உருவ மார னெனவும்ஓதி
யுரையுமாதர் மயல்கொளா(து)
உனது பாத மலரைநாடி
உருகும் ஆர்வம் அடைகுவேன்

இருமைநாசம் உதவுலோபம்
எனுமதோடு பழகிடா(து)
இகமும் வானும் அறியுமீகை
யிடைவிடாது புரிகுவேன்

மருவுதேவை நகர்விசாக!
மயிலிலேறி வருகவே!
மறுவில் ஆறு முகவினோத!
மயிலிலேறி வருகவே! 59

*தானதனன தானதனன தானதனன—தனதனா*

ஆடல்விழையெ னோடுபகரும்
ஆசைமொழிகள் பிழைபடா(து)
ஆழி, பொருநை வாவிமுதல
வாயபுனலில் அனலில்வீழ்

பாடல் அழிவு றாது, கொலைசெய்
பாவநெறியில் அமிழ்பொலார்
பாரில்மலிவ தால்மெயடியர்
பாறியுணர்வு மெலிவெய்தா(து)

ஊடல்வனிதை போல் உ(ன்)னுவன் என்
ஓகை முனிவு பலசெய்வேன்
ஊறுதவிர நீடுமகிமை
ஓசையிலக அருள் செய்வான்

மாடம் நிலவு தேவபுரியில்
வாழுமுருக வருகவே
மாசில் வளையொ(டு) ஆழிபுனைகை
மாயன்மருக வருகவே. 60

*தானதான தானதான தானதான தனதனா*

நீலவேட மாதுசேர நீடுதோளன் வருகவே
நேரிலாத வாசமேவு நீபமார்பன் வருகவே



காலகால னார்பராவு கால்விசாகன் வருகவே
காமனானு மாணிலாவு காமர்வேலன் வருகவே
சாலநாடு வாருள்மேய தாள்வினோதன் வருகவே
தாழும் நீள்கை வேழமான தாரகாரி வருகவே
சீலவேத நூல்வலோர்கள் தேடும் ஏகன் வருகவே
தேவையூரில் வாழ்குமார தேவன் நேரில்
வருகவே. 61

## 7. அம்புலிப் பருவம்

### சாமம்

### முருகனோடு சந்திரனைச் சமத்துவப்படுத்தி அழைப்பது

திருமருவு கார்த்திகைப் பெண்கள்முலை தொடுநலம்
சித்தித்த வண்மையாலும்;
சேவிலொரு வேளை,அடல் மேடத்தி
லொருவேளை,
திகழ்கின்ற தன்மையாலும்;

கருமயிற் றொடர்பாலும்; அனலனைய சோதியைக்
கவினுறப் புணர்தலாலும்;
கனவிசா கத்தினிற் பிரியமுற லாலும்;அவிர்
கதிர்வட்ட நடுவிலுற்று

வருகின்ற தாலும்;அம் பரவிழிக் கொண்டுலகை
வலமாத லாலும்; விண்ணூர்
மறையவன் சொல்விழைத லாலும்,இவ னுன்றனை
மனத்(து)இணை யெனக்குறித்தான்

அருளுததி தரும்அமுதம் நிகர்முருக வேளொடினி(து)
அம்புலீ ஆடவாவே.
அணிபொழிற் றேவபுரி வளரயிற் சேவகனொ(டு)
அம்புலீ ஆடவாவே. 62

கடகமரு வுங்கர மிகப்பெறுத லாலும்,ஒரு
கன்னிவலி திற்புணர்ந்த
காரணத் தாலும்,வெண் சிங்கமுக முற்றும்
கழித்துமகிழ் பெருமையாலும்

இடமுறுந் துலைகொண்டு செட்டியென் றுலகினர்
இயம்பிடக் குலவலாலும்,
ஈசனொரு கண்ணின்மணி யென்றுவே தாகமம்
எடுத்திசைக் கின்றதாலும்,

திடமிகுந் தனுசொன்று கொளலாலும், மகரமலி
செவியாலும், மதனவேடன்
சிரமேல் நடக்கும் புகழ்ச் சீரி னாலும்,மயல்
செறிமகளிர் நிந்தையாலும்,

அடலவுணர் பகையாலும், உனையன்ன குமரனுடன்
அம்புலீ ஆடவாவே,
அணிபொழிற் றேவபுரி வளரயிற் சேவகனொ(டு)
அம்புலீ ஆடவாவே. 63

காதல்மலி வெய்திக் கசிந்துருகு வாட்கினிது
கைகொடுத் திட்டதனையும்
கலைவல்ல புலவனொரு வனையளித் திடலையும்
கமலமலர் முழுதும் ஒல்கும்

சீதள முகந்துன்று தலையும், மலை உச்சியிற்
றினமும் நில வலையும், அலைநீர்
சிந்தைமகிழ் வுறவந் துதித்தலையும், வெண்கணம்
செறியநடு நிற்றலையும், மீன்

கேதனத் தெழுதுகுலம் வாழவைத் தலையும்
கிளிக்கிறைவன் ஆடல்நீடக்
கிளர்தலையும், ஒருபதிற் றாறுகலை கொண்டுவளர்
கீர்த்தியையும், எண்ணி நின்மீ(து)

ஆதரம லிந்தழைக் குங்குமர குருபரனொ(டு)
அம்புலீ ஆடவாவே
அணிபொழிற் றேவபுரி வளரயிற் சேவகனொ(டு)
அம்புலீ யாடவாவே 64

## பேதம்

### சந்திரனொடு முருகன் உயர்வு கூறி, அழைப்பது

சிற்றவுண ருக்கும்அஞ் சுறுவைநீ! இவனவர்
திறற்படைக் கொரு கூற்றுவன்;



செங்கதிர்முன் உனதொளி மழுங்கும்; இவன்
முன்னதொரு
செயலுமில் லாதுமறையும்

கற்றவரு னைப்பெரி திகழ்ந்திடுவர்; இவனைமெய்க்
கருணையங் குரவனென்பார்
காதல்மட மங்கையர்க்(கு) இயமனீ; இவனவர்
களிப்புற முயங்கு காளை;

பொற்றடங்கிரியினைச் சூழ்வைநீ; இவனது
புலம்பப் புடைத்த கையான்;
பொருவரு களங்கன்நீ; இவன்மறுவில் பேரருட்
புனிதன்; உனை நனியழைத்தான்;

அற்றமிது நன்றுநன்(று;)அறுமுகக் கடவுளுடன்
அம்புலீ ஆடவாவே
அணிபொழிற் றேவபுரி வளரயிற் சேவகனொ(டு)
அம்புலீ ஆடவாவே 65

மின்படு முகிற்றிரளும் உனைமறைத் திடும், இவன்
வியன்புகழ் மறைப்பதில்லை;
விபுதரு டொருவனீ, இவனவர்க் கரசனது
வெந்துயர் ஒழித்தவீரன்;

மன்பதைத் திரளன்றி மற்றைஉயி ருங்காணும்
வாழ்க்கைஉன(து), அளவில்கோடி
மறைகட்கும் அறிவரிய நிலையுடைய னிவன்;
ஒருபுள்
வந்துகொத் தத் தளர்வை நீ,

முன்பகர் திறற் புள்ஒரு மூன்று தொழ மகிழ்வனிவன்;
முப்பது தினத்தி லொருநாள்
முழுமையுறு வாய், அணுவில் அணுவா
நிறைந்ததனி
முதல்வனிவன்; விழைதல் எளிதோ?

அன்பருக் கோரெளிய னானமுரு கையனுடன்
அம்புலீ ஆடவாவே
அணிபொழிற் றேவபுரி வளரயிற் சேவகனொ(டு)
அம்புலீ ஆடவாவே 66

## தானம்

### இன்ன இன்ன பரிசு பெறலாம் என்று கூறி அழைப்பது

செங்க ணெடுமா லெனவுனது
சீரார் குலத்தில் வருமொருவன்
திருக்கை நிமிர்த்த கரத்தினுக்குன்
தேகச் சயநோய் ஒருபெரிதோ?

வெங்கண் அரவம் இரண்டினையும்
விழுங்கத் தகும்புள் இரண்டிருக்கும்
விதந்தேர்ந் திலையோ? விடம்போலும்
விழியார் எருவிட் டெறிதரும்ஓர்

பங்கந் தவிரப் பெறலரிதோ?
பகைச்சூர் முதலோர் ஈடழித்துப்
பைம்பொ னகரிற் குடியேற்றும்
பழைய உதவி மறந்தனையோ?

அங்கண் மயில்வா கனக்குகன்பால்
ஆடவாராய் அம்புலியே
அருள்சேர் தேவை முருகனுடன்
ஆடவாராய் அம்புலியே! 67

தோயுந் தமிழ்ச்சீர் குறுமுனிக்குத்
துலங்கப் பகர்ந்தான்; பிரமனுக்குத்
தொல்லைப் பிணியாம் ஆணவநோய்
தொலையப் புரிந்தான்; சுடராழி

ஏயும்படிமா யனுக்களித்தான்;
இறைவன்றனக்கும் பிரணவத்தின்
இயல்பைத் தெரித்தான்; எவரெவர் வந்(து)
எவைவேண் டினுமிக் கீந்துளன்காண்;

நீயும் விரும்பு மவைமுழுதும்
நெறியிற் பெறலாம்; ஒருகிளியும்
நீபத் தடந்தோள் மிசையேறி
நிலவப் பெறல் கேட்டிலை கொல்லோ?



ஆயும் பெருமைச் சரவணன்பால்
ஆடவாரா யம்புலியே!
அருள்சேர் தேவை முருகனுடன்
ஆடவார்ா யம்புலியே! 68

## தண்டம்

### வராவிடில் ஒறுத்தல் நேரும் என அச்சுறுத்தி விளித்தல்

### வேறு - சந்தம்

*தந்தன தானன தந்தன தானன*
*தந்தா னந்தனனா*

தந்த வெளானைய தன்பகை நேரில்அ
தந்தான் உண் டொழிவாய்!
தண்டை குலாவுப தம்பெறும் ஆடு,த
ருங்கோபங் கொடிதே;

பைந்தகை மாமயில் அங்கத ஊனுகர்
பண்பார் கின்றதலோ?
பண்கொடு கூவுந லந்திகழ் சேவல்ப
றந்தா லும்பொடிவாய்!

வெந்தழல் நேர்விழி சென்டொளிர் வீரர்மி
கும்பேர் உண்டறிவாய்!
விண்டவரூ டொரு வன்கதி ரோன் இகல்
வென்றோன் அன்று கொலோ

மந்தணம் ஈசனு டன்பகர் சேயெதிர்
வந்தாடம் புலியே
வண்பெறு தேவைபு ரந்தவி சாகன்முன்
வந்தாடம் புலியே. 69

*தத்தன தானன தத்தன தானன*
*தந்தா னந்தனனா*

இத்தனை தூரம ழைத்தும்வ ராமல்இ
ருந்தாய், உங்கள்பிரான்

எய்த்தொரு வேயுரு வத்தொடு காவிரி
யின்பால் நின்றஅநாள்

அத்தனை பாடுப டுத்திய சூரனை
அங்கே வென்றதனால்
அத்தம தாம்நக ரிற்குடி மேயினை
அன்றோ? நன்குணராய்!

பித்தரில் மோசமு றத்துணி யேல்!மருள்
பெண்பா வம்பலநீ
பெற்றுளை! யாதுவ ரப்பெறுவாய் கொல்?பி
ணங்கேல்! பிங்கலம்நேர்

மத்தக வேழமு கற்கிளை யானுடன்
வந்தா டம்புலியே
மற்பொலி தேவைந கர்க்கு மரேசன்முன்
வந்தா டம்புலியே. 70

*தானன தந்தன தானன தந்தன*
*தானா தந்தனனா*

மாதவ னும் புகழ் சீர்பெறு கந்தன்முன்
வாவா அம்புலியே!
மாசறும் ஐங்கர னார்மகிழ் தம்பிமுன்
வாவா அம்புலியே!

மாதர்ம னங்கவர் ஆறிரு மொய்ம்பன்முன்
வாவா அம்புலியே!
மாழையும் ஒஞ்சுவ தாயக டம்பன்முன்
வாவா அம்புலியே!

மாதரு மங்கைம ணாளன்வ ருந்துமுன்
வாவா அம்புலியே!
மாவைவ கிர்ந்துள கோபம்வி ளங்குமுன்
வாவா அம்புலியே!

வாதப யந்தவிர் வாழ்வருள் மைந்தன்முன்
வாவா அம்புலியே!
வாய்மைம லிந்துயர் தேவையின் நண்பன்முன்
வாவா அம்புலியே. 71



## 8. சிற்றிற் பருவம்

### முருகனை யழைக்கும் முன்னிலை

காக்குந் திருமால் மருகோனே!
கயிலைக் கிரியார் தரும்புதல்வா!
கடவா ரணத்தோன் மகள்கணவா!
கானக்குறத்தி கழல்பணிவாய்!

ஆக்குந் தொழிலோன் றனைப்புடைத்திட்(டு)
அதுசெய் துவக்கும் புகழ்தோய்வாய்!
அறுமா முகத்தோர் குருபரனே!
அருணைக் கிளிஒன் றணிதோளா?

பாக்கு முலைப்பார்ப் பதிதருபால்
பருகில் பனுவல் பலபகரும்
பவளக் கனிவாய் உறுபாலா!
பரவிப் பணியச் சலியாதார்

தேக்கு மதுரத் தமிழ்புனையும்
செல்வா! சிற்றில் சிதையேலே
தேவைப் பதியில் வாழ்முருகா
சிறியேம் சிற்றில் சிதையேலே. 72

### திருவடி தங்கித் திகழுமிடங்கள்

மெய்யர் மனம்நேர் சரவணத்தில்
மேனாள் மலர்வுற்(று) அறுமீனும்
மேனைமகளு மாம் எழுவர்
வியனார் மடியில், விழித்தொகையில்,

ஐயர் உரத்திற், சடைக் காட்டில்,
அக்கங்களில், மால் முதலோர்தம்
அணிமா முடியில், அகவெளியில்,
அருணைப் புலவன் தமிழ்ப்பாட்டில்,

வெய்ய புனத்தில், பல கோடி
வெற்பில், மிளிர்கோ புரமுகப்பில்,
வேரிக் கடம்பில், கூதளத்தில்,
வெட்சித்துணரில், மிகமணக்கும்

செய்ய கமல மலர்த்துணைத்தாட்
சேந்தா! சிற்றில் சிதையேலே
தேவைப் பதியில் வாழ்முருகா!
சிறியேம் சிற்றில் சிதையேலே. 73

**சிற்றிலென்பது தேகத்தியல்பு**

விந்தைமிகுபே ரறத்திலுறும்
வேட்கைப் பொலிவும், பொருள்நாடி
வீடுதொறும் போம் வினைப்பிணியும்,
வேள்கைச் சிலைசெய் வியன்போரால்

பந்தைநிகர்மென் முலையார்க்குப்
பலவாறுருகும் அதிமோகப்
பரவைப் பெருக்கும், கடந்துனருட்
பார்வை நலத்திற் பழகியதால்

நந்தை யணிவார் குழையானும்
நறுஞ்சந் தனமால் வரைக்கோனும்
நளிர்பூம் பொழிற்றென் அருணைநகர்
நாவலனும்பெற் றுளநலத்தைச்

சிந்தையுணரு முனம்எமது
சீரார் சிற்றில் சிதையேலே
தேவைப் பதியில் வாழ்முருகா!
சிறியேம் சிற்றில் சிதையேலே. 74

**விளையாட்டிடத்தும் மெய்யருள் வேட்டல்**

அறிவும் அறியா மையுங்கடந்த
அருமைப் பொருளென் றருமறையும்
அளவில் பெரியோர் களும்பரவும்
அம்பொன் மலர்த்தாட் டுணையிடத்து

வெறிமென் கடம்பா தியகமழும்
வியன்போய்ப் புழுதி பிறழாதோ?
விளையாட் டயரற் கருதியுளோம்;
வெதும்பிப் புலம்பி மெலியேமோ!

வறிதுண் டுவக்கு மணற்சோறுன்
மகிமை குறியா தமைத்தேமா?



வந்தஉனையாம் வரும்போ(து) ஏன்
வந்தாய் இலையென் றிகழ்ந்தேமா?

சிறிதும் முனிய முறையுளதோ
செப்பாய் சிற்றில் சிதையேலே
தேவைப் பதியில் வாழ்முருகா
சிறியேம் சிற்றில் சிதையேலே. 75

அந்நாள் ஒருமெய்த் தொழும்பனுளம்
அறியப் புழுதி பிறழ் உருக்கொண்(டு)
அணுகிச் சிலவா றாடல் செய்தாய்;
அதுநின் தொழிலே ஆயிடினும்,

இந்நாள் எமைத்துன் புறுத்தேல், உன்
இருதாள் மறவேம்; நின்னருட்சீர்
இன்றி யமைவ திலையெனில் இங்கு
யாம் செய்யிதுமற் றெவர் செயலோ?

முந்நால் நெறிக்கும் பொதுவாம் நீ
முழுது மெமைச்சோ தனைபுரிதல்
முறையோ? உனையே கதியெனும் சொல்
மொழிவேம் எமக்குள் முதலாவாய்!

செந்நா வலர்பற் பலர் புகழும்
சேயே சிற்றில் சிதையேலே
தேவைப் பதியில் வாழ்முருகா
சிறியேம் சிற்றில் சிதையேலே. 76

**வேறு**

**பொழில் வளம்**

மைம்மருவு சீர்கண்ட மயிலின மகிழ்ந்(து) அகவி
வார்கலபம் விரிய ஆட,
மதுவுண்டு களிகொண்ட வரிவண்டி னங்கள் இசை
வகைவகை தெரிந்துபாட,

மம்மர்மலி வானரத் திரள்களிற் சில, பலவின்
வண்கனி களைப்பறித்து
வல்லியங் கொடியிற் பிணித்துக் கழுத்திட்டு
மத்தள மெனக்கொட்டலும்

கைம்மணி யெனக் கோங்கின் அலர்களைச்
சிலகொளக்
கண்டமரர் இன்பமெய்தக்
கமழ்சந்த மால்வரைத் தென்றல்வந் துலவலிற்
கவின்மாரி யென உகுக்கும்

செம்மலர்ப் பொழில்நிலவு தேவைநகர் வேலவா
சிற்றிற் சிதைத்திடேலே
சிவகுருப ரானந்த சரவணப வாளங்கள்
சிற்றிற் சிதைத்திடேலே. 77

**வயல் வளம்**

மொய்வளம் பொலிதரு மலர்க்கூந்தல் அணிநிலவு
முத்தநகை மாதர் நல்லார்
மூரிநடையினை, மொழியை, விழை எகினமும்,
கிளியும்
முன்றிலிற் பஞ்சரத்தில்

மெய்வளர்த் துறுநாளில் வெள்ளன்னம் மற்றதை
வியந் தழுக் காறுமிஞ்சி
விரிதிரைப் புனல்வாவி நடுமலரு முண்டக
மிசைக்குல வினத்தின்மேவித்

தைவசித் துக்கலவி யின்பமும் நுகர்ந்துமலி
தரு சினை பயந்து, மோதும்
தடவரால் இனமஞ்சி நெற்பயிர்ச் சோலையிற்
சங்குமிழு முத்தைநத்திச்

செய்வரம் பிற்றுயில்கொள் தேவைநக ராதிபா
சிற்றிற் சிதைத்திடேலே
சிவகுருப ரானந்த சரவண பவாளங்கள்
சிற்றிற் சிதைத்திடேலே. 78



**வேறு**

**சந்தம்**

*தத்தன தானன தத்தன தானன*
*தத்தத் தனதானா*

சற்பம தேறிந டிக்கும யூரம
தற்குத் தகும்வீரா
தத்துவ ஞானவி ளக்கமி லாதவர்
தர்க்கத் தொளிராதாய்

அற்பர்கள் வாசல்க ளிற்றள ராமல்அ
ளித்திட் டருள்கூர்வாய்
அக்கரம் ஆறும்நி னைக்கவ லார்தம்அ
கத்திற் றிகழ்பாதா

சொற்பன கோடிக ளிற்பல வாறுசொ
லக்கற் றவினோதா
துர்க்குணம் நீடும னத்தின ராதிய
துட்டர்க் கொருகாலா

சிற்பர னார்விழி யிற்றரு பாலக
சிற்றிற் சிதையேலே
செட்டுறு தேவைந கர்க்கும ராளமர்
சிற்றிற் சிதையேலே. 79

*தானன தத்தன தானன தத்தன தத்தத் தனதானா*

நீறுமி டைப்புனை வாரைவெ றுக்கும்நெ
றிக்குட் படுதீயோர்
நேயம கிழ்ச்சியு றாமல், அறத்தொகை
நித்தத் தயரா(து),ஒர்

ஆறுபொ றிக்கவு மாரர்வி ருப்பம்அ
கத்துட் குமுறா(து),ஏழ்
ஆயவி தப்பவம் ஏதுயிர் கட்கெனும்
அற்பக் குணராவார்

பாறுந ரிக்கிறை யாக, உனைப்புகழ்
பத்தித் துறைசேர்வார்
பாதம லர்த்துகள் சூடிடும் நற்றொழில்
பற்றிக் கொளல்பாராய்!

தேறுபு னற்சடை யாரரு மைச்சுத!
சிற்றில் சிதையேலே
தேவபு ரிக்குக னேமுனி வுற்றெமர்
சிற்றிற் சிதையேலே. 80

*தானதன தானதன தத்ததன தானா*

பாவர்உண ராஇருப தத்தொருகு மாரா!
பாரதியை நேர்பலர் பழிச்சியவி னோதா!
ஓவலரி தாயபுகழ் உற்றுயர்வி சாகா!
ஊறுதவிர் ஞானவெளி யுட்டிகழ்கு ணாளா!

மாஅலற மோதிவரும் மற்குலவும் வேலா
மால்வரைதொ றாடல் செய்ம ழக்களிறு
போல்வாய்!
சேவலணி தோள்வயவ சிற்றிலழி யேலே
தேவைமுரு காளமது சிற்றிலழி யேலே. 81

## 9. சிறுபறைப் பருவம்

### பறையறையுங்காற் பகரும் பொருள்கள்

ஆறுசம யங்களும்நின் முகமான வாறும், உன(து)
அடியவர்க் கடிமையாகி
அவரடித் துகளைமுடி மிசையணியு மெய்யுணர்(வு)
அதற்கிணையி லாதவாறும்,

கோறுதொழி லும்புலைத் தன்மையும் தவரில்வினை
குன்று மென் றுள்ளவாறும்,
குருவடிவ மும்தரும மும்பத்தி யும்பொதுக்
கொள்கையென நின்றவாறும்,

கீறுமதி யனைய நுதல் மடவார்கள் மயல்மிகிற்
கீழ்மைவந் தெய்துமாறும்,
கிளர் சந் தமும் பொருவில் யமகமும் விளங்கவரு.
கிள்ளைஉயர் வுற்றவாறும்,

சேறுறமும் நெஞ்சகத் தினரும்அறி தர இன்று
சிறுபறை முழக்கியருளே
செகதலம் புகழ்தேவை நகர்புரந் தருள்சாமி
சிறுபறை முழக்கியருளே. 82



மெய்ஞ்ஞான மாகிய விளக்கினொளி யாவது
விளங்கருட் சித்தியென்றும்
வியன்மருவு சகளமே நிட்கள சொரூபத்தின்
மேன்மையை யுணர்த்து மென்றும்

எஞ்ஞான்றும் அழியாத புகழ்நிறுத் துங்குணம்
எவர்க்கும் எய் தாததென்றும்
இந்திரா தியராய வானவர்கள் முத்தருக்(கு)
இணையாகி டார்கள் என்றும்

அஞ்ஞான மெனவளரும் ஆணவத் தகுவனுக்(கு)
அணிமகுடம் ஐயம் என்றும்
அகிலத்தி னுக்குதவி செய்யநண் ணாத்தவர்கள்
அலகையிற் கொடியரென்றும்

செஞ்ஞாயி றாமெனத் திகழ்தர விளங்கிஒரு
சிறுபறை முழக்கியருளே
செகதலம் புகழ்தேவை நகர்புரந் தருள்சாமி
சிறுபறை முழக்கியருளே. 83

அருள்வளமை யொடுநிலவு சகளத்தி யானத்தை
அன்றியொரு மார்க்கமில்லை
அது தொட்ட நாளிலொரு சமயமே மிக்கதென்
றவிர்தரும் அதிற்று ணிந்தாற்

பொருள்வரவு போக்கற்ற பொதுவா யிலங்கும்அது
புந்தியிற் றோன்றினாலும்
பொருவரிய தூலவெளியிற் காணும் வரைமுயலல்
போதநன்(று) அதனை நீங்கி

இருள்வசத் தினராய் அகம்பிரம வாதத்
தினிற்சென் றிளைக்க ஒண்ணா(து)
இருநாலு சித்திகளும் ஒரு நாலு முத்திகளும்
ஏற்பவர் தமக்கும் நல்கத்

தெருள்வர் அவர் எனுமுண்மை புவியினும்
திகழ்வுறச்
சிறுபறை முழக்கியருளே
செகதலம் புகழ்தேவை நகர்புரந் தருள்சாமி
சிறுபறை முழக்கியருளே. 84

**தீயமுழக்கம் பல நீங்கச் சிறுபறை முழக்கவேண்டல்**

முத்துதிர் தரப்பல கணுக்கழை வளைக்குமதன்
முரசத்தி னதுமுழக்கும்
மூவகைப் படும் நெறியி னுட்கருமம் உயர்வென்ன
மொழிகின்ற நூல்முழக்கும்

தத்துதவி யளவறும் உயிர்த்தொகுதி யடுசமன்
தன் பகட் டடல் முழக்கும்
சாரணர் பவுத்தர்முத லாகியது டுக்கர்வதி
தரும்அவைப் பெருமுழக்கும்

அத்துவித அநுபூதி வந்ததொத்(து) இறுமாப்
படைந்து மகிழ் வார்முழக்கும்
அயர்வுற, எழுத்தாறும் மறவாத கவுமாரர்
அமர்திருப் புகழ் முழங்கச்

சித்துவிளை யாடித் தினந்தொறுஞ் சலியாது
சிறுபறை முழக்கியருளே
செகதலம் புகழ்தேவை நகர்புரந் தருள்சாமி
சிறுபறை முழக்கியருளே. 85

மந்திக் குணக்கயவர் கலைமுழுதும் அஞ்சமிளிர்
வண்டமிழ்க் கலைமுழங்க
வதைநல மெனச்சொன்ன மறைகள்ஒல்
க,ப்பகவன்
மைந்தனுவல் மறைமுழங்க,

வெந்தித்த நீதிபுரி வாரழிய, நீதிபுரி
வேந்தர்தம் புகழ் முழங்க,
விடஅரவம் நிகர்கொடியர் மிடியடைய,
முகிலனையர்
மிக்கவாழ் வொடுமுழங்கத்

தந்திக் கணத்தைநிகர் தகுவர்குலை யப், புலவர்
தமதுபே ரிகைமுழங்கச்,
சரதமறி யாப்பதிதர் தட்டழிய, மாதவத்
தன்மையோர் நனிமுழங்கச்

சிந்தித்தொர் ஐவகைநி லந்தொறும் சென்றினிது
சிறுபறை முழக்கியருளே



செகதலம் புகழ்தேவை நகர்புரந் தருள்சாமி
சிறுபறை முழக்கியருளே. 86

**வேறு**

**முருகனைச் சேர்ந்தார் முழுதும் ஆடுதல்**

ஐயானனத்தோர் பரனாகும்
ஐயன் பொதுவில் அமரர் குழாம்
அறிய நடித்தான், அவன்மனையாம்
அன்னைதானும் அதுசெய்தாள்,

கையார் முகத்துத் துணைவன் ஒரு
கன்னிதனைத்தாங் கியும் நடித்தான்
காக்குங்கருணை பெறுமாமன்
கவின் மத்தளக்கா ரனுமானான்

எய்யா(து) அசலந் தொறுநடித்தாய்
ஏறும் மயிலும் நடிக்கின்ற(து)
இளப்பம் வருமென் றுளத்து ஒல்கேல்!
எழிற் றொண்டகக்கா னவர்மகள்கண்

மொய்யார் தடந்தோள் ஆறிரண்டால்
முழக்கிய ருளாய் சிறுபறையே
முருகார் பொழிற்றே வையில்வணிகா
முழக்கியருளாய் சிறுபறையே. 87

**மூன்றாசையினில் பொன்மயல் தீதெனல்**

பற்றுந்தவத்தோர் அனைவருக்கும்
பார்பெண் பொன்னாம் பகைமூன்றே
பணிக்கே தனத்தோன் முதற்பலபேர்
படியாலி ழிந்து பாடிழந்தார்;
எற்றும் உரற்காற் றிசைவேழம்
இருநான்கினையும் பொருமார்பத்(து)

இகல் வாளரக்கன் ஒருமகளால்
எண்ணில் படையோ டிறந் தொழிந்தான்;
கற்றும் துறந்தும் திருவேடம்
கவினப் புனைந்தும் பலர்வாயிற்
கடையில் உழன்றார் சிலர்; அவற்றுட்
காணம் கொடிதாம் எனல் உலகம்

முற்று முணரத் திருவருளால்
முழக்கி யருளாய் சிறுபறையே
முருகார் பொழிற்றே வையில் வணிகா
முழக்கி யருளாய் சிறுபறையே! 88

**வேறு**

**சந்தம்**

*தனத்த தானன தனத்த தானன தனத்த தனதனனா*

இறுக்கு பூண்முலை மறத்தி தாள்தொழு(து)
இருக்கும் இசையுடையாய்
எதிர்த்த சூரனை வதைத்து வானவர்
இறைக்கு முடிபுனைவாய்

உறுக்கு கார்நமன் அடுத்தி டாதருள்
உரத்தை யருள் குரவா
உமைப்பெ ணாள்இனி தெடுத்த போதுளம்
உருக்கும் நகைபுரிவாய்

கறுக்கு மாமயில் நடத்தி யேபல
கணத்தில் நடுமிளிர்வாய்
கருப்பு வார்சிலை பிடித்த வேள்படை
களிக்கும் எழில்முருகா

முறுக்கு கோடுறு தகர்க்கொள் சேவக
முழக்கு சிறுபறையே
முதற்கொள் தேவையில் வசிக்கும் வேலவ
முழக்கு சிறுபறையே. 89

*தானன தத்தன தானன தத்தன தனத்த தனதனனா*

சேவல்பொ றித்துயர் கேதன நட்பினர்
திடுக்க மற, முதுநூல்
தேர்பவ ரைப்பெரி தேசும டத்தினர்
செருக்கு நசிவுற, வேள்

ஏவ நகைத்தரு காமக ளிர்க்குளம்
இளைக்கும் இளையவர்போல்
ஏகியும், நிற்புகழ் பாவலர் வெட்கமொ
டிளைக்கும் வினைகெட, ஊர்



கோவறை யக்கவு மாரர்ப தத்துகள்
குவித்த தலையினன்னூர்
கூபமமைத்துள பாறையி னிற்புனல்
குதிக்க, அதுமுதலாம்

மூவலில் சத்திய வாழ்வுபெ ருத்திட
முழக்கு சிறுபறையே
மூதுணர் வைத்தரு தேவையில் முத்தைய!
முழக்கு சிறுபறையே. 90

*தத்தன தானன தத்தன தானன தனத்த தனதனனா*

மொய்த்தகை சால்அள கத்தினர் மோகனன்
முழக்கு சிறுபறையே
முற்றுணர் சீலமு டைக்கரு ணாகரன்
முழக்கு சிறுபறையே

மொத்தமு மாகி வியட்டியு மானவன்
முழக்கு சிறுபறையே
மொக்கணி வேழமு கற்கொரு சோதரன்
முழக்கு சிறுபறையே

முத்தமிழ் நாவல ருக்குயர் தாரகன்
முழக்கு சிறுபறையே
முட்பொலி தாளுறு குக்குட கேதனன்
முழக்கு சிறுபறையே

முத்தர னேகர்வ ழுத்திய சேவகன்
முழக்கு சிறுபறையே
முக்கணர் தேவையி னிற்றிகழ் வேலவன்
முழக்கு சிறுபறையே. 91

## 10. சிறுதேர்ப் பருவம்

**தந்தையின் பெரிய தேர்மீது தனையன்**
**சிறுதேர் உருட்டல்**

தவசீலர் பலருக்கும் ஒருதலைவன் எனநின்ற
சதுமுகன் பாகனாகச்,
சத்தமறை பரியாக, முடிவாய பிரணவம்
தணவரிய கசையதாக,

குவடாயி ரத்துள்உயர் பைம் பொற் சிலம்(பு)
இணையில்
கோதண்ட மாக, உரகக்
குலமகிபன் நாணாக, முகிலனைய மாயவன்
கோதறும் பகழியாக,

நவநாத சித்தர்களும் மெச்சவளர் இரவிமதி
நல்ஆழி யாக, உம்பர்
நவிலரும் படையாக, ஒன்னலர் தமைக்கடிது
நக்கெரிப் பது குறித்துச்

சிவனேறி யூர்தரு பெருந்தேரின் மீதில்ஒரு
சிறுதே ருருட்டியருளே
செம்பொன் மலி தேவைநக ரம்பரவும் வேல்முருக
சிறுதே ருருட்டியருளே. 92

**திருநீற்றினை இகழ்வார் பெறுவது**

இருவாட்கண் மயிலனைய மங்கையர்க் கரசியார்
எழுதிய முடங்கல் பற்றி
எழில்வீழி மிழலையினை விட்டுநா விற்கர(சு)
இயம்புசொற் றடையைமீறி

வருகோட்கள் பற்பலவும் அடியார்க்கு நல்லஎன
வகைபட விரித்துரைத்து
வைகைஅம் துறைநீர் நலங்குலவு தென்மதுரை
வளநக ரிடத்தில்வந்து

பொருகோட்டு வேழம்நிகர் பூழியர்பி ரானுளம்
பூரிப்ப விளையாடி ஒன்
பொலி தழைக் கையினர் தமைக்கழுவிலேற்றிப்
புவித்தலையில் நீ நிறுத்தும்

திருநீற்றை யிகழுமவர் தலைகோடி உருளஒரு
சிறுதேர் உருட்டியருளே
செம்பொன்மலி தேவைநக ரம்பரவும் வேல்முருக
சிறுதேர் உருட்டியருளே. 93

**முருகன் தேர் உருட்ட உருள்வன**

காரவுணர் கையணியு மங்கலத் தரிவையர்கள்
கண்கள்நீர் மிகஉருட்டக்



கழறுமவர் இதழ்பருகும் வாயுடைத் தலைகளைக்
கன அலகை யினம் உருட்ட

நாரணன் முதற்றேவர் மனைவியர்கள் மகிழ்வெய்தி
நகுமணிப் பந்துருட்ட
நானிலம் விழுங்கியுமிழ் மலர்முத லனந்தத்தில்
நகைவந்து நனியுருட்டக்

கூரறிவு டைத்தவர்கள் இடையூ றொழிந்துபல
குகைதோறு மணியுருட்டக்
குளிர்கருணை யில்லாத நெஞ்சகத் தீயரெதிர்
கொடியநமன் விழியுருட்டச்

சீரமரும் அனையெனத் திகழ்கின்ற கைகள்கொடு
சிறுதே ருருட்டியருளே
செம்பொன்மலி தேவைநக ரம்பரவும் வேல்முருக
சிறுதே ருருட்டியருளே. 94

**வள்ளிநாயகி தன் மணம்பெறு மியல்பு**

சத்திரக் கைநிலவு முகிலனைய வேடர்தம்
தவமுழுதும் வடிவமான
தனிநீல நிறவனிதை மருவும் இத ணருகில்ஒரு
தண்டணிகை முனிவனாகி

அத்திரக் கவினிலகும் விழியினது பார்வைவந்(து)
அகலந் துளைப்ப உருகி
அவிர்தினைக் கதிர்கொண்டு பின்னிய
மதாணிமுலை
அணைவது குறித்து மறுகித்

தத்திரப் பொய்ப்பசி இளைப்புற்று மாத்தரத்
தரவுண்டு மயிலின் இறகுந்
தழையுங் கலந்து கொடி யிற்பிணைத் திட்டபைந்
தானைபுனை தருமிடைக்கீழ்ச்

சித்திரத் தேரூர்ந்து மகிழ்குமர குருபரா
சிறுதேர் உருட்டி யருளே
செம்பொன்மலி தேவைநக ரம்பரவும் வேல்முருக
சிறுதேர் உருட்டியருளே. 95

### தேரினில் ஊர்ந்து வேள் செய்த ஆடல்கள்

ஓவரும் பலவிழிகள் உறுகரிய மேனியான்
உற்ற வேய் உருவமாற,
உததிநடு வளர் அவுணர் அருகிலயன்• வந்துவந்(து)
ஒல்கிடும் கொடுமை தீரக்,

காவல்புரி யுங்கடவுள் கையாழி தாருகன்
களம்விட்டு மகிமை எய்தக்,
கனதுயர்ப் படும் அமர ரைக்கண்டு கண்டெழும்
கருணையங் கடல் உவப்பத்,

தேவமங் கையர்தம் கழுத்திலணி மங்கலம்
திறமடைய, அசுரமடமார்
செறிகையொடு கூடிஅழ, அன்றுபல பூதர்தாம்
செயசெய எனப்பராவச்

சேவலங் கொடிநிலவு தேரேறு சேவகா!
சிறுதே ருருட்டியருளே
செம்பொன்மலி தேவைநக ரம்பரவும் வேல்முருக
சிறுதே ருருட்டியருளே. 96

**வேறு**

கன்னா ருரித்துக் ககனம் அலர்
கமல மலரைத் தொடுத்தாங்கு
கவிசொற் றுனக்கே யணியுமவர்
கருகப் படுத்துங் கயவர்களும்,

பொன்னா தியமூ வேடணையும்
புறம் போயகல, ஆறெழுத்தும்
புகலும் புனிதத் தினரையிகழ்
பொல்லாக் குணத்துப் புலையர்களும்,

தன்னாண் மலர்த்தாள் நிலையுணர்த்தும்
சதுமாமறையின் அறுசமயத்
தருமத்தினர்பாற் பகைவிளைக்கும்
சமணர் முதலா னவர்களுமாம்



ஒன்னார் குடிக்கோர் நெருப்பாவாய்
உருட்டி யருளாய் சிறுதேரே
ஓங்கும் புகழ்த்தே வையின் முருகா
உருட்டி யருளாய் சிறுதேரே. 97

நீரும் குளிரு மலிதருநீர்
நிலவும் பொதியைத் தலைபிறந்து
நெடும்சந் தனவான் பொழிலிடத்து
நிறைபூந் துணரிற் கமழ்மணமும்,

பாரும் ககனத் தொடுபிலமும்
பகர்முத் தமிழிற் கசிந்தொழுகும்
பசுந்தேன் மணமும், அரமகளிர்
பனிவார் குழலிற் பருமணமும்,

சேரும் பெருமை யுடைத்தாகிச்
சிலர்கண் டுவப்பப் பலர்வெருளச்
செந்தா துதிர்கே தகைச்சுரிகை
தீட்டித் தருதென் றலம்புதுத்தேர்

ஊரும தன்நா ணுறுமழகா
உருட்டி யருளாய் சிறுதேரே
ஓங்கும் புகழ்த்தே வையின் முருகா
உருட்டி யருளாய் சிறுதேரே. 98

**வேறு**

**சந்தம்**

*தான தனத்தன தான தனத்தன*
*தனத்த தனதானா*

ஆமையு றுப்பென வேபொறி முற்றையும்
அடக்கு மவர்வாழ்வே
ஆறுமு கத்தொரு சோதி யெனத்தெளி
பவர்க்குள் உயிர்போல்வாய்!

ஏமவ ரைச்சிலை நாதரி டத்தினள்
எடுக்க மகிழ்பாலா!
ஏழ்புவி உட்கொளும் மாயன்ம னத்தினும்
இனித்த புகழ்வீரா!

கோமள முத்தைய னேயென மெச்சிய
குணத்தர் துணையாவாய்!
கோதறு பொற்பக லாமது ரைத்தமிழ்
கொழித்த புலவோர்பால்

ஊமையு ருக்கொடு போமருள் வித்தக!
உருட்டு சிறுதேரே
ஓசைமி கத்தரு தேவைநகர்க்குக
உருட்டு சிறுதேரே. 99

*தனத்த தானன தனத்த தானன*
*தனத்த தனதானா*

சிவக்கும் ஆறிரு புயத்து வானவ!
செருக்கு மலிதீயோர்
திடுக்க மீறிட அடுத்த பூதர்கள்
சிரிக்க அமர்நேர்வாய்!

அவக்கு ழாமற ஒழிக்கும் நான்மறை
அருத்த முதலோர்வாய்!
அளக்கர் கோஎன முளைத்த மாமரம்
அதைக்கொய் துயர்தோளா!

நவக்கு ராவொடு கடப்ப மாலையை
நயக்கு மணிமார்பா
நரைத்த மாடிவர் பவர்க்க நாளொரு
நலத்தை மொழிவாயா!

உவக்கும் ஓர்கிளி துதித்த பாவல
உருட்டு சிறுதேரே
உலப்பில் தேவையில் வசிக்கும் வேலவ
உருட்டு சிறுதேரே. 100

**வேறு**

*தனதான தனனா தனத்ததன தானா*

இமையார்த மகள்வாய் இதழ்ப்பருகும் வாயா!
இதண்மேவு குறமா திடத்துருகும் நேயா!
கமைதோயு முனிவோர் களைப்பிரிகி லாதாய்!
கடல்சூழு முலகோர் களிக்கும்அரு ளாளா!



எமையாள வருதாள் இரட்டையுடை யானே!
எழுதாத மறைநா லிசைக்கரும்வி னோதா!
உமைகேள்வர் புதல்வா உருட்டுசிறு தேரே!
உயர்தேவை முருகா உருட்டுசிறு தேரே. 101

## நூற்பயன்

**வெண்பா**

கள்ளைக் குடித்தவண்டின் கானமலி தேவைநகர்ப்
பிள்ளைக் கவிப்பனுவல் பேணினால் — வெள்ளைக்
கமலமின்னும் செங்கமலக் கன்னியும்சேர்
வாழ்வுற்(று)
அமலமதாம் வீடுமெய்த லாம். 102

**தேவகோட்டை முருகன் பிள்ளைத்தமிழ் முற்றிற்று**

———

உ

## சிதம்பரம் ஸ்ரீ பாண்டிநாயகன் என்ற

# முருகப்பெருமான் பிள்ளைத்தமிழ்

## தண்டபாணி சுவாமிகள்

### பாயிரம்

### கற்பக விநாயகர் துதி

#### காப்பு-வெண்பா

வெள்ளைக் கவிகை மிளிர்பாண்டி நாயகன்மேற்
பிள்ளைக் கவிப்பனுவல் பேசுவேன்—வள்ளைபடர்
மாபுரத்துட் சீரியதாம் வண்மையுறு தில்லைநகர்க்
கோபுரத்துக் கற்பகங்காக் கும்.

### கலைமகள் துதி

தில்லைமூ வாயிரரும் செந்தில்ஈ ராயிரரும்
நல்லையெனச் சொல்பாண்டி நாயகன்மேல்—வல்லையொரு
பிள்ளைக் கவிப்பனுவல் பேசுதுணை யாரென்றால்
வெள்ளைக் கலையுடைய மின்.

### முதலாவது

## காப்புப் பருவம்

### திருமால்

சிவசமய மகுடநிகர் கனகசபை தனில்நடம்
செய்கின்ற புனிதன் முதலாம்
தில்லைமு வாயிரவர் துதிகூறு முருகனைச்
சேவற் பதாகை யானை



நவமலி தமிழ்ப்புலமை முதிர்பாண்டி நாயகனை
நந்துலவு செந்தில் மேவி
நாகத்து ளார்இகல் கடிந்தோனை அகலாது
நாள்தொறும் காக்க என்றே;
புவனமுழு துண்டுமிழும் நெடுமாலை நீலப்
பொருப்பனைய நாலு திண்டோட்
புங்கவனை ஆழியொடு சங்கணி தடங்கையிற்
பொற்கசை பிடித்து நண்பன்
தவளமா வுறும்இரதம் நடவியவி னோதனைத்
தன்மாம னான கஞ்சன்
தலைகொய்து தாதைதன் தளைகொய்த கடவுளைத்
தழைகொய் திறைஞ்சு வோமே. 1

### சிவபிரான்

***தத்ததன தத்ததன தத்ததன தத்ததன***
***தத்தனா தனதாந்த — தானனத் தாத்தனா***

முத்தர்பல ரைக்கழைவ னத்தினில்ம யக்கவென
முத்துமா லிகைதாங்கும்-மாமுலைச் சோட்டொடோர்
முக்கியஉ றுப்பும்இல கக்கலைத விர்த்துவரும்
முற்றுமா மயில்போன்ற-மோகினிக் கேற்றகோன்
முச்சுடரெ னத்தெளிஞர் செப்பிடவி ளக்கமுறு
முக்கண்நா யகன்நேர்ந்த-நால்வரைப் பாட்டுமா
மொய்த்தஇத ழிப்பதம்உ றப்புரியு மெய்க்கடவுள்
முப்புரா தியர்சாம்பர்-ஆகிடத் தோற்றுசீர்
மைத்தடம லைச்சிலையு டைப்பரம ருத்திரன்முன்
மற்செய்வோர் கடுநீண்ட-தீயெனப் போய்க்கெடா
மத்தன்எனை ஒப்பவர்து திப்பதையும் வெற்(று)இறகு
வைத்ததே எனவாங்கி-மாலையிற் கோத்துளான்
வத்திரமெ னப்புலிஅ தட்கரிஅ தட்கொள்அரன்
மட்கிடா வளைதூங்கு-காதுடைப் போத்திநீர்
வற்றிலில்ம திச்சடிலன் ஒப்பில்கன கச்சபையில்
வத்துவா னவன்ஆன்ற-தாள்களைப் போற்றுவாம்;
எத்தனைவி தத்தினில்வெ றுக்கினும்எ னைக்கவரும்
இச்சைமே வியசேந்தன்-வாரியிற் போட்டநூல்
எப்படியும் இப்பிறவி யிற்பெறஎ னுட்கருதி
எய்க்குமா(று) உரையீந்த-வாயுடைத் தீர்க்கவான்.

எக்குறியும் முற்பகர்கு லத்தவர்வ ளர்த்தகிளி
இட்டவே லையிலேன்று-போம்எழிற் கீர்த்தியோன்
இக்குநிகர் சொற்பகரும் அத்திமகள் பொற்புமுலை
யிற்கொள்மால் வெளிதோன்றி-டாளதுளத்(து)
ஆக்கும்வேள்
வித்தகர்த மக்கரசெ னத்திகழ்மு ழுப்புலவன்
வித்தையோர் இருநான்கும் ஞானமுற் றோர்க்கெலாம்
மெத்தஉத வத்தரும்ஒ ருத்தன்அகி லத்தவரும்
மெச்சுகோ மளமார்ந்த-தோள்களிற் சேர்ப்பதா
மெய்ப்படுதி ருப்புகழ்ப டிப்பவர்த மக்கெளியன்
மிக்கவா ரியில்ஆழ்ந்த-சூரனைத் தாக்கியே
விட்புலம்அ ளித்தவன்ள னப்பகர்ள மக்கினிய
வெற்றிவேல் புனைபாண்டி-நாயகற் காக்கவே. 2

### உமாதேவியார்

***தந்தனத் தனதாத்த தந்தனத் தனதாத்த***
***தந்தனத் தனதாத்த — தானனத் தாத்தனா***

மந்திரப் பொருளாக்கம் என்றிருப் பவள்போற்றும்
வன்கவிக்(கு) அமுதாக்கினாள்பொற்பு மிக்குளாள்
வஞ்சகக் கொடி யோர்க்கு நஞ்செனத் தகுமூர்க்கம்
வந்தவர்க்(கு) இனிதூட்டு-பால்வைத்த செப்பினாள்
இந்திரச் சிலைமேற்கொள் சிந்துரப் பொடி வேர்க்க
என்பணிப் பரர்பார்க்க-ஆடச்ச லித்திடாள்
எஞ்சலற் றருள்ஊற்றும் அஞ்சனத் திருநோக்கி
எங்களுக்(கு) ஒருபாட்டி-தாள்பற்றி மெச்சுவேன்
வெந்திறற் சமண்மாற்ற வந்தசிற் பரமூர்த்தி
விஞ்சையிற் பொருள்காட்டும்-ஞானக்கு ருக்கள்ஓர்
விண்டுமுற் புகழ்கீர்த்தி கொண்டமற் புயன்வேற்கை
வென்றிவித் தகன் ஆர்க்கும்-மேலுற்று நிற்கும்வேள்
சந்தியிற் கரிவேட்கை மிஞ்சுபிற் றுணைபூத்த
தண்பொழிற் புலியூர்க்குள்-வாழ்சித்தர் பெற்றசேய்
சஞ்சலப் பிணிதீர்க்கும் என்றிருப் பவர்வாழ்த்து
சந்தமுத் தமிழ்நாட்டு-வேளைப்பு ரக்கவே. 3



### விநாயகர்

***தாந்தனா தனதான தய்யனத் தாத்தனா***

வேண்டல்போல் ஒளிர்ஞான வல்லவைக்(கு) ஆக்கமாம்
வேந்தைமா மதமேவு கையனைக் கீர்த்திபோல்
நீண்டகோ புரமீது தில்லையிற் றோற்றலார்
நேர்ந்துளார் வினைசாடும் மெய்யனைப் போற்றுவாம்
மாண்டசா ரணர்தாமும் வைததுர்ச் சேட்டையே
வாய்ந்ததோ(டு) அடம்ஆண்மைபொய் அரக்(கு)ஏற்றுவாழ்
பாண்டர்வே ரறுமாறு செய்தருட் காட்டுமோர்
பாண்டிநா யகனாம்எம் ஐயனைக் காக்கவே. 4

### நவக்கோள்

***தந்ததன தந்ததன தந்ததன தந்ததன***
***தந்ததன தந்ததன தந்ததன தத்தனா***

வெங்கதிர்நெ ருங்குவத னந்திகழ்நெ டும்பகலை
வெண்சுடரை அங்கிநிக ருங்குசனை மிக்கநூல்
வென்றிமரு வும்புதனை அண்டர்பர வுங்குருவை
விஞ்சையுணர் ஒண்புகரை அண்டினர்த மக்கொலா(து)
எங்கணும்நி றைந்ததனை, நம்பல்உத வுஞ்சனியை
எஞ்சலில்வி டம்பொழியும் அங்கதம்இ ரட்டையோ(டு)
இன்புறவி ரும்பியெழில் விஞ்சுகுளி கன்றனையும்
எந்திரம்வ ரைந்(து)அதில் அமைந்தொளிர மெச்சுவேன்
மங்களமி குந்ததொரு குஞ்சரியு டன்குறவர்
மங்கையுண ருங்கணவன், அன்பரைவெ றுத்திடான்
மஞ்சுதவ ழுங்கனக மன்றில்நட னம்புரிய
வந்தவர்த ருங்குழவி குன்றுதொறும் உற்றவேள்
கொங்கவிழ்க டம்புகுர வம்குவளை தங்குகணி,
குஞ்சரமு கன்றுணைவன் இந்திரர்து திக்கும்வேல்
கொண்டவய வன்சிகிஇ வர்ந்தமுரு கன்தமிழர்
கும்பிடம கிழ்ந்துலவு கந்தனை அளிக்கவே. 5

### கலைமகள்

*தனன தானன, தனன தானன தனன, தானன, தத்தனா*

கலப மாமயில்அழலை நேர்தகர் கவள மால்களி(று)
உற்றவேள்
கருணை வாரிதிநெடிய வேல்புனைகரன்ம காரதர்
சுற்றுசேய்
உலகெ லாமுணர் சபையு ளான்உமை உரிமை யான்நடு
வைக்கவாழ்
ஒருவ னாகிய செழியர் நாயகன்உவகை மேலிட நித்தமே
அலகி லாமறை பகரும் வாயினள் அதர வூறல்அ ளிப்பதால்
அகில மானிடர் சிலரும் வானவர் அனைய ராகஇ
யற்றுவாள்,
சலச ஆதன புனித பாரதிதமியன் நாடொரு
சொற்சொனாள்
சரச கோமள மதுரசகர தவள வாணிபு ரக்கவே. 6

### இலக்குமி

*தனத் தனத்தந் தனத் தனத்தந் தனத் தனத்தந் தானனா*

திருட் டரக்கன் கடற் குளித்தும் சினத் தெதிர்க்கும் போதிலே
திறற் புயத்தொன்(று) அயிற் செலுத்தும் திருக் கரத்தன்
தீதுறா
அருட் சபைச்சங் கரற் குவப்பன்(று) அளித் தமுத்தன்
தேவர்கோன்
அடத் தினைக்கொண் டிடப் பொறுத்தங்(கு) அதற்
குமெச்சுந் தாரன்மேல்
இருட் குழற்பொன் பொருட் களிப்(பு)அன் பினர்க்
குறத்தன் பார்வையால்
இசைத்(து) எழிற்பங் கயத் தினிற்றங்(கு) இலக்
குமிப்பெண் கோதிலாள்
உருட் டுவட்டம் தொனித் தநத்தென்(று) உரைப்
பவைக்(கு)அன் பாகுமால்
உரத் தணைக்குந் துணைத் தனத்(து)இங் கொருத்
திறித்தம் காவலே. 7



### பலதேவர்

*தனதன தத்தன தனதன தத்தன தானன தந்தனனா*

அலகில்பு கழ்ச்சிகொள் முனிவரர் சொற்படி ஆரந
றுங்கனிபால்
அமுதுநெய் சர்க்கரை அனையவை இட்டுயர் ஆர்வமு
டன்தினமே
திலமள விற்கொலை முதலிய(து) அற்றவர் சேகரம்
அன்புறவே
திரிபுவ னத்தினில் மருவிய பற்பல தேவரை
யுந்தொழுவாம்
நலமுறு முத்தமிழ் மலியவ ளர்த்தவர் நாயக
மென்றொளிர்கோன்
நறைமலி செச்சைகொள் வனசரன் விப்பிரர் நான்மறை
யும்புகழ்வேன்
கலகமி கப்புரி சமணொழி யப்பொரு காளைக டம்பணிசேய்
கனகச பைச்சிவன் மதலையு வப்புறு காவல்பு ரிந்திடவே. 8

### சமயச் சின்னம்

வெண்டா மரையாள் செவிகவர விரும்பும் பலநூல்
விரிப்போனை,
வேதன் கதறப் புனைத்தானை விளங்கும் சேவற்
கொடியானைத்
தண்டா யுதமும் வடிவேலும் தாங்குங் கரத்துப் பெருமானைத்
தகைசேர் புலியூர் தனைவிரும்பும் தமிழ்நாட் டரசைத்
தினம்காக்க
கண்டார் வணங்கத் திகழ்காவிக் கலையைச் சமணர்
கழுஏறக்
கமழ்வெண் பொடியைச் சிவனார்தம் கண்ணின்
மணியைப் பெரிதேத்தி
வண்டார் துளவன் திருநாமம், மலைக்கோன் மகள்சிந்
துரம்முதலாம்
வகையைப் புகழ்ந்து பெரியோர்தாள் மலரின் துகளை
வழுத்துதுமே. 9

### பொதுத் தெய்வம்

*தானனத் தானதானன தானனத் தானதானன*
*தானனத் தானதானன தன்னனத் தாத்தனா*

வேதவித் தாயபூரணம் யோகியர்க் கானசாதனம்,
வேறறக் கூடும்ஞானிகள் உண்மையிற் றேக்குதேன்
வீடெனப் பேசுகோவிலில் வாழ்வ(து)எட் டாததாரகம்
வீறுடைப் பாலர்நாடொறும் உன்னலிற் காட்டுசீர்
மேன்மையுற் றோர்கள் சேர்தரும் நால்வகைப் பூமியோடொரு
வேம்அழற் பாலைமீதினும் நண்ணுதற் கேற்றகோ
மேலவர்க்(கு) ஈறுதோய்தரு போருடைத் தீரராகிய
வீரரைக் கோபியாதது பன்மதத் தாற்கெடா(து)
ஓதலிற் றோணொணாதது வாய்மையிற் சாருமாதவர்
ஊழ்கெடச் சாடுபேரருள் விண்முகிற் கூட்டும்நீர்
ஓதம்வற் றாதுமீறல்உ றா(து)அடக் காண்மை
கூர்பொருள்
ஊர்சுடர்க்(கு) ஆயிபோல்வது பொன்னதைப்
போற்றிவாழ்

ஊரவர்க்(கு) ஆவியாம்மட மாதர்பொய்ப் போகமால் கெடும்
ஓகைமிக் கீயு(ம்)மாகுரு என்னநத் தார்க்கெலாம்
ஊறுறிற் பேசிடாதது, மாய்வில் சத் தாதியாமிளிர்
ஓர்பொதுத் தேவே னாநிதம் எண்ணிமிக் கேத்துவாம்.

வாதமிட் டேமுனாள்எதிர் சாரணர்க்(கு) ஏமனானவன்,
வாரியிற் சூரர்மாய்வுற மின்னயிற் றூக்கியே
வானகத் தேவர்கோன்முடி சூடிமுற் போலநாடொறும்
வாழவைத் தோன், மகாரதர் பன்னுமெய்க் கீர்த்தியோன்.

மாவலிக் காகஓர்குற ளாய் இரப் போனும் ஆகிய
மாயனுக் கானதோர்மரு கன்,முழுத் தீர்க்கவான்,
வாரணக் கேதனாதிபன் மோகனக் கோமளாகரன்
மானெனப் பார்வைசேர்எம(து)அன்னையர்க்(கு)
ஆக்கவான்

ஏதமற் றோர்கள்சூழ்புலி யூரில்உற்(று) ஆடுவார்மக
வேயெனக் கூறுவாரையும், அன்னவர்க் காற்றலால்



ஈறில்சொற் பேசுதேசிக னேயெனப் பேணுவாரையும்,
யாவர்சொற் போலும்வாழ்பெரு வண்மையைப்
பாக்களால்

யாமெனப் பாடுவாரையும், நாடும்உற் சாகன், மாமயில்
ஏறும்வித் தாரவேள், மலை மன்னன்மற் றோட்களால்
ஈடில்சொற் சேரவாழ்வுறு பூழியக் கோடிநாயகன்
ஏதிலர்க்(கு) ஏறதாவளர் அண்ணலைக் காக்கவே. 10

## இரண்டாவது

## செங்கீரைப்பருவம்

நீர்பூத்த வேணிப் பிரான்எழிற் றில்லைநடு
நின்றுநடம் ஆடல்கண்டு
நெக்குருகும் அம்மைதிரு முலையமுதும் ஓராறு
நீடொளி மடந்தை மார்தம்
வார்பூத்த கொங்கைதரு பாலும் புசித்தன்பர்
மனமனைய தாமரைப்பூ
மத்தியிற் கவுமார சமயநிகர் பொய்கைமிசை
வைக்கக் கிடந்து கொஞ்சிப்,
பார்பூத்த நாவலர்க்(கு) உதவுகர பந்தியிற்
பன்னிரு விரற்சு வைத்துப்,
பகரறும் எழுத்தாறும் மொழிபவர் சுமக்கும்இரு
பாதவிரல் வாய்ம டுக்கும்
சீர்பூத்த குழவியென விளையாடும் ஒருவனே!
செங்கீரை ஆடி அருளே
செந்தமிழ்க் கிரிநிலவு தென்பாண்டி நாயகா!
செங்கீரை ஆடி அருளே. 11

#### குழந்தை முருகனைக் கொஞ்சுமுறைமை

வல்லைஒத்(து) ஒளிர்முலைச் சிவகாமி வல்லிதிரு
மடிமீது வைத்த ணிந்த
வளைகிலுக் கிட,மலர்க் கைகொண்டு நீராட்டி
வன்ன முன் தானையைக் கொண்(டு)
ஒல்லையில் துவர,மெல் லெனஒத்தி ஆற்றிப், பின்
உலகெலாம் உய்ய வேண்டி

ஒருவிதப் பொட்டிட்டு, ஞானமுடன் எண்சித்தும்
உதவுபால் அமுதம் ஊட்டிக்,
குல்லையிற் றிகழ் வதனம் ஓராறும் மலரும்
குறுஞ்சிரிப் போர்ந்து, கொஞ்சிக்,
குஞ்சரமு கத்தவன் தொடர்புறக் கொடுவந்து,
குறைவில்சிற் சபையில் ஆடும்
தில்லைவித் தகனிடத்(து) உதவவளர் குழவியே!
செங்கீரை ஆடி யருளே
செந்தமிழ்க் கிரிநிலவு தென்பாண்டி நாயகா!
செங்கீரை ஆடி யருளே. 12

**பல நற்செயல் தோன்ற முருகன் தோன்றினனெனல்**

கொங்கவிழ் மலர்த்தரு நிழற்கொண்ட புலவரும்
குவலயப் புலவர் தாமும்
குறைவில்சீர் எய்துமென மகிழ்வுறச், சூர்முதற்
கொடியகோ லரசர் அன்னோர்
தங்கணத் தினர்,புறச் சமயத்து ளார்,புலைத்
தன்மையோர், அனையர் தாமே
தபனன்முற் கிருமியிற் றுடிதுடித் தயர்வுறச்,
சட்சமய வாண ரெல்லாம்
மங்களம் பலசெய்ய, மடுவில்வரு மைந்தனே!
மறுவில்சிற் சபையில் ஆடும்
வள்ளலார் தவமுதிர வடிவான தெய்வமே!
வதனங்கள் ஆறு கொண்டாய்!
செங்கரும் புடையவேள் மனம்நாணும் அழகனே!
செங்கீரை யாடி யருளே
செந்தமிழ்க் கிரிநிலவு தென்பாண்டி நாயகா!
செங்கீரை யாடி யருளே. 13

**முருகன் ஆடியதன் காரணமாகப் பலர் பலவிதம் ஆடினரெனல்**

தந்தையா கியபரன் கனகசபை யதனிடம்
சரணொன்று தூக்கி யாடத்,
தாயான சிவகாமி காளியுரு வாகியோர்
சபதத்தி லாட, மாமன்
கந்தையினில் அவல்கொணரும் அவன்முதற் பலதோழர்
காணவொரு பாம்பி லாடக்,



கமலையா கியமாமி ஆறெழுத்து ஓதுமவர்
கவிபகர் தலத்தி லாடப்
பந்தைநிகர் கொங்கைகொளும் வல்லவை தனைக்கொண்ட
பரிவினாற் றமைய னாடப்
பக்தர்,வா னவர், முனிவர், முதலினோர் அனைவரும்
பகையொழிவ(து), எண்ணி யாடச்
சிந்தையினில் ஆடும்நீ திருவருட் களிகெண்டு
செங்கீரை யாடி யருளே
செந்தமிழ்க் கிரிநிலவு தென்பாண்டி நாயகா!
செங்கீரை யாடி யருளே. 14

**முருகன் சிறப்பு**

புத்தமுதெ னக்கவி தொடுத்தணியும் உத்தமப்
புலவர்களும், உடல்மு முக்கப்
புனையும்வெண் ணீறுடைய கவிமார புனிதரும்,
புலையாதி தவிரும் வண்மைப்
பக்தர்களும் அலைகடலை உண்டுவிட் டவன்முதற்
பலகோடி முனிவர் தாமும்,
பணிகின்ற முருகனே! அணிதுங்க வேலிலகு
பன்னிரு புயத்தண்ணலே!
செத்தமக பதிஎன்பும் மலவரன் தலைகளும்
திருமால் உடற்கு றிப்பும்
சீறுபாம் பணியும் புலித்தோலும் ஆடிடச்
சிற்சபை யிடத்தி லாடும்
சித்தனரு ளக்குலவு சிவகாமி புதல்வனே!
செங்கீரை யாடி யருளே
செந்தமிழ்க் கிரிநிலவு தென்பாண்டி நாயகா!
செங்கீரை யாடி யருளே. 15

**வேறு**

இன்பக் கடலே! அருட்குன்றே!
எளியார்க்(கு) எளியாய்! எனையாளும்
இறைவா! கொடியோர் ஈடழிக்கும்
எழில்வேல் பிடித்த பெருமானே!
வன்பர்க்(கு) இரங்கா மனத்தானே!
மயில்மீ தேறி வருமுருகா!

மகவான் மகளும் புனக்குறவர்
வளர்த்த கொடியும் புணர்கணவா!
தன்பத் தரின்மேற் சமன்ஒருக்கால்
தன்னை மறந்து வருவானேல்
தடிவான் அவனூர் தனைநோக்கிச்
சபையில் நடிப்போன் தரும்குகனே!
அன்பர்க்(கு) இரங்கும் குருபரனே!
ஆடி யருளாய் செங்கீரை
அணிசேர் பாண்டி நாயகனே!
ஆடி யருளாய் செங்கீரை. 16

பத்தி நெறியோர் இகழ்ந்தாலும்
பரிந்தாண் டருளும் முருகோனே!
படிற்றுச் சமணர் குலமாளப்
படித்தாற்(கு) உதவும் கலையுடையாய்!
தித்தித் திருந்து வினைஒழிக்கும்
தெவிட்டா அமுதே! எனைச்சூழும்
திருக்கண் ணுடையாய்! அடற்சேவல்
சிறக்கும் கரத்தாய்! தினந்தோறும்
துத்திப் பணப்பாம்(பு) அணிகளையும்
சுமந்து நடிப்போன் தொழும்குரவா!
துதிகூர் வளமைப் புலியூரில்
தூயோர் பரவும் துணைத்தாளா!
அத்தி முகவன் துணையானாய்!
ஆடி யருளாய்! செங்கீரை
அணிசேர் பாண்டி நாயகனே!
ஆடி யருளாய்! செங்கீரை. 17

வேறு

***தனதன தனதன தனதன தனதன தனதன தானன தந்தான***

தமருடன் அலைகடல் அதனிடை மருவிய தானவ ருங்,கூறை
தனையிகழ் சமணர்கள் முதலிய சமயர்கள் தாமுமெ
லிந்தோட
நமதெனல் முதலிய பிழைதவிர் முனிவரர் நாகரி கம்பேச
நறைமலி துளவனும் மலர்மிசை யுறைதரும் நான்முக
னும்பேண



இமகரன் எரிகதிர் விழியென மருவிடும் ஈசன்ம கிழ்ந்தாட
எழில்மிகு சபையினில் அனைவரும் வசமற ஈடில்வ
ளஞ்சேரும்
அமரர்கள் பதிகொளும் அரசுறு துயர்கெட ஆடுக
செங்கீரை,
அணிமிகு தமிழுடை யவர்புகழ் குருபர! ஆடுக
செங்கீரை. 18

கடலிடை மலிவுறு கொடியவர் குலம்அறல் காணவி
ழைந்தோர்கள்
கலபியில் அயில்புனை புயமொடு வருமொரு
காரணன் என்றோர்கள்
மடவியர் மயல்கெடும் அநுபவம், அதுபெற வாடிமெ
லிந்தோர்கள்
மலைதொறும் உனதருள் பரவிடும், அதுபெரு
வாழ்வென நின்றோர்கள்
இடர்கெட ஒருசபை யதனிடம் நடமிடும் ஈசனும்,
அன்பாரும்
இணைதவிர் முனிவரும், அளவறு மகிழ்வுற ஏதிலர்
கண்கூச
அடலுறும் அமரர்கள் அதிபதி முடிகொள ஆடுக செங்கீரை
அணிமிகு தமிழுடை யவர்புகழ் குருபர ஆடுக
செங்கீரை. 19

செங்க ணகந்திக ழும்சபை யன்சுத! செங்கோ செங்கீரை
செந்திலில் வந்(து)அவு ணன்தனை வென்றவ!
செங்கோ செங்கீரை
செங்கண்மு குந்தன்வி ரும்பிய சுந்தர! செங்கோ செங்கீரை
தெம்புறு பைங்கிளி தங்குநெ டும்புய! செங்கோ
செங்கீரை
சிங்கள ரும்பர வும்படி நின்றவ! செங்கோ செங்கீரை
சென்டல ரும்கர மங்கையர் வங்கண செங்கோ
செங்கீரை
சிங்கமும் அஞ்சவ ரந்தரு புங்கவ! செங்கோ செங்கீரை
தென்பொதி யந்தரு தண்டமிழ் கொண்டவ! செங்கோ
செங்கீரை. 20

## மூன்றாவது

## தாலப்பருவம்

கங்கை குலுங்கச் சடைதுவளக்,
கனக சபையில் நடிப்போனும்,
கரிய குயில்போல் அருகில்நிற்கும்
கருணைக் கொடியும் களிகூர்ந்து
செங்கை மலரைப் பதமலரைச்
சென்னிக்(கு) அணிந்து, விழிமலரில்
சேர்த்து, முகர்ந்து, முத்தமிடும்
செல்வக் குமரா! தினைப்புனத்து
மங்கைப் பருவக் குறத்திமனம்
மகிழும் கணவா! மகவான்தன்
மகளுக் கினிய மணவாளா!
வடிவேற் குகனே! வழிபடுவோர்
சங்கை தவிர்க்கும் குருபரனே!
தாலோ தாலோ தாலேலோ
தமிழ்சேர் பாண்டி நாயகனே!
தாலோ தாலோ தாலேலோ. 21

சிந்திற் றவழும் அலைக்கூட்டம்
திகழ்மா மணியைத் தினமெறியும்
திருச்செந்தூரில் தன்னனைய
தெளிந்த மறையோர் பணிகொண்டு
கந்திப் பொதும்பர் சூழ்புலியூர்
கனக சபையில், தாதைநிகர்
கல்விக் கடலாம் அந்தணர்தம்
கரம்கூப் பிடக்கண்(டு) உளம்களித்து
வந்திப் பவர்க்கும், எழுத்தாறும்
மனத்துட் கருதும் மாதவர்க்கும்,
வரம்ஈந் தருளச் சலியாது
வளரும் குமர குருபரனே!



தந்திக்(கு) இளைய முருகோனே!
தாலோ தாலோ தாலேலோ .
தமிழ்சேர் பாண்டி நாயகனே!
தாலோ தாலோ தாலேலோ. 22

அத்தி முகவன், கனகசபை
அதனில் ஆடும் அருட்பெருமான்
அளவில் உயிர்க்கும் தாயானாள்,
அரவிற் றுயிலும் நெடுமாலோன்,
புத்தி யுடையோர் உணர்ந்துபணி
புனிதக் குரவன், அருக்கன்,எனப்
போற்றும் சமயம் ஓராறும்
பொருந்து முகங்கள் உடையோனே!
பத்தி நெறியோர்க்(கு) எளியோனே!
பழியும் புலையும் பெருக்குகின்ற
படிற்றுச் சமயத் தினர்காணப்
பகைவேர் அறுத்துத் திரும்பிவரும்
சக்தி வடிவேற் பெருமானே!
தாலோ தாலோ தாலேலோ
தமிழ்சேர் பாண்டி நாயகனே!
தாலோ தாலோ தாலேலோ. 23

வன்பேய் அனைய பிடகரையும்
வணக்கும் பெருமைப் புலியூரில்
வரத னாரும், சிவகாம
வல்லி யாரும், மகிழ்புதல்வா!
பொன்பே ணியசீர்க் குறிஞ்சிதொறும்
பொருந்தும் திருத்தாட் பெருமானே!
பூதர் மனம்போற் சமராடும்
புனிதக் குகனே! பொறைக்கடலே!
முன்பே மயில்மேல் வரவேண்டும்
முழுநீற் றினரை முனியாத
முருக வேளே! முகந்தோறும்
முக்கண் உடையோய்! முறைப்படியே
தன்பேர் உரைப்பார்க்(கு) எளியோனே!
தாலோ தாலோ தாலேலோ
தமிழ்சேர் பாண்டி நாயகனே!
தாலோ தாலோ தாலேலோ. 24

**சோலைவளம்**

வலியோர் புகழ்போல் மிகநீண்ட
வளஞ்சேர் பொழிலில் குரக்கினங்கள்
வாழைக் கனியும் மாங்கனியும்
வயிற்றுக்(கு) அருந்தி, மனக்களிப்பால்
மலிவார் பலாவில் வெடித்தகனி
வகிர்ந்து சுளையில் சிறிதடக்கி,
மற்றச் சுளையை எடுத்தெறிந்து,
மருவித் திரிந்து, களிறார்க்கும்
ஒலிகேட்(டு) இடியென்(று) உளம்பதறி,
உயரும் பூகத்(து) அகல்பாளை
உட்போய் ஒதுங்கும் புலியூரில்
ஒளிரும் கனக சபைநடுவில்
சலியா தாடும் அரன்புதல்வா!
தாலோ தாலோ தாலேலோ
தமிழ்சேர் பாண்டி நாயகனே!
தாலோ தாலோ தாலேலோ. 25

**வேறு**

***தந்தன தந்தன தனனா தனனா தானா தானானா***

வெங்கண்ம டந்தையர் விழைவால் எளியேன் வீணே
மாயாதே
வெண்கொடி இன்புறும் விதிநூல் முழுதோர் மேலோர்
தாழாதே
பங்கய மின்,பல பழிசேர் கொடியோர் பாலே வாழாதே
பங்கமில் உன்துதி பகர்வார் கொளுமால் பாழே
போகாதே
செங்கன கங்கொடு திகழோர் சபைசேர் சீரார் மாளாதார்
சிந்தையில் நின்றொளிர் சிவனார் எழிலர் சேணூர்
வானோர்தாழ்
ங்கரர் முன்புரி தவமாம் முருகா! தாலோ தாலேலோ
தண்டமிழ் கொண்டவர் தனிநா யகனே! தாலோ
தாலேலோ. 26



கஞ்சமெ னுங்கொடி கமழ்தாள் நினைவார் காசால்
வாடாதே
கங்குல்பொ ருங்குடை கவியா தொழிசீர் காணா
தாயாதே
நெஞ்சறி யும்பெரு நெறியோர் புலையோர் நீரால்
மாயாதே
நிந்தையெ னும்பிழை நிறைவார் இலர்பால் நீள்வா
தாடாதே
மஞ்சட ரும்பொழில் மலிவார் புலியூர் வாழ்வா
னார்பாலா
வண்டரு டம்பினை வகிர்கூர் மிகும்ஓர் வார்வேல்
சேர்தோளா
தஞ்சம்வி ரும்புணர் தமையாள் குகனே! தாலோ
தாலேலோ
தண்டமிழ் கொண்டவர் தனிநா யகனே! தாலோ
தாலேலோ. 27

**வேறு**

கொண்டல் பொழிந்திடல் குறைவா கிடுமோர்
கோ(து)ஊர் தோயாதே
கொன்றவை தின்றிடு கொடியோர் களிகூர் கோலூ
டாடாதே
மண்டல மெங்கும்நெல் மலிவார் விளைசீர் மாறாதே
வாளால்
வம்பர்உ டம்பரி வயமே வியகோன் வாழ்(வு)ஊ
றாகாதே
தெண்டனி டுந்தவர் சிரமீ தவிர்தாள் சேர்சே யாம்வேளே
சிங்கமு கம்பெறு திருமால் மருகா! தீநேர் வேலோனே!
சண்டனை வென்றுயர் சபையார் மகனே! தாலோ
தாலேலோ
தண்டமிழ் கொண்டவர் தமிழ்நா யகனே தாலோ
தாலேலோ. 28

### வேறு

*தனதன தனதன தனதன தனதன தனனா தானானா*

சிகிமிசை அடியவர் எதிர்வரும் நலமுறு சிறுவா!
தாலேலோ
திரைகடல் இடைவளர் பவர்கெட அமர்பொரு
திரலோய்! தாலேலோ
சகியின முடன்இதண் மருவிய கொடிபுணர் தலைவா!
தாலேலோ
சரவண மடுவினில் அலர்தரு மலர்நிகர் சரணா!
தாலேலோ
அகிஇணை பெருவயி றுடையவன் உடன்வரும் அரசே!
தாலேலோ
அமரர்கள் அதிபதி மகளொடு ரகசியம் அறைவாய்!
தாலேலோ
மகிதல முழுமையும் வழிபடு சபையினர் மகனே!
தாலேலோ
வழுதியர் குலமணி எனஅயி லுடன்ஒளிர் வயவா!
தாலேலோ. 29

புலிஅர வுடன்மகிழ் வுறநடம் இடுமவர் புதல்வா!
தாலேலோ
புணரியில் விடுசில பனுவல்கள் அருள்வது புகல்வாய்!
தாலேலோ
கலியொடு சனியனும் நசிவுறும் நலமருள் கரனே!
தாலேலோ
கதியினை அளவறு புகழொடு தருமிரு கழலோய்!
தாலேலோ
கெலிமிகு வனசரர் சிறைகவர் திறலுறு கிழவா! தாலேலோ
கெடுதியில் முயல்பவர் குலமற வருமொரு கிளியாய்!
தாலேலோ
மலிவுறு தமிழுணர் புலவர்கள் அரசென வளர்வாய்!
தாலேலோ
வழுதியர் குலமணி எனஅயி லுடன்ஒளிர் வயவா!
தாலேலோ. 30



### நான்காவது

## சப்பாணிப் பருவம்

விண்பூத்த தேவர்குலம் மும்முரசு கொட்ட,முது
வேதங்கள் ஓசை கொட்ட,
வெண்பொடிப் பூதகணர் தோள்கொட்ட, மேகங்கள்
வேலைநீர் மொண்டு கொட்ட,
பண்பூத்த கந்தருவர் மலர்மாரி கொட்ட,அவர்
பாரிமார் வீணை கொட்ட,
பாவலவர் துதிகொட்ட, ஓராறு சமயப்
பகுப்புளார் உவகை கொட்ட,
திண்பூத்த கொடுமைநிறை தானவர்கள் நெஞ்சும்
திடுக்கென்று கொட்ட, மருள்சேர்
தீயசம யத்துளார் கண்ணருவி கொட்டச்,
செழுந்தாது கொட்ட மலரும்
தண்பூத்த நீபமுறு பன்னிரு புயத்தனே
சப்பாணி கொட்டி யருளே
தருமமிகு புலியூரில் வருபாண்டி நாயகா!
சப்பாணி கொட்டி யருளே. 31

இந்திரன் மகட்கினிய கணவனே! மறமகள்
இரக்கமுற்(று) உதவு மாவுண்(டு)
ஏப்பமிட் டொருநெடிய தடியோடு தள்ளாடும்
எழில்நரைக் கிழமு னிவனே!
மந்திர முதற்குறிஎனும் பிரண வப்பொருளை
வழிபடும் அவர்க் களிக்கும்
வள்ளலே! மலைதோறும் விளையாடி மயிலேறி
வருகின்ற குமர வேளே!
எந்திரம் அனைத்தினும் நிறைந்(து)அவை கடந்தொளிரும்
ஏகனாம் எம்பி ரானே!
ஏதம்அற் றென்றைக்கும் ஒருபடித்தாய் அன்பர்
இதயமலர் தோறும் ஒளிரும்

சந்திரர் எனக்குலவு சண்முகத் தொருவனே!
சப்பாணி கொட்டி யருளே.
தருமமிகு புலியூரில் வருபாண்டி நாயகா!
சப்பாணி கொட்டி யருளே. 32

மகபதியும் அவன்மகனும் மற்றவா னவர்களும்
வருந்துவ தொழித்து யர்ந்தாய்!
வாரியொடு கிரவுஞ்ச மலையையும் பொடிசெய்து
வருதுங்க வேல்பு னைந்தாய்!
குகனெனும் பெயர்தழைய என்அளவில் பல்சீவ
கோடியில் நிறைந்தி ருந்தாய்!
கோலா கலக்கலப மயிலேறி அரன்முன்பு
குவலயம் சுற்றி வந்தாய்!
இகமொடு பரத்துமெய் யடியவர் நிமித்தமே
எண்ணரிய ஆடல் செய்தாய்
என்னையும் பொருளெனக் கொண்டுசில வாசகம்
இயம்பிடும் இரக்கம் உற்றாய்!
சகளமொடு நிட்களமும் ஆகிநின் றாய்!சிறிது
சப்பாணி கொட்டி யருளே
தருமமிகு புலியூரில் வருபாண்டி நாயகா!
சப்பாணி கொட்டி யருளே. 33

செங்கடம் பும்குவளை யும்குரவும் வெட்சியும்
செவ்வந்தி யும்கொன் றையும்
செழுமைதிகழ் புனலியும் கூதளமும் அறுகும்
திருத்து ழாயும் பிச்சியும்
பங்கயமும் அணிகின்ற பன்னிரு புயத்தனே!
பைந்தமிழ்க் கிள்ளை யுடையாய்!
பற்றலர் நடுக்குறக் கூவும்வெண் சேவற்
பதாகைக் கரத்தண் ணலே!
எங்கணும் நிறைந்தும்அடி யவர்களால் ஒருவடி(வு)
எடுத்துவிளை யாடும் முருகா!
ஈரைந்தொ டொருவகை உருத்திரப் படைகளோ(டு)
எழில்வேல் சுமந்து நின்றாய்!
தங்கமலை வில்லியர் தரவந்த பாலனே!
சப்பாணி கொட்டி யருளே
தருமமிகு புலியூரில் வருபாண்டி நாயகா
சப்பாணி கொட்டி யருளே. 34



**பன்னிருகரங்களில் உள்ள**

**ஆயுதவகை, முகம் ஆதியவைகளின் விவரம்**

கெருவமுடன் எதிர்சிங்கன் உயிர்கவரும் வச்சிரம்
கீழ்மேல் இலாத சூலம்
கிளர்புனத் தொருபேதை புருவமொடு கண்ணிற்
கிளத்தும் வில்ஒளிர் சாயகம்
தருவரசன் மகள்நுதலை அனையவாள் கேடகம்,
சரபமே என்ற கோழி,
தனிஆழி அங்குசம் பாசமொடு சுரிகையும்
சத்திவே லும்பு னைந்து
திருவளரும் மலர்நிகரும் அபயவர தம்கொண்டு
செங்குமுதம் நீலம் என்னத்
திகழும்வாய் விழிகளும், முகமாறொ(டு) எதிர்வந்து
சேவடிஅ ளிக்கும் எந்தாய்!
சருவசத் துருநாசன் எனநின்ற முருகனே!
சப்பாணி கொட்டி யருளே
தருமமிகு புலியூரில் வருபாண்டி நாயகா!
சப்பாணி கொட்டி யருளே. 35

**வேறு**

**இறைவன் நடனத்தின்போது இவரிவர் போற்றினரென்றல்**

நிலவிற் றிகழும் வெண்ணீறு
நிறைந்த மேனி யுடையாரும்,
நீதி வழுவா மன்னர்களும்,
நிசநூல் உணர்ந்த புலவோரும்,
கலகச் சமணர் முதலோரைக்
கறுவித் தவஞ்செய் பெரியோரும்,
கறைதீர் சுருதிப் பொருளுணர்ந்து
களிகூர்ந் துலவு மறையோரும்,
மலமுப் பிணிதீர்த்(து) அருள்வழங்கும்
மலர்த்தாள் வழுத்தச் சிவபெருமான்
மழைக்கார் இருள்நேர் முயலகன்மேல்
வானோர் புகழ நடம்புரிசீர்

குலவும் புலியூர்க் குருபரனே!
கொட்டி யருளாய்! சப்பாணி
குறைதீர் பாண்டி நாயகனே!
கொட்டி யருளாய்! சப்பாணி. 36

**சோலைவளமும் முருகன் குழந்தைப் பருவமும்**

உழவர் அவிழ்த்த பகட்டினங்கள்
உவகை மிகலால், குதித்தோடி,
ஓரா யிரம்நெட் டிதழ்விரிக்கும்
உயர்பூந் தடத்திற் புகுந்துழக்கி,
கழகம் அனைய வளைக்கூட்டம்
கதறத் திரும்பிப், பெருவேலி
கடந்து கருப்பஞ் சோலையிற்போய்க்
கணுமுத் துமிழ்ந்து, களித்தருந்திப்,
பழகும் தொழுவைக் கருதிவரும்
பான்மை தவிராப் புலியூரில்
பரமன் மகிழ, அவள்மனைதன்
பருகா முலையிற் பால்சுரக்கக்,
குழவி எனவந் தருள்குமரா!
கொட்டி யருளாய் சப்பாணி
குறைதீர் பாண்டி நாயகனே!
கொட்டி யருளாய் சப்பாணி. 37

**வேறு**

***தனதன தனதன தனதன தனதன தத்தன தத்தான***

அடியவர் மகிமையொர் அணுவள வறிவரும் அற்பர்
குதித்தோட,
அலைகடல் மிசைதுயில் நெடியவ னுறுதுயர் அற்றுவி
ழிப்பாக,
மடிவுறும் வடிவினர் உணர்வொடுன் அயில்செயும்
மற்றொழி லைக்காண,
மகிதல முழுமையும் நிறைவுறும் மிடிகெட மற்றம
தத்தோர்கள்



இடியொலி கொளும்அர வினமென மனமிக எய்த்துவி
ழுக்,கேடில்
இமையவர் குதிகொள, எளியனும் மகிழ்வுற, இக்கதெ
னப்பேசுங்
கொடியெதிர் சபைநடு நடமிடு மவர்சுத! கொட்டுக
சப்பாணி
கொழிதமி ழுடையவர் வழிபடு குருபர! கொட்டுக
சப்பாணி. 38

மதியினில் வலியவர் கொளும்அறு சமயமும் மட்கல்அ
றத்,தேவர்
மகபதி அயன்அரி முதலினர் துயர்கெட, வக்கிர
முற்,றாதி
விதிதவ றியசிலர் குலமொடு நசிவுற, வெட்டும் விறற்பூதர்
மிகுபசி தணிவுறு மெனமகிழ் உற,உயர் விற்பனர்
சொற்கூற,
முதிரொளி மருவிய சபையினர் இணைதவிர் முத்திபெ
றப்பாடும்
முறையினர், சதுரர்கள் கருதிய பொருள்மல முற்றரு
கைக்காரர்
குதிரையில் விடைமிசை, இவர்பவர், விழிமணி! கொட்டுக
சப்பாணி
கொழிதமி ழுடையவர் வழிபடு குருபர! கொட்டுக
சப்பாணி. 39

**வேறு**

***தந்தன தந்தன தந்தன தந்தன தந்தா தந்தான***

குன்றுதொ றுந்தின முந்திகழ் சுந்தர! கொட்டாய் சப்பாணி
கொந்தல ருங்குர வம்புனை யும்குக! கொட்டாய்
சப்பாணி
குன்றுந லந்தழை யும்படி வந்தவ! கொட்டாய் சப்பாணி
கொம்பெனு மங்கையர் பங்கிலி ருந்தவ! கொட்டாய்
சப்பாணி

கொன்றுணும் வன்தகு வன்தனை வென்றவ! கொட்டாய்
சப்பாணி
கொன்றையன் அம்பகம் அன்றரு ளும்சுத! கொட்டாய்
சப்பாணி
கொன்துடி என்றந டம்புரி யும்பத! கொட்டாய் சப்பாணி
கொஞ்சுந றுந்தமிழ் தந்தவர் தங்குரு! கொட்டாய்
சப்பாணி. 40

## ஐந்தாவது

# முத்தப் பருவம்

கன்னற் சிலையான் மனம்நாணும்
கவின்மிக் குடையாய்! நடமாடும்
கலப மயில்மேற் பவனிவரும்
கந்தா! கருணைக் கடலமுதே!
பன்னற் கரிய பிரணவச்சீர்
பகரும் கனிவாய்க் குருபரனே!
பாலை நிலத்தில் தருகவிக்காப்
பதத்தால் நடந்த பான்மையனே!
துன்னற் றனத்துச் சிவகாமி
துதிக்க நடிப்போன் மடிமீதில்
தொழுவார் வினையைக் களையும்ஒரு
தும்பி முகனோ(டு) இருப்போனே!
முன்னற் கரிய பெரும்புகழ்சேர்
முருகா! முத்தம் தருகவே
முழங்கும் தமிழ்ப்பாண் டியர்குலத்து
முதல்வா! முத்தம் தருகவே. 41

வருந்தித் துதிப்போர் விழிகாண
மயில்மீ தேறி வருங்குரவா!
வாளேந் தியகை இரணியன்தன்
மார்பைப் பிளந்தோன் மருகோனே!
குருந்தில் உமையாள் மலர்க்கரத்திற்
குலவும் விளையாட்(டு) உடையானே!
கொல்லா விரதக் கவுமாரர்
குறிக்கும் பொருளே! குறத்திஇதழ்



அருந்திக் களிக்க முனியானாய்!
அமரர் பதியிற் களிறெடுக்கும்
அரிவை கணவா! புலியூரில்
அமரோர் விரும்பும் அருட்கடலே!
முருந்திற் றிகழும் நகைக்குமரா!
முறையால் முத்தம் தருகவே
முழங்கும் தமிழ்ப்பாண் டியர்குலத்து
முதல்வா! முத்தம் தருகவே. 42

பாவா ணருக்(கு)இன் னருள்வழங்கும்
பரம குருவே! அடியாருட்
பதியும் திருத்தாட் பெருமானே!
பங்கே ருகப்பூ வுடையானை
நாவால் ஒருசொற் புகன்று,தலை
நான்கும் குலுங்கப் புடைத்தோனே!
நல்லோர் எவர்க்கும் துணையாவாய்!
நறைப்பூங் கடப்பு புனைதோளா!
பூவாழ் உயிர்க்கோர் கயிலைஎனப்
புகன்று தொழுதோன் கதியடைந்த
புலியூர் தனைவிட்(டு) அகலாமற்
பொருந்தும் புகழ்சேர் புனிதர்களாம்
மூவா யிரவர் பணிகுமரா!
முகிழ்வாய் முத்தம் தருகவே
முழங்கும் தமிழ்ப்பாண் டியர்குலத்து
முதல்வா! முத்தம் தருகவே. 43

### முத்து உண்டாகுமிடங்கள் சில

மாதும் களிறும் மழைமுகிலும்
வளையும் கரும்பும் வரைக்கணுவும்
வாழை முதலா மற்றவையும்
வழங்கும் முத்தங் களைவிரும்பேன்
ஓதும் கடவுள் பலர்தாமும்
உலவாத் திருப்பாற் கடற்பிறந்த
உண்கண் மடவார் தாம்கொடுக்கும்
ஒருமுத் தமும்நன் றெனஉரையேன்
காதும் குளிரத் துதிகூறிக்
கவுமா ரத்தோர் மொழிப்படியே

கடம்பு குவளை குர(வு)ஆதி
கமழ்பூ எடுத்துன் பதத்தணிவேன்
மோதும் கடற்சூர் தனைத்தடிந்த
மொய்ம்பா! முத்தம் தருகவே
முழங்கும் தமிழ்ப்பாண் டியர்குலத்து
முதல்வா! முத்தம் தருகவே. 44

**பள்ளர்கள் வயலிற் பயிற்றும் செயல்கள்**

செய்யார் வரம்பில் முகில் ஊர்வான்
செயலைப் பரவிக் குரவையொலி
சிறக்கத் தொழிலில் இறங்கி,இரு
செம்பொற் குடநேர் முலைகுலுங்கக்,
கையால் நாற்று முடியுலைத்துக்
கவிழ்ந்து நிமிர்ந்து நடுமகளிர்
கண்வேல் பாயச், சிலவுழவர்
காம வெறிகொண்(டு) அவரருகில்
நெய்யார் குழலைத் திருத்துநர்போல்
நெருங்கும் புலியூர்க் கனகசபை
நிமலன் மகிழப், பலதேவர்
நிதமும் புகழப், பகைதடிந்து
மொய்யார் கடம்பு புணைதோளா!
முன்போல் முத்தம் தருகவே
முழங்கும் தமிழ்ப்பாண் டியர்குலத்து
முதல்வா! முத்தம் தருகவே. 45

**வேறு**

செப்புறழ் முலைச்சியர் மயக்குற விளங்கெழிற்
றிண்தோ ளுடைக்கந்தனே!
சித்தர்பல ருக்கும்ஒரு குருவாகி மலைதொறும்
திருநடம் புரிதெய்வமே!
வெப்புறு குணத்தவுணர் சமணர்முத லாகுமவர்
வேரறுத்துத் திரும்பும்
வேலாயு தம்கொண்டு மயிலேறி விளையாடும்
வீராதி வீரமுருகா!
மைப்புயல் நடத்திவரு மகபதிக்(கு) அரசுதரும்
வள்ளலே! என்னைஒருநாள்



வண்டமிழ்க் கிள்ளையென முக்காலும் உரைசெய்த
வாயுடைய குருநாதனே!
முப்புரம் எரித்துநடம் ஆடியவன் மைந்தனே!
முத்தம் கொடுத்தருள்வையே
முதிர்புகழ்ப் பாண்டியரில் முதன்மைபெறும் வயவனே!
முத்தம் கொடுத்தருள்வையே. 46

மைக்கடலதில், பொருநை மாநதியில் நெல்லைநடு
வருகாலில், ஒருகிணற்றில்
வைப்பாறதில், கழுகு மலைவாவி யில்,கனலில்,
வண்டமிழ்ப் பனுவல்எல்லாம்
தக்கவர் கொளத்தமியன் உதவவும், கழுவேறு
சமணரிற் கொடியபுலையோர்
தம்மைநரி நாய்கழுகு பேய்பருந் தாதியவை
தாம்உணப் போர்புரிந்து
மிக்கபுகழ் சூடுமவர் தம்பொருமை கண்டுமனம்
மெலிவறவும், நின்சொல்எல்லாம்
மெய்யாக வும்,பிறவி பொய்யாக வும்,கலபி
மீதேறி என்முன்வந்து
முக்கணுடை யானும்அவன் மனைவியும் கொள்ளுமுயர்
முத்தம்கொடுத் தருள்வையே
முதிர்புகழ்ப் பாண்டியரின் முதன்மைபெறு வயவனே!
முத்தம்கொடுத் தருள்வையே. 47

**வேறு**

***தத்தன தத்தன தத்தன தத்தன தத்தன தத்தனனா***

சுத்தம றைத்துணி வைத்தெளி வுற்றவர் சொற்படி
நிற்கிலனோ
துட்டர்த மைக்கறு வத்தகு நற்றவர் சொற்பனம்
உற்றிலனோ
வித்தக ருக்குளம் நெக்குரு கத்தகும் மெய்த்துதி
கற்றிலனோ
மிக்கதி ருப்பொடி அக்கம ணித்தொடை வெற்றிநி
னைத்திலனோ

சித்தனெ னக்கன கச்சபை யிற்றிகழ் சிற்பர னுக்கினியோய்!
செட்டியெ னப்பெய ரிட்டுவி ழுப்பொருள் செப்புமு
முப்புலவா!
முத்தந கைச்சசியர் பக்கலி ருப்பவ! முத்தம ளித்தருளே
முத்தமிழ் கற்பவ ருக்கொரு சற்குரு! முத்தம
ளித்தருளே. 48

சத்திய மற்றும னப்படி நிற்பவர் தட்டழி யப்புரிவாய்!
தத்துவ நிச்சயம் உற்றுய ரத்தகு சட்சம
யத்தொளிர்வாய்!
பத்தியி னைக்கொடு நத்துனர் சொற்படி பற்பல
சித்தருள்வாய்!
பக்குவ முற்றும்வ ருத்திம றைப்பொருள் பற்றிடெ
னத்தருவாய்!
தித்தியில் மத்தள மொத்துந டிப்பவர் சிற்சபை
யிற்சிவனார்
சித்தம கிழ்ச்சியு றத்திறல் மிக்குள செற்றல
ரைக்களைவாய்!
முத்தியி னுக்குயர் வித்தெனும் உத்தம! முத்தம ளித்தருளே!
முத்தமிழ் கற்பவ ருக்கொரு சற்குரு! முத்தம
ளித்தருளே. 49

**வேறு**

***தனதன தனதன தனதன தனதன தத்தந் தனதானா***

முருகவிழ் குரவொடு புனலியும் அணிபுய! முத்தந் தருவாயே
முரண்மிகும் அவுணர்கள் அறஅமர் பொருதவ! முத்தந்
தருவாயே
முருகனென் மொழிபகர் கொடிஎதிர் வருபர! முத்தந்
தருவாயே
முதல்நடு கடையெனும் அவைபுகழ் புரவல! முத்தந்
தருவாயே
முருகொடு பலபல யுகம்வரை மிளிர்குக! முத்தந் தருவாயே
முலையமு துதவிடும் உமையவள் கொளுமுயர் முத்தந்
தருவாயே
முருகுறு சபையினில் நடமிடும் அவர்சுத! முத்தந் தருவாயே
முதிர்தமிழ் மலிவுற முயல்பவர் நடுமணி! முத்தந்
தருவாயே. 50



## ஆறாவது

## வருகைப் பருவம்

**குழந்தை முருகனைக் கூவி அழைத்தல்**

கடியார் மலர்த்தண் பொழில்சூழும்
கவின்தோய் புலியூர் நடுவிளங்கும்
கனக சபையிற் சிவபெருமான்
கண்ணன் மணியாய் வருங்குகனே!
மடிமீ திருந்து சிவகாமி
மகிழ ஒருபால் முலைசுவைத்து,
மற்றோர் முலையை நெருடிஅவள்
வதனத்(து) அணிநோக் கிடும்மதலாய்!
இடிபோல் முழங்கும் குரற்சேவல்
எடுக்கும் கரத்தாய்! கீரன்முதல்
எண்ணில் பெரியோர் தொடுத்ததமிழ்
இயங்கும் புயத்தில் எழிலாரும்
வடிவேல் புனைந்த குருபரனே!
மயில்மீ தேறி வருகவே
வளஞ்சேர் பாண்டி நாயகனே!
வருக! வருக! வருகவே. 51

**நீறுதவித் துயர்நீக்க அழைத்தல்**

கொலையோர் புலையோர் செயும்கொடிதாற்
கொதிக்கும் துயரும், அறுசமயம்
கொண்டோர் வருந்தல் சகியாமல்
குலையும் துயரும், குவடனைய
முலையார் விழியாம் கணைபாய
மோகக் கடலில் தினந்தோறும்
முழுகும் துயரும், பனுவல்பல
முந்நீர் கவர்ந்த முழுத்துயரும்,
நிலையாய் உனையே கருதாமல்
நேர்ந்த படிபோம் மனத்துயரும்,
நிகழ்த்தும் இவைநேர் பலதுயரும்
நீற்றால் ஒழித்(து)உன் அருள்கொடுப்பான்

மலைதோ றாடும் பதத்தானே!
மயில்மீ தேறி வருகவே
வளஞ்சேர் பாண்டி நாயகனே!
வருக! வருக! வருகவே. 52

**தன் அநுபவம் பல சாற்றும் அருமை**

பொருநை நதியின் நடுவிளங்கும்
புகழ்சேர் உருமா மலையிடத்தில்
புகன்ற மொழியும், திருமலையிற்
புரிந்த செயலும், செந்தூரில்
ஒருவா(று) உணர்த்தும் பெருநிலையும்
ஓங்கும் புனிதத் திருநெல்லை
ஊரில் திகழ்ந்த விளையாட்டும்,
உலவாக் கழுகு மலைக்கூத்தும்,
அருணா புரியிற் றரும்வாக்கும்
அனைய பிறவும் புவியினரும்
அறியப் புரிதற்(கு) ஆசையுற்றேன்
அனைத்தும் அறிவாய்! அசைப்பிப்பாய்!
மருவார் பொழில்சூழ் புலியூரா!
மயில்மீ தேறி வருகவே
வளஞ்சேர் பாண்டி நாயகனே!
வருக! வருக! வருகவே. 53

**உமையவள் முருகனை அழைக்கும் உரிமை**

கண்ணே! வருக! சிவஞானக்
கனியே! வருக! எனையாண்ட
கனிவின் தவமே வருக! அருட்
காரே! வருக! கழ(ற)அரிதாம்
எண்ணே! எழுத்தே! வருக! என
இமவான் மகள்அன்(று) அழைத்துமடி
இருத்திக் கலையால் வெயர்த்தமுகம்
இலங்கத் துடைத்து, முலையருத்திப்,
பண்ணேர் மழலை மொழிகேட்டுப்
பலகால் மோந்து களிகூரும்
பவளக் குவடே! உனதடியார்
பதமா மலரில் துகளாய



மண்ணே றியநற் றலையேன்முன்
மயில்மீ தேறி வருகவே!
வளஞ்சேர் பாண்டி நாயகனே!
வருக! வருக! வருகவே. 54

**நகர்வளம்**

காவிப் பனிமா மலர்ப்பெருக்கும்,
கமலப் போதும், களையாகக்
கருதிக் களையும் கடைசியர்தம்
கண்ணாற் பயந்து, கழனிவிட்டுத்
தாவிப், பகட்டும் நெடும்வாளை
தடித்தென்(று), அரவக் குலம்வெருளத்,
தண்பூம் பொழிலார் குரக்கினங்கள்
தாமும் பயந்து விழிமூட,
காவிற் குரியான் பரியேழும்
கதற, வயிற்றைக் கிழித்துவரும்
கவினார் புலியூர்ச் சிவன்புதல்வா!
கருங்கட் குறத்தி கனிந்தளிக்கும்
மாவிற்(கு) உருகும் கிழமுனிவா!
மயில்மீ தேறி வருகவே!
வளஞ்சேர் பாண்டி நாயகனே!
வருக! வருக! வருகவே. 55

**வேறு**

**கந்தனைக் கருதும் கவுரார் பண்பு**

சத்தப் பெருங்கடலின் உட்புக் கிருந்துவரு
தகுவனுயிர் கொன்று வந்த
தனிவேல் முதற்பகரும் ஆயுதங் களும்,வதன
தாம ரைகளும், கடம்பும்
மெத்தப் புனைந்தபுயம் ஈராறும் மகுடமுதல்
வியனுற்ற பணிகள் பலவும்,
விண்ணோர் தருங்கொடியும், வேள்விமலை யிற்றிரியும்
வேடுவர் வளர்த்த கிளியும்,

சுத்தத்(து) இலங்கும்ஒரு வேழமும், சேவலும்,
தோகை மயிலும், துலங்கும்
தூயமன மும்,பொருவில் வாய்மையும், கருணையும்,
தோய்வுறத் தொண்டு செய்யும்
பக்தர்க்(கு) இரங்கியருள் பதமலர்த் துணைகொண்ட
பலமலைக் குகன் வருகவே.
பைந்தமிழ்ப் புலியூரில் வந்தசற் குருவான
பாண்டி நாயகன் வருகவே. 56

### அன்பினர் காண ஆற்றிய அருட்செயல்

தற்பரன் எனக்குலவு தந்தைக்கும், மலையமலை
தன்னிலுறு குறுமு னிக்கும்,
தண்டமிழ்க் கீரனொடு பொய்யாமொ ழிக்கும்,ஒரு
ந்தையற்கும், அருண கிரியாம்
விற்பனன், எழிற்பனுவல் விற்றபக ழிக்கூத்தன்,
வெண்டளை முறித்த புலவன்,
வேதமுனி சொன்னகதை தமிழ்செய்தவன், போரி
மேயவன், மணற் கொணர்ந்த
அற்பரும் வணங்கிட நகைத்தவன், செந்திலிற்(கு)
அந்தாதி சொன்ன வல்லோன்,
அணிமேவு பாடல் புரத்தொருவன், முதலாகும்
அளவிலாத் தொண்ட ருக்கும்
பற்பல புகழ்ச்சிதரு பவளவா யுடையவன்!
பச்சைமயில் மேல் வருகவே
பைந்தமிழ்ப் புலியூரில் வந்தசற் குருவான
பாண்டி நாயகன் வருகவே. 57

### வேறு

*தனன தனன தனன தனன தனன தனன தனதனா*

கரக முனிவர் பரவு சரண கமலன் வருக! வருகவே!
கனக மனைய பலவை பருவு கழகன் வருக! வருகவே!
குரவு குவளை புனலி யுடைய குழகன் வருக! வருகவே!
குறவர் குடிலின் மகள்முன் மறுகு குமரன் வருக!
வருகவே!



இரவில் அடியர் கனவில் அலையும் இறைவன் வருக!
வருகவே!
எனது பழைய பிறவி பகரும் எளியன் வருக! வருகவே!
மரமொ(டு) அலைகொள் கடலை முனியும் வயவன் வருக!
வருகவே!
வனிதை மகிழுங் நடன பரமர் மதலை வருக!
வருகவே! 58

எலியின் அரசை இவரும் ஒருவன் இளவல் வருக! வருகவே!
எமது பகைவர் தொலைய முனியும் இகலன் வருக!
வருகவே!
மலியும் மகிமை குலவும் அபய வரதன் வருக! வருகவே!
மலரில் மருவு கமலை கணவன் மருக! வருக! வருகவே!
புலியில் எதிரும் அவுணர் கலக புனிதன் வருக! வருகவே!
புலவர் மகளை அணையும் இணையில் புளகன் வருக!
வருகவே!
வலிய புவியை நொடியில் வளையும் மயிலன் வருக!
வருகவே!
வனிதை மகிழும் நடன பரமர் மதலை வருக் வருகவே! 59

மறவர் மகளை அணையு முருக வருக! வருக! வருகவே!
வழுவை யுதவு குமரி கணவன் வருக! வருக! வருகவே!
மறலி பகைவன் இனிய புதல்வ வருக! வருக! வருகவே!
வளைகொள் கரிய முகிலின் மருக! வருக! வருக!
வருகவே!
மறவல் அசுரர் சமர குமர வருக! வருக! வருகவே!
வகுளம் அணியும் மதனன் எதிரி வருக! வருக!
வருகவே!
மறதி தவிர அருள்செய் குரவ! வருக! வருக! வருகவே!
வழுதி எனமுன் வரும்நல் இறைவ! வருக! வருக!
வருகவே! 60

# ஏழாவது

# அம்புலிப் பருவம்

### சாமம்

### சந்திரனுக்கும் முருகனுக்கும் ஒற்றுமை

தெருளறிஞர் பரவுசிற் சபைநாதன் அன்பிற்
சிறக்கின்ற தன்மை யாலும்,
செங்கனல் எனக்குலவு மேடத்தில் ஒருவேளை
திகழவரு பெருமை யாலும்,
இருளறச் செய்துகண் ணுடையவர் தமக்கெலாம்
இன்பம்விளை வித்த லாலும்,
இக்குவிற் காமனது விழவினுக்(கு) இனியன் என்(று)
இகமெலாம் மொழித லாலும்,
சுருள்குழற் பேதையர்கள் வலியவந் தணையத்
துலங்குமெழி லாலும் நீயும்
சொல்லும்இ வனுக்குநிக ராமென்ன உலகரும்
துதிகூறல் உண்டு கண்டாய்!
அருள்வடிவ மாகவளர் குமரகுரு பரவேளொ(டு)
அம்புலீ ஆட வாவே
அணிபொளிற் புலியூரில் வருபாண்டி நாயகனொ(டு)
அம்புலீ ஆட வாவே. 61

உற்பலத் துரிமையுடன் உடுமகளிர் காதலன்என்
ஒருநாமம் உடைமை யாலும்,
உலகமெங் கணும்நிறையும் ஒளியாலும், விண்ணவர்க்(கு)
உவகைதரு தன்மை யாலும்,
நற்பனுவல் பகர்புலவ னுக்(கு) ஆவல் கொளலாலும்,
ஞாலம் தனைச்சுற் றியே
நாகத்தில் வரலாலும், அலைவாரி ஓதமிக
நன்குதய மாத லாலும்,
பற்பல உயிர்க்கிதம் புரிகின்ற தாலும்,ஒரு
பதினாறு கலையி னாலும்,
பகருமி வனுக்குநிகர் ஆவை!என் றுன்னைப்
பரிந்தழைத் திடல்அ றிதியேல்



அற்பர்உணர் தற்கரிய புகழுடைய முருகனுடன்
அம்புலீ ஆட வாவே.
அணிபொழிற் புலியூரில் வருபாண்டி நாயகனொ(டு)
அம்புலீ ஆட வாவே. 62

இன்பமுறும் அமுதத்தி னாற்றவளம் ஆவைநீ!
இவன்வெள்ளை நீற ணிந்தோன்,
இருள்கடிய வல்லைநீ! கருநிறத் தானவர்க்(கு)
இயமன்இவன், நீஇ றங்கா
வன்பரும் களிகூர வருவை!இவன் வேறுமத
வாணரும் பரவ மகிழ்வான்,
மலையினிற் போவைநீ! இவன்எழிற் குன்றுதொறும்
மாறாமல் ஆடல் செய்வான்,
துன்பமும் சிலர்உறப் புரிவைநீ! இவன்முழுத்
துட்டரைக் காய்ந்து நிற்பான்,
சொல்லுமிவை அனையபல தொழிலாலும் நீஇவன்
தோழனாம்; ஆகை யாலே
அன்பர்பலர் கைதொழத் திகழுமுரு கையனுடன்
அம்புலீ ஆட வாவே!
அணிபொழிற் புலியூரில் வருபாண்டி நாயகனொ(டு)
அம்புலீ ஆட வாவே! 63

### பேதம்

### சந்திரனைவிட, முருகனை வேறுபடுத்தி உயர்வுறக் கூறல்

செங்கதி ரவன்புசித் துப்புசித்(து) உமிழத்
தியங்கு வாய்!இவன் எண்ணிலாத்
தெய்வமும் தனதுமய மானெப் பேரறிஞர்
சிந்தையிற் றிகழ வல்லான்,
பங்கமுறும் மறுவாரும் உடலன்நீ! இவன்எழிற்
பவள மேனியில் அதில்லை
பரவையிற் றணிவைநீ! இவன்அதனில் வாழ்அவுணர்
பற்றறக் களையும் வீரன்,
வெங்கண்அர விற்கஞ்சி மெலிவைநீ! இவன்மயில்
விழுங்கிக் களிக்கும், இதனால்
விளையாட வரில்உனக் கேபெருமை, உனதுநல்
வேளை,இவன் உனைஅ ழைத்தான்

அங்கசனும் நாணும்அழ குடையகும ரேசனுடன்
அம்புலீ ஆட வாவே
அணிபொழிற் புலியூரில் வருபாண்டி நாயகனொ(டு)
அம்புலீ ஆட வாவே. 64

ஒருவட்ட மாவைநீ! ஓராறு வட்டமாம்
ஒள்ளிய முகத்தன் இவன்,நீ
உம்பர்ஊர் வளர்குரவன் அடிமை,இவன் யாவர்க்கும்
உபதேசம் உதவு பெருமான்,
தருஅரசன் இட்டபணி செய்வைநீ! இவன்அவன்
தன்துயர் தவிர்த்த தெய்வம்,
தன்மைபல வாறாவை நீ! இவன் குறைவுறாத்
தகையுடை யன்,மத் தாகிஓர்
பருவதத்(து) அடியில்உற் றனை! இவன் அவற்றின்முடி
பலவினும் நடித்து நிற்கும்
பாததா மரையுடையன், உன்னைவா! என்னப்
பரிந்தழைக் கின்ற(து) அறிவாய்!
அருவமுடன் உருவமாய், அருவுரும மானவனொ(டு)
அம்புலீ ஆட வாவே
அணிபொழிற் புலியூரில் வருபாண்டி நாயகனொ(டு)
அம்புலீ ஆட வாவே. 65

உமையவள் உனைப்பதத் தால்உதைத் தனள்,இவனை
உரிமையொடு முத்த மிட்டாள்,
உரகமணி வோனிடக் கண்நீ! இவன் பொதுவில்
உறும்நுதற் கண்ணில் வருசேய்,
இமையவரில் ஒருவன்நீ! இவன்அவற்(கு) உயிரென்(று)
இலங்(கு)அயிற் சேனாபதி
இளமகளிர் துயர்கண்டு போவைநீ! இவன்அவற்(கு)
இன்பம்அருள் கின்ற செவ்வேள்,
சமையகோ டிகளெலாம் உலகினுக் காகச்
சமைத்தபொருள் என்னும் உன்னைத்;
தந்தமது தலைவனென்(று) இவனைப் பராவும்,இவை
சத்தியம் தவறில் லைகாண்!
அமையனைய தோளுடைக் குறமாது கேள்வனுடன்
அம்புலீ ஆட வாவே
அணிபொழிற் புலியூரில் வருபாண்டி நாயகனொ(டு)
அம்புலீ ஆட வாவே. 66



### தானம்

### பயன் கருதாமல் அருளும் ஈகை நலம்

கருணைபெற லாம்,அளவில் கவிதைபெற லாம்,மழைக்
காரெனக் கொடைகொ டுக்கும்
கைகள்பெற லாம்,எதிர்த்(து) அமராடு வோர்குலம்
களைகின்ற திறமை பெறலாம்,
மருள்நலியும் மெய்யன்பர் களிகூர விளையாடும்
வாழ்வுபெற லாம்,கயி லைநேர்
மாதங்க வாணன்முதல் எண்மரும் புகழ்கூறி
வழிபடும் பெருமை பெறலாம்,
தருணத்தில் உதவுதிரு மந்திரப் பகுதியொடு
சத்தகோ டிக்கும்உ யிராய்த்
தழையும்உயர் பிரணவப் பொருளாய உண்மையைத்
தரும்இலை விபூதி பெறலாம்,
அருணகிரி அதனில்வரு கிளியுடைய கடவுளுடன்
அம்புலீ ஆட வாவே
அணிபொழிற் புலியூரில் வருபாண்டி நாயகனொ(டு)
அம்புலீ ஆட வாவே. 67

செந்நிறக் கருநிறச் சர்ப்பங் களால்உறு
திடுக்கம் தவிர்ப்ப தற்குச்
சேவற்ப தாகையொடு தோகைமா மயிலுண்டு,
தேய்கின்ற கொடுமை முதலாம்
எந்நிலைப் பிணியும் தொலைத்திடப் பன்னீர்
இலைக்குள் உறும்நீறு நல்கும்
ஈராறு செங்கையுண்(டு), இனிவரும் செயல் சொல்ல
இருமூன்று வாய்கள் உண்டு,
வெந்நிணம் பரு(கு)அவுணர் கலகமற முனியவடி
வேலுண்டு, சனன மரண
வேராய வினையறச் சூடுமிரு தாளுண்டு,
மேதினி முதற்சொல் எங்கும்
அன்னியமி லாதுற்ற வடிவான குமரனுடன்
அம்புலீ ஆட வாவே
அணிபொழிற் புலியூரில் வருபாண்டி நாயகனொ(டு)
அம்புலீ ஆட வாவே. 68

**தண்டம்**

**வராவிடில் ஒறுத்தல் நேருமென உணர்த்திய முறை**

மதிள்சுற்று கனகநகர் உடையகோன் மதுரையினில்
வந்துமுன் பட்ட பாடும்,
மற்றேழ்வ ரொடுகூடி அமர்புரிந்(து) உயிர்தப்பி
வரஅன்று பட்ட பாடும்,
விதிபட்ட பாடும்,நெடு மால்அஞ்சு தாருகனும்,
வெற்பு(ம்)முன் பட்ட பாடும்,
வேலன்றி வெல்என்று வில்லாயி ரம்கொடெதிர்
விநயவான் பட்ட பாடும்,
சதிமுற்று மாமரத் தோடலை முழங்கெழிற்
சாகரம் பட்ட பாடும்,
சாரணக் கொடுமுனிவர் பட்டபா டும்கருது
தன்மையோர் பகைசெய் வரோ?
அதிருற்ற கழலணைந் தாடுமுரு கேசனுடன்
அம்புலீ ஆட வாவே
அணிபொழிற் புலியூரில் வருபாண்டி நாயகனொ(டு)
அம்புலீ ஆட வாவே. 69

வெம்மதம் பெருகநெடு வேலையமு தம்பருகும்
வெள்ளானை உண்டி டாமல்,
வீராதி வீரரும் நடுக்குறக் குலவுதகர்
மேல்வந்து முட்டி டாமல்,
பொய்மதத் தினர்தாமும் நெக்குருக நடமிடும்
புள்ளிமயில் கொத்தி டாமல்,
போர்வேண்டி அநுதினம் கூவுமுயர் சேவற்
புறங்கால் கிழித்தி டாமல்,
மெய்ம்மறைப் பகுதிஒரு நாலுக்கும் உயிரான
வேல்கொன் றிடாமல், இந்த
வியனுலகம் உள்ளவரை அழியாது வாழுநலம்
மேவிடும் விருப்பம் உண்டேல்
அம்மன்இரு வர்க்கும்நடு நின்றகுரு சாமியுடன்
அம்புலீ ஆட வாவே
அணிபொழிற் புலியூரில் வருபாண்டி நாயகனொ(டு)
அம்புலீ ஆட வாவே. 70



## எட்டாவது

# சிற்றிற் பருவம்

**சிறுவீடு கட்டி விளையாடும் சிறுமியரிடம்**
**முருகன் செய்யும் விளையாட்டு**

மயில்வா கனத்துப் பெருமாளே!
மறைமேல் நடிக்கும் மலர்த்தாளா!
மழைசூழ் குறிஞ்சிக்(கு) இனியோனே
வலிசேர் தகுவர் குலகலகா
எயில்மூன்(று) எரித்துக் கனகசபை
இடத்தில் நடிப்போன் தரும்புதல்வா!
இமயப் பிடிதன் முலைபருகும்
எழில்வா யுடைய முருகோனே!
குயில்நேர் குறத்தி மணவாளா!
கோலே யனைய விழியிமையாக்
கொடிதன் ஊடற்(கு) உளம் உருகும்
கோலா கலச்சண் முக!முருகா!
அயில்வேற் குமர குருபரனாம்
அரசே! சிற்றில் அழியேலே
அருட்சீர்ப் பாண்டி நாயகனே!
அடியேம் சிற்றில் அழியேலே. 71

சத்தி வடிவேற் படையெடுத்துத்
தகர்மீ தேறிச் சமராடித்,
தகுவர் குலமும் திருநீற்றைத்
தன்வோர் குலமும் அறக்களைந்து,
பத்தி யுடையார் களிகூரப்
பவனி வருவாய்! மயிலேறிப்
பாரும் கடலும் பலமலையும்
பரிந்து திரிவாய்! களிறூர்ந்து

சித்தி விரும்பும் அவர்பாலும்
திரும்பா வீடு பெறநாடும்
திறத்தோர் பாலும், தினந்தோறும்
செல்வாய்! இணைதீர் சிவகுருவே!
அத்தி மகள்கண் களிகூரும்
அழகா! சிற்றில் அழியேலே
அருட்சீர்ப் பாண்டி நாயகனே!
அடியேம் சிற்றில் அழியேலே. 72

எம்போல் நீயும் ஒருகுழவி
எனச்சொன் னேமா? நீகளிப்புற்(று)
யானும் உம்மோ(டு) இருப்பேன்என்(று)
இயம்பும் காலை இசைந்திலமா?
நம்போல் வருந்தான் இவன்வேறு
நாம்வே(று) எனல்போற் பலவாறு
நவின்று மணந்து மணற்சோற்றை
நல்கா தருந்தித் துயின்றேமா?
வம்போ வழக்கோ எனக்கூறி
வாதா டினமா? யாங்கள்பகர்
மழலை மொழியிற் சிறிதிரக்கம்
வைத்தால் மகிமை குறைவாமா?
அம்போ ருகத்தாட் குருபரனே!
அணிசேர் சிற்றில் அழியேலே
அருட்சீர்ப் பாண்டி நாயகனே!
அடியேம் சிற்றில் அழியேலே. 73

பானா றியவாய்ச் சிறியேமும்
பகிர்ந்து சிலர்தாம் முச்சிலினால்
பரிந்து கொழித்த மணல்பாராய்!
பதுமம் அனைய கரம்நோவத்
தானா வருந்தி நிலம்பெருக்கும்
தயக்கம் பாராய்! நுதல்வெயர்க்கும்
தளர்ச்சி பாராய்! சிலர்ஏங்கித்
தவித்தல் பாராய்! தனித்தனியே
நானா விதமாய்ச் சமைத்(து)ஒழித்து
நன்றாய் அமைத்த எழில்பாராய்!
நாங்கள் உனது மொழிப்படியே
நடப்போம், இருந்து விளையாடாய்!



ஆனா அமுதே! மயிலேறும்
அமலா! சிற்றில் அழியேலே
அருட்சீர்ப் பாண்டி நாயகனே!
அடியேம் சிற்றில் அழியேலே. 74

ஒருசட் சமய நெறிதோறும்
ஒவ்வோர் முகமே உயர்வெனக்கொண்(டு)
உழன்ற நலத்தால் ஆறுமுகம்
உடைய பரம்ஒன் றெனத்தேரும்
பெருமைக் குரியார் சிரஞ்சூடும்
பிரச மலர்த்தாள் வருந்தாதோ?
பிழைதீர் கனக சபையுடைய
பெருமான் உரமும், உமைமடியும்,
கருணைத் திருமால் முதலாய
கடவு ளார்தம் அவிர்முடியும்
கழலிற் றுகள்போய்ப் படியாதோ?
கடையேம் மனம்நொந் தயரேமோ?
அருமைப் புலவர் விருப்பமெலாம்
அருள்வாய்! சிற்றில் அழியேலே
அருட்சீர்ப் பாண்டி நாயகனே!
அடியேம் சிற்றில் அழியேலே. 75

### வேறு

உகளும்விளை முத்தமும், தையலார் மேடைதொறும்
உரிமைமிகு கணவர் தம்மால்
ஊடிஎறி யும்பணிக் குவையும்,விலை மகளிர்முலை
ஒழுக விடுகத் தூரியும்,
பகடுசொரி மும்மதச் சேறு(ம்)மூ வாயிரவர்,
பலகோடி முனிவர், புலவோர்,
பாதமல ரிற்குலவு மகரந்த மும்,தினம்
பழகுமறு குடைய தில்லை
நகர்நடுவி னிற்கனக சபையில்நட னம்புரியும்
நம்பனருள் கொண்டு முன்னாள்
நான்மறைக ளும்பொருவில் ஆகமங்க ளும்மொழியும்
நற்பவள வாய்,கண், முத்தத்

திகழும்இரு தாள்களால் சிறியரேம் செய்ததொரு
சிற்றிற் சிதைத்தி டேலே
செங்கண்மால் மருகனே! தென்பாண்டி நாயகா!
சிற்றிற் சிதைத்தி டேலே. 76

**தேன்வரும் இடமும், தில்லையில்வரும் ஓசையும்**

முல்லைநகை மெல்லியர்கள் குழலெனத் திகழ்பொழிலில்
முகிழ்மலர் உகுத்த தேனும்,
முடகுடக் கனிவெடித் துச்சொரிந் திடுதேனும்,
முதிர்தென்னை அனைய வாழைக்
கொல்லையிற் கனிகசிந்(து) ஒழுகுதே னும்,பெருகு
குவளையும் கமல மலரும்
கூடிய தடம்பொய்கை தருதேனும், நெட்(டு)இறால்
கொப்பளிக் கின்ற தேனும்,
தொல்லைமா நதிஎனக் கடல்வயிறு கிழிவுறத்
தோயும்வளம் ஆர்ந்து விண்ணோர்
தொழும்ஓதை யும்கழலில் எழும்ஓதை யும்கவிஞர்
துதிஓ தையும் குலாவும்
தில்லைநட ராசனருள் சிறுமைந்த னே!எமது
சிற்றிற் சிதைத்தி டேலே
செங்கண்மால் மருகனே! தென்பாண்டி நாயகா!
சிற்றிற் சிதைத்தி டேலே. 77

**வேறு**

*தத்தன தத்தன தத்தன தத்தன தத்தத் தனதானா*

வெட்டும ருப்புறு மைக்கட விற்சமன் வெப்புற் றிகழாதே
மெத்தவும் நித்திரை யுட்கன விற்பகர் மெய்ச்சொற்
றவிராதே
எட்டுவ கைத்திசை யுற்றம னுத்திரள் எய்த்துத் தவியாதே
எட்டியெ னத்தகு துட்டர்க ளிப்புடன் எற்றித்
திரியாதே



கொட்டுமி ழுற்றிஅ ருச்சனை யிட்டுயர் கொற்றத
தனிவேலா
குற்றம றுப்பதெ னப்பகர் சர்ச்சனர் கொக்கிற்
குறுகாதே
திட்டுத மிழ்க்கும்அ ருட்புரி வித்தக சிற்றிற் சிதையேலே
சிற்சபை யிற்சிவன் முற்றரு தற்பர சிற்றிற்
சிதையேலே. 78

கொச்சைமொ ழிக்கவி யைப்புகழ் அற்பர்கை கொட்டித்
திரியாதே
குக்கலை யொத்த விடக்கின ருக்குள கொட்டிற்
றழையாதே
பிச்சையி டத்தகும் நற்றொழில் கைத்திடு பெட்புப்
பெருகாதே
பிற்பிற விக்கயர் வுற்றம தத்தினர் பித்துப் படராதே
பச்சைம யிற்பரி யைப்புகழ் விற்பனர் பக்கத் துணையாவாய்
பற்றல ரைக்களை சத்தி வயப்படை பற்றித் திகழ்சேயே
செச்சைம லர்ப்பொரு முத்தமிழ் கற்பவர் சிற்றிற்
சிதையேலே
சிற்சபை யிற்சிவன் முற்றரு தற்பர சிற்றிற்
சிதையேலே. 79

**வேறு**

*தத்ததன தத்ததன தத்ததன தத்ததன*
*தத்ததன தத்ததன தத்ததன தர்னா*

சிக்கலுறு முத்தமிழ்தி ருத்தமது ரைக்குளொரு
செட்டிமனை யுற்றருக! சிற்றில்அழி யேலே
செப்பெனுமு லைக்குரிய பத்தினிக ளுக்குரிய
சித்திரமொ ழிக்குமர! சிற்றில்அழி யேலே,
செக்கரில்உ றுப்பமைவ துற்றிலகு பொற்பும்அலர்
செச்சையு முடைப்புனித! சிற்றில்அழி யேலே
சிட்டர்பல ருக்கும்அவர் நிச்சயமெ னக்குலவு
சித்துறுத னிக்குரவ! சிற்றில்அழி யேலே
திக்கடைய வெற்றிகொள்வி றற்பெறுத யித்தியர்கன்
செத்தொழிய விட்டபுய! சிற்றில்அழி யேலே
தித்தியொடு மத்தளமு ழக்கநட மிட்டசிவ
சித்தர்விழி பெற்றசுத! சிற்றில்அழி யேலே

தெக்கணமி ருப்பவனும் அச்சமொடு மெச்சவளர்
செற்றஅயில் பற்றுகர! சிற்றில்அழி யேலே
செப்பரிய நட்புறுதி ருப்புகழ்ப டிப்பவர்கள்
சித்தமறி பொற்சரண! சிற்றில்அழி யேலே. 80

## ஒன்பதாவது

# சிறுபறைப் பருவம்

**சிறுபறைமூலம் ஒலிஎழுப்பி மக்கட்குச்**
**செய்திகளை விளக்கும்படி கூறுதல்**

உரையுணர்(வு) இறந்தமுழு மோனமே இனிதென்றும்,
ஒருவனே கடவுள் என்றும்,
ஒருகோடி சமயத்துள் ஓராறு சமயமே
உயர்வென்றும், உயிர்கொன் றிடா(து)
இரைநுகரும் விருகத்தும் ஏனைமா னிடராகும்
ஈனர்இழி வுள்ளார் களே
என்று(ம்),மறை பலகோடி ஒன்றொடொன்(று) ஒவ்வாமல்
இகலுவது பழமை என்றும்,
கரைதவிரும் ஆனந்த வாரிதரும் அமுதெனக்
காணல்குரு பாதம் என்றும்,
கயலனைய விழிமகளிர் மயலொழியும் நலமடைதல்
கடினமே யாகும் என்றும்,
திரைகடற் கலையே மூடுத்தஉல(கு) எங்கெணும்
சிறுபறை முழக்கி யருளே
சிவசிதம் பரர்மகிழ வருபாண்டி நாயகா!
சிறுபறை முழக்கி யருளே. 81

எப்படித் தக்கநலம் உற்றார்க ளேனும்அருள்
இல்லார்கள் எளிஞர் என்றும்,
இழிவெலாம் உடையார்கள் எனினும்அது பெற்றோர்கள்
யாவர்க்கும் ஏற்றம் என்றும்,
முப்பழச் சாறனைய செந்தமிழை அன்னகலை
மொழியவே றில்லை! என்றும்,
முற்பிறவி, பிற்பிறவி ஒப்பாத மூடர்பகர்
முத்தியும் முழுப்பொய் என்றும்,



மெய்ப்பிரம நிலைசச்சி தானந்த மயம்என்றும்,
வெவ்வேறு வாறு கூறி
வெறுவாயை மெல்வோரும், உயர்பத்தி யால்உணர்வில்
மேவுவது சகசம் என்றும்,
செப்பனைய பலகோடி அண் டத்தி னும்சென்று
சிறுபறை முழக்கி யருளே
சிவசிதம் பரர்மகிழ வருபாண்டி நாயகா!
சிறுபறை முழக்கி யருளே! 82

ஒருமதத் தொருதலைவர் உண்டாகி, மற்றவர்
உளம்பதற மோதும் வேளை
ஒத்திருப் பதுதிரு வருட்செயல் வழக்கென்றும்,
உன்னுவது போல எல்லாம்
தருமமொடு சத்தியமும் வடிவான தெய்வம்
தழைப்ப(து)உண் டென்றும், அழியாச்
சமரச சுபாவம் துளக்குவது முன்செய்த
தவமென்றும்,மாநி லத்தில்
குருமர(பு) இலாதமதம் இலைஎன்றும், அருள்வலிமை
கொள்ளாத ஞானம் எல்லாம்
கொற்றவர்கள் முதலான பொருளாள ரைக்கண்டு
கூசிக் கிடக்கும் என்றும்,
திருமறுகு தொறும், அறிஞர் சித்தம் தொறும், சென்று
சிறுபறை முழக்கி யருளே!
சிவசிதம் பரர்மகிழ வருபாண்டி நாயகா!
சிறுபறை முழக்கி யருளே! 83

எம்மதத் தாடல்களும் என்தாதை யாடலே
என்றும், அவைதோறும் மேவி
இகலறுத் தவர்,அவர்க்(கு) உவகைதரு குருவெலாம்
யானன்றி இல்லை என்றும்,
மெய்ம்மதத் தொடுதீதும் அதுபோல மற்றதில்
வியப்பொன்று மேவும் என்றும்,
வீடுணரும் ஞானியே விழியுடையன் என்றும்,அவன்
மெல்லமலர் வாய்தி றந்தால்
பொய்ம்மத தினர்தாமும் ஒத்துரை பயிற்றுவது
புதுமை என்றும், கருத்துப்

போனபடி ஒருநாம ரூபம்வைத் தாலும்அது
பூரணத் துடைமை என்றும்,
செம்மணிக் குவடனைய பன்னிரு புயங்களால்
சிறுபறை முழக்கி யருளே
சிவசிதம் பரர்மகிழ வருபாண்டி நாயகா!
சிறுபறை முழக்கி யருளே. 84

**முருகப்பெருமானை முன்னிலையாக்கித் தத்துவம் உணர்த்தல்**

உன்றனை அலாமலொரு தெய்வமுண் டென்னநான்
உன்னிடேன், நின்மு கங்கள்
ஓராறு திசையுமே, ஈராறு சமயமும்
உனக்குள்ள தோள்கள், இச்சை
குன்றவர் வளர்த்தகொடி, கிரியைமக வான்மகள்,
குறிக்கரிய ஞானம் வைவேல்,
குணமூன்றும் மயிலுடன் தகரும்வெண் களிறும்,
குக்குக்கூ என்று கூவி
நின்றதொரு சேவலே நிறைவாய புகழ்,என்கை
நீயுணர்த் திடஉணர்ந்தேன்
நிசமான பிரணவப் பொருளும் கொடுத்தாய்!உன்
நேயமே போதும் என்று
தென்றலங் கிரிமுனிவன் வழிபடும் குருபரா!
சிறுபறை முழக்கி யருளே
சிவசிதம் பரர்மகிழ வருபாண்டி நாயகா!
சிறுபறை முழக்கி யருளே. 85

**வேறு**

**பலவித ஒலி நிகழ் பான்மை கூறல்**

காவாழ் புலவர் முடியொலியும்,
கனக சபையிற் சிவன்ஆடும்
கழலின் ஒலியும், சிலம்பொலியும்
களிக்கும் உமையாள் களத்தொலியும்
தேவா ரங்கள் முதலாய
திருநூல் ஒலியும், அரிபிரமர்
சிறக்கும் கணங்கள் கொளும்கருவித்
திரட்பே ரொலியும், தெருநிறையப்



போவார் ஒலியும், களிற்றொலியும்,
புரவி யொலியும், விடையொலியும்,
பொழிற்புள் ஒலியும், வளையொலியும்,
பொலியும் பெருமை சிறிதேனும்
மூவாப் புலியூர் முருகோனே!
முழக்கி யருளாய் சிறுபறையே
முதன்மைப் பாண்டி நாயகனே!
முழக்கி யருளாய் சிறுபறையே. 86

**வெண்முத்துகள் விளங்கும் இடம்**

வன்னக் கதலிப் பெருந்தாற்றில்,
வயலிற் பொலிநெற் கதிர்க்குலையில்,
வாவிக் கமல மலர்ப்பொகுட்டில்,
மறுகிற் றிரியும் வளைவாயில்,
கன்னற் கணுவில், நெடும்வேயில்,
கலிக்கும் பலமுத் தமும்சேர்த்துக்
கன்னிப் பருவக் கடைசியர்கள்
கள்ளுக்(கு) அளந்து களித்தவர்நேர்
சின்னப் பயல்கள் உடன்கூடிச்
சிலவா றாடி, மகிழ்கூறத்
திகழும் புலியூர் நலம் விளைக்கும்
தீபம் அனைய செழுஞ் சுடரே!
முன்னற் கரிய வடிவுடையாய்!
முழக்கி யருளாய் சிறுபறையே
முதன்மைப் பாண்டி நாயகனே!
முழக்கி யருளாய் சிறுபறையே. 87

**வேறு**

***தனனாதன தனனாதன தனனாதன தனனா***

பிணியாமென உலகோர்பகர் பிழையோர்குடி கெடவே
பெருகார்வமொ டுனையேபணி பெரியோர்மகிழ் வுறவே
துணிவோடுயர் வதையேபுரி துகளார்மதம் அறவே
சுடர்வேல்மயில் எனஓதிய தொழிலாளர்கள் மிகவே

கணியாமென வனமூடுறு கருணாகர முருகா!
கதியாமதின் விதையாகிய கழல்சேர்குரு பரனே
அணிசேர்சடை யினர்பாலக! அறையாய்சிறு பறையே
அழியாதுயர் தமிழ்நாயக! அறையாய்சிறு பறையே. 88

கொடியோர்களும் மதவேரொடு குலவேரற முனிவாய்!
குறமாதுடன் மகவான்மகள் குணம்யாவையும்
உணர்வாய்!
விடிநேரம துணர்சேவலை விறல்வேலொடு புனைவாய்!
விளையாடலை நிதம்நாடியுள் மெலிவார்தமை
அகலாய்!
துடிநாடகம் இருதாள்கொடு சுகவாரிதி அருள்வாய்!
சுரர்மீதொரு முதுசூர்இடு சுமைதீர்சமர் புரிவாய்!
அடியார்மிகு பொதுவார்சுத! அறையாய்சிறு பறையே
அழியாதுயர் தமிழ்நாயக! அறையாய்சிறு பறையே. 89

அரிஆழியை அருள்வேலவ! அறையாய்!சிறு பறையே
அதிமோகன வடிவார்குக! அறையாய்!சிறு பறையே
அரிமாமகள் புணர்சேவக! அறையாய்!சிறு பறையே
அடல்சேர்குற மகள்காவல! அறையாய்!சிறு பறையே
அரியாகிய மயிலூர்பவ! அறையாய!சிறு பறையே
அவவேரற வருதேசிக! அறையாய்!சிறு பறையே
அரியார்கழல் அரனார்சுத! அறையாய்!சிறு பறையே
அழியாதுயர் தமிழ்நாயக! அறையாய்!சிறு பறையே. 90

பத்தாவது

## சிறுதேர்ப் பருவம்

**முருகனைச் சிறுதேர் அமைத்து விளையாடும்படி கூறுதல்**

**வாவிச் சிறப்பு**

மாதவன் கரமனைய செந்தாம ரைப்போதில்
வளையினம் துயிலும் எழிலும்,
வாணிநிகர் ஓதிமம் தவளவா ரிசமலரில்
வதிகின்ற சீரும், மின்னார்



காதளவில் நீள்விழிக் கயலஞ்சி முதுவரால்
கமுகிலுறு குருகு வெருளக்
கல்லென்று பாய்ந்துவரும் வியனும்,அலை இனமெலாம்
கரையினிற் சென்று சென்று
மோதமிகு பேரொலியும், விரிவண்டு மதுவுண்டு
மொகுமொகென மொய்க்கும் இசையும்,
மும்மத கரிவந்து முழுகெருமை தலைகண்டு
முதலைஎன்(று) அல(று)ஓ தையும்
சீதமலி வாவிதொறும் நிலவுபுலி யூரனே!
சிறுதேர் உருட்டி யருளே
செம்புநதி வைகையொடு திகழ்பாண்டி நாயகா!
சிறுதேர் உருட்டி யருளே. 91

துங்கமுறு கோடொன்று கொண்டகரி தழுவிமகிழ்
துணையாய பவள மலையே!
சூரியன் முதற்பகரும் முச்சுடரும் விழியாய்த்
துலங்கும்அரன் ஈன்ற சுடரே!
கொங்கவிழு மலர்பூத்த பைங்குழற் சிவகாமி
கொஞ்சுமொரு செங்கிள்ளையே!
குறமகளும் அமரர்தரு மகளும் புணர்ந்துளம்
குளிர்கின்ற கொற்ற வேளே!
பங்கய மலர்பொகுட் டுடையமைத் துனன்உளம்
பதறவிளை யாடும் முருகா!
பாரதி எனும்தங்கை களிகூர முதுநூல்
பயிற்றியருள் பழைய புலவா!
செங்கண்முர கரிமருக னானகும ரேசனே!
சிறுதேர் உருட்டி யருளே
செம்புநதி வைகையொடு திகழ்பாண்டி நாயகா!
சிறுதேர் உருட்டி யருளே. 92

மேகமோர் ஏழுக்கும் முனியரசன் உறுமலைய
வெற்பில்முன் தளைய மைத்தாய்!
விரைகமழ் கடம்புகுர வம்குவளை வெட்சியொடு
வேம்பும் புனைந்து நின்றாய்!
பூகநிகர் களமுடைய பொறியாய மாமிதன்
பொன்மேனி குன்ற நாணிப்
போகாமல் முத்தமிட் டளிகூர இளமைப்
பொருத்தம் அகலா திருந்தாய்!

சாகரத் துறுகொடியர் குலவேர் களைந்துவரு
சத்திவேல் கொண்டு யர்ந்தாய்
தமிழ்வாணர் கலகம் தவிர்த்துவப்(பு) உதவமுச்
சங்கம் தொறும்பு குந்தாய்!
சேகரமெ னப்பரமர் புனைமலர்க் கையனே!
சிறுதேர் உருட்டி யருளே
செம்புநதி வைகையொடு திகழ்பாண்டி நாயகா!
சிறுதேர் உருட்டி யருளே. 93

**முருகப்பெருமான் சிறுதேர் உருளும்போது**
**உடன் உருளும் பல நிகழ்ச்சிகள் இவை என்பது**

வெட்டுற்ற பாம்பிற் றுடித்தருள அன்றுகரு
வேழத் துதிக்கை கொய்தாய்!
வில்லா யிரம்கொண்ட சிங்கனது சிரமெலாம்
வெங்களத் துருள எய்தாய்!
மட்டுற்ற மாலைபுனை சூரன் இருபுள்ளாகி
மகுடம் உருளப் புரிந்தாய்!
மதுரையில்முன் வருசமண மதமகளிர் கோவென்று
மண்ணில் உருளப் பணித்தாய்!
கொட்டுற்ற தொன்மைக் குறிஞ்சிதொறும் வெள்ளருவி
கொழிமுத்தம் உருள நின்றாய்!
குலவுதிரு மலைமீதில் உருளும் ஒருவனையும்
குறுஞ்சிராய்ப் பால்அ ளித்தாய்!
செட்டுற்ற நெஞ்சினர்கள் உணராத பரதனே!
சிறுதேர் உருட்டி யருளே
செம்புநதி வைகையொடு திகழ்பாண்டி நாயகா!
சிறுதேர் உருட்டி யருளே. 94

வெண்ணீறு முதலாய(து) அணியாமல்
ஊன்உண்டு வீணே திரிந்த தலைகள்
வெட்டுண்டு மதியுண்டு கெட்டுண்டு கொத்துண்டு
வெம்பாலை அதனில் உருள,
தண்ணீர் வளங்குலவும் நானிலத்(து), அறுவகைச்
சமயத்தி னோர்கள் செங்கைத்



தடமலரில் மணியுருள, நாவிலவிர் மந்திரம்
தாரகத் தோடும் உருள,
பெண்ணீலி யர்க்குருகி டாதசிலர் நெஞ்சில்உறு
பேரின்ப வாரி பொங்கிப்
பிரவாளம் எனவிழிகள் வழியுருள உணர்வரிய
பேரம் பலத்தில் நின்று
தெண்ணீர் குலுங்கநடம் இடுபரமர் மைந்தனே!
சிறுதேர் உருட்டி யருளே
செம்புநதி வைகையொடு திகழ்பாண்டி நாயகா!
சிறுதேர் உருட்டி யருளே. 95

**வேறு**

**சங்கு ஒலிக்குமிடங்கள்**

மகளிர் கழங்கா டியகரத்தில்,
மணிப்பூண் ஒதுக்கும் பலமறுகில்,
வாவி அலரும் மலர்ப்பொகுட்டில்,
வளஞ்சேர் சாலி வயல்வரம்பில்,
திகழும் மாட மனைமுன்றில்,
தெண்ணீர்ச் சாலிற், செழும்பொழிலில்
திருமால் முதலோர் சிலர்வாயில்,
சிற்றம் பலத்தோன் செவித்துணையில்,
மகரக் கொடியோன் சிலைப்பெருக்கில்
வாழை நிழலிற் புனலூறும்
மள்ளர் குடிலில் வளைமுழங்கும்
வளத்தால் உயரும் புலியூரில்
ஒகரப் பரிமேல் வருங்குமரா!
உருட்டி யருளாய் சிறுதேரே
ஒளிர்வேல் பிடித்த பாண்டியனே!
உருட்டி யருளாய் சிறுதேரே. 96

எட்டாய் இலங்கிப் பலவாறாய்
இசைந்து கிடக்கும் தமிழ்வண்ணத்(து)
இயல்பிற் றவறாத் திருப்புகழ்நூல்
இயம்பும் முதுமைப் புலவோர்க்கும்,

தட்டா(து) ஒழுகும் நயம்உணரும்
தக்கோர் தமக்கும், தினம்படிக்கும்
தகைமை யினர்க்கும், செவிகொடுக்கச்
சலியா தவர்க்கும், சார்ந்தோர்க்கும்
நட்டார் பலர்க்கும், அவர்பெருமை
நவிலத் துணியும் நல்லோர்க்கும்,
நமன்வேள் பிரமன் அணுகாத
ஞானா னந்தப் பேறருளி
ஒட்டார் குடிக்கு நெருப்பாவாய்!
உருட்டி யருளாய்! சிறுதேரே
ஒளிர்வேல் பிடித்த பாண்டியனே!
உருட்டி யருளாய்! சிறுதேரே! 97

### வேறு

***தனத்தானன தனத்தானன தனத்தானன தானா***

முருக்காம்இத முடைப்பாவையர் முலைச்சோடுறு மார்பா!
முதற்காரணன் எனத்தேறிய முனிக்கோனணி தாளா!
பெருக்காவரு திதற்றானவர் பிழைத்தோடவி டாதாய்!
பிறப்பேழையும் அறுத்தோர்கதி பெறப்பேசிடும் வாயாய்!
தருக்காலெதிர் திரட்சாரணர் தமக்கோர்நம னானாய்!
தனித்தாரக மதிற்சேரொளி தனிற்றோய்தரு சீலா!
உருக்காமுயர் அயிற்சேவக! உருட்டாய்!சிறு தேரே.
உவப்பால் நடம் நடிப்பார்சுத! உருட்டாய்!சிறு தேரே.98

மரத்தோடலை கடற்சாடிய வலுச்சேர்கதி வேலா!
மழைக்கோன்முடி கவித்தேயவன் மகட்சேர்மண வாளா!
கரத்தோவறு கிளிக்கோநுவல் கவிக்காவலு ளானே!
கருத்தோடொரு குறக்கோமளை கழற்பேணிய வேடா!
சரத்தோர் தொழும் நவச்சேவகர் `தமக்காதர வானாய்!
சழக்காகிய மதத்தீயவர் சபைக்கோரிடி யேறே!
உரத்தோள்புனை சமர்ச்சேவல! உருட்டாய்சிறு தேரே
உவப்பால்நடம் நடிப்பார்சுத! உருட்டாய்சிறு தேரே. 99



### வேறு

***தனனாதனத் தனனாதனத் தனனாதனத் தனனா***

சிவனார்நுதற் சுதனே!எழிற் சிறுதேர்உருட் டுகவே
திறல்வேலுடைக் குகனே!திருச் சிறுதேர்உருட் டுகவே
சிவலோகசற் குருவே!தனிச் சிறுதேர்உருட் டுகவே
திகழ்மாமயிற் பரியாய்!மணிச் சிறுதேர்உருட் டுகவே
சிவமானபொற் சரணா!அருட் சிறுதேர்உருட் டுகவே
தெருள்பாவலர்க் கருள்வாய்பொலச் சிறுதேர்உருட் டுகவே
சிவமார்தமிழ்ப் புலவா!புதுச் சிறுதேர்உருட் டுகவே
செறிவார்பொழிற் புலியூர்தொழச் சிறுதேர்உருட் டுகவே. 100

### நூற்பயன்-வெண்பா

நந்தா விறற்பாண்டி நாயகன்பிள் ளைக்கவியாற்
சிந்தா குலந்தவிரும், சீருண்டாம்-கொந்தார்
குழலார் இருவரொடு கொற்றமயி லூரும்
தழலாகங் காணத் தகும்.

**சிதம்பரம் ஸ்ரீபாண்டிநாயகன் என்ற**
**முருகப் பெருமான் பிள்ளைத் தமிழ் முற்றிற்று**

உ

# மண்டூர்ப் பிள்ளைத்தமிழ்

## வி. விசுவலிங்கம்

## அவையடக்கம்

### நேரிசை வெண்பா

கீரன் முதலோர் கிளற்று கவிதைமலர்
சேரப் புனைந்த திருமுருகன்—ஆரவிஃதோர்
புன்மலரென் றெண்ணிப் புனையாதி ரானுயரும்
தன்னருளி லேமலர்ந்த தால்.

## குரு வணக்கம்

### அறுசீர் ஆசிரிய விருத்தம்

தண்டமிழாம் பரவையிடை யாழ்ந்துசங்கத்
தமிழ்ப்பொருளாந் தரள மெல்லாம்
கண்டுமொழி யாலுவந்து கருணையுடன்
எடுத்தளித்துக் கலையின் மேலாம்
பண்டைஇயல் தெரித்தகத்தின் இருள்கடிந்த
பண்டிதப்பேர்ப் பட்ட மேய
திண்டிறல்சேர் பூபாலப் பிள்ளைதிருத்
தாள்கள்நிதம் சிந்தை செய்வாம்.



## 1. காப்புப் பருவம்

### திருமால்

பூவைப் பூவண் ணத்திறையைப்
பொற்றா மரைக்கட் புத்தேளைப்
புவனி புரக்க வரையேந்திப்
புயல்முன் றடுத்த புங்கவனைக்
கோவைக் கொவ்வைக் கனியதரக்
கோகன தப்பூந் திருமாதைக்
கொஞ்சிக் குலவும் பெருமானைக்
கூடிம லர்த்தாள் தலைக்கொள்வாம்
சேவைச் சைல மாமகளைச்
சிறக்க வாமங் கொண்டிவருந்
தேச னருளீ ராறுகரச்
சேயோ னைஉம் பர்க்கெல்லாந்
தேவைச் சுருதிக் கெட்டாது
திகழ்மா மணியைச் செந்தமிழர்
சேருந் தில்லை மண்டூர்வாழ்
செவ்வேள் தன்னைக் காக்கவே. 1

### உமாபதி

#### வேறு

வையக மலர்ந்தமலர் மாலையுங் கவிவாணர்
வாய்மலர்ப் பாமாலையும்
மார்பிடை வயங்கா வடியார்திமிர நீங்கவருள்
மாணொளிகொள் ஞானச்சுடரைச்
செய்யகம் முதலைந்து திணைவளஞ் சேரச்
சிறந்துபுக ழோங்குமண்டூர்ச்
சேயைச் சடாட்சரச் செம்பொருளை உமையீன்ற
செல்வக் குழந்தைவடிவைச்
செய்யபங் கயமல்லி செறிகங்கை அறுகிதழி
சேர்ந்துமிளிர் சடிலமுடனே
சிரமாலை யோடரவு சூடுமிய லானெய்தல்
சீர்வளஞ் சா[illegible]மருதமும்

துய்யநறு முல்லைசுர மும்நிவந் தோங்குவரை
துன்னிய குறிஞ்சிநிலனுந்
தொக்குகா சினியெலா மொன்றாய்த் துலங்குசீர்ச்
சோமேச னார்காக்கவே. 2

## உமாதேவி

### வேறு

கனக வரையிடை சாரு மிளங்கொடி
கரிமு கனையருள் கார்கொ ணிறப்பிடி
களப நறியதண் ணாரம ணிந்தகில்
கமழு மளகநன் றாக வகிர்ந்தவள்
மனனில் நினைபவர் மாயை யகற்றுவள்
மறுவி லறுநெறி யாகவு நிற்பவள்
மலைய வரையனின் மாமக ணற்பத
மலரை யனுதினம் வாழ்த்தி வணங்குதும்
எனது குருபர னாக நறுந்தமிழ்
இனிது தெரிதர வேயரு ளீந்தென
திதய கமலமீ தேகுடி கொண்டவன்
இளைய சரவண மீது வளர்ந்தவன்
தினக ரருமெதிர் சேரி லொராயிரந்
திகழு மழகிலுந் தேசி லுயர்ந்தவன்
தினமு மருள்சுரந் தீயு நெடுங்கடல்
திருமு ருகனெனுஞ் சேய்ப்பு ரக்கவே. 3

## கணபதி

### வேறு

சுருதிக ளொருநா லொடுமொரு சேரத்
துகளறு மிருடி சொற்ற சுவைக்கதை
தொகைபட வடமா வரையுய ரேடாத்
துரிசற வரையுந் தும்பி முகத்தவன்
சுலவிய கயமா முகவசு ரனினால்
துயருறு சுரரின் துன்ப கற்றினவன்
துணையென வணுகு மடியவ ரிதயத்
துதிமல ரணியுந் துங்கப தத்தினர்



பருதியு மதியும் புடைதனி லுருளப்
படியினை ரதமாக் கொள்ள மயத்தினிற்
பரமனு மகிழ வரமிக வருள்செய்
பதயுக நளினம் பரித்தவி தத்தினர்
பலகலை யுணரும் படிமுத லெவரும்
பரவுதல் பெறுநற் பண்பு சிறந்தவர்
பழமறை நுணுகி யளவிட வரிய
பரனடி இணைப ணிந்துவ ணங்குதும்
கருதிய கனகக் குழையசை யசையக்
கவுரிம டியிலி ருந்துத வழ்ந்தவன்
கவலைக ளகலக் கருணைகொ ணயனக்
கதிரொடு முருவக் காட்சி யளிப்பவன்
கதுமென வபயக் குரலொலி யெழவக்
கணமவ ணணுகிக் காத்துரட் சிப்பவன்
கனதன மடவா ரிருபுற மமரக்
கருமயி லூருங் கந்தனைக் சுலையின்
குருமணி யருண கிரிபுக ழினிமை
குதியுறு கவிதை கொண்டு களிப்பவள்
குறமட மகளைக் குலவிட முதிருங்
குரலு றுதினையின் கொல்லையெல் லாம்மனங்
குலையவொ ரெயினக் குலமக னுருவிற்
குறுகிலெவ் விரகங் கொண்டு மொழிந்தவள்
குயமலை குழையத் தழுவிய குகனைக்
குமரனை யென்று நின்று புரக்கவே.

## கலைமகள்

### வேறு

வெண்டா மரைப்பூ வணைந்தபெரு மாட்டியிம்
மேதினி விளங்குகலைகள்
மேவிடத் தானே யுணர்ந்தவ ளுளங்கொள
விருப்புடன் வேண்டினோர்க்குத்
தண்டாம லீயுமியலாள் புலவர் நாவிடைத்
தாவற நிருத்தமிடுவாள்
தகுபரா பரிவாணி தண்டா மரைப்பதம்
தலைமீ துறப்பரவுவாம்

வண்டார் கடம்பார மணியும் பிரான்றெய்வ
வள்ளிகுஞ் சரிமணாளன்
வடியேறு மயிலோடு மயிலேறி நடமாடு
வரதனறு திருமாமுகன்
கண்டாரு மினியதமி ழோங்கிநா ளுஞ்சுவைக்
கவிமாரி பொழியுமண்டூர்க்
கந்தப் பிரான்மிசைக் கூறுசந் தத்தமிழ்க்
கவிநடை விளக்கமுறவே. 5

## அரிகர புத்திரர்

### வேறு

விரைக மழ்ந்துய ராரமும்
மிளிர மார்பினி லாரமும்
விரித ரும்புய வரைகளில்
விலகு றாதெழி லொழுகுசீர்
அரிய பூரணை யாரையும்
அழகு புட்கலை யாயையும்
அணைய வைத்திடு மரிகர
ஐய னாரடி பரவுதும்
கரையி லாவரு ளாழியாம்
கதிரை மாநக ராளியாம்
கவினி லங்குதெய் வானையும்
கனக நூபுர வள்ளியும்
உரமி கும்புய மலைகளில்
உறவ ணைந்தக மகிழுமெம்
உமைதி ருக்குக னார்புகழ்க்
குரிய கவிதை தழைக்கவே. 6

## பகவதி

### வேறு

அரியே றுகைத்தகில லோகமுங் கைதொழு
தடைக்கலம் புகுதநிற்கும்
அம்பிகை யறந்தழைத் தெங்குமொரு தானாகி
அடியவரை யாண்டசக்தி



திரிசூலி மதனவேள் படைமயக் காதவோர்
திறனேறு கன்னிவிமலை
செஞ்சடில முடிதாங்கி நின்றபக வதிசரண்
சிந்தையி னினைந்துதொழுவாம்
வரியேறு முழுவையுரி போர்த்தவர னார்க்குமுன்
மந்திரப் பொருளுரைத்து
மலைகடொறு மாடல்க ணிகழ்த்திதணி மாமலை
மகிழ்ந்தவடி வேன்மதலையைத்
தெரியாத தத்துவங் கொண்டகுரு தேசிகத்
தெய்வக் குழந்தைவடிவைத்
தில்லைமண் டூரினிலு வந்துவிளை யாடிவரு
சேயினைக் காக்கவென்றே. 7

## காளி

தில்லைநட மேவிசிவ னோடுமுட னாடிய
திருக்குமரி காளிநீலி
திரிலோக மும்புரந் ததர்மங் களைந்திடுந்
திரிசூலி சிந்தாமணி
எல்லையறு வீரிகலை யூர்தியிள வேய்புரையு
மெண்டோளி சாமுண்டியின்
எழில்கொணூ புரமரற் றும்மிணைக் கழல்களெம்
மிதயகம லத்தில்வைப்பாம்
சொல்லையுழ வோர்வயல்க டோறுநித் திலமலைகள்
தோன்றுமியல் போற்குவிக்கத்
துங்கமுறு மம்பிபல வணியணிய தாகநீர்த்
துறைகளிடை துன்னிமேவ
எல்லையறு பொற்பொதிக ளோடுவணி கர்க்குழூஉ
ஏகிவிலை பேசிநெல்லை
ஏற்றுகம் பலைககன மேறுமண் டூருறையு
மிளமுருகனைக் காக்கவே. 8

## ஆதித்தர்

மேதினியி லந்தகா ரப்படல விருளகல
வேதிரைக் கடலொலிக்க
விண்ணுமண் ணும்பண்ணி சைத்துப் பராவகுண
வெற்பிடை விளங்கியயன

வீதிவயி னேழுபரி சேர்ந்ததனி யாழிரத
மீதுவரு மாசறுசுடர்
மேவும் பதங்கர்பொற் பாதங்கள் துணையென்ன
வேண்டியஞ் சலிசெய்குவாம்
சோதியுறு மிலைமுகப் பைம்பூண் டிருக்கரந்
தோன்றபுன் முறுவலித்துத்
தோகையர்க ளிருபுறந் தோயமர கதநிறத்
தோகைமயி லூருமுருகன்
நீதிவழு வானெறியி னோடுவறி யார்மகிழ
நித்தமு மளிக்குமியலோர்
நிலவுமண் டூரிலுறை சரவணக் கடவுளை
நிதமும் புரக்கவென்றே. 9

## முப்பத்து மூவர்

பொன்னார மார்பிற் றுலங்குவசு வெண்மரும்
புரையிலாச் சடைமுடித்த
புத்தேளி ராறிருவ ராதவ ருருத்திரப்
புங்கவர்கள் பன்னொருவரும்
தன்னேரி லாததேவர்க் குரிமை யானசீர்த்
தகைமருத் துவரிருவரும்
தண்ணளியி னாலினிது காக்கவென் றவர்திருச்
சரணமா மலர்பரவுவாம்
பன்னாக முதுகுநெளி யப்பதந் தூக்கிநர்த்
தனமாடு பரமனருளும்
பாவையர் களிக்கமயி லேறிய பரப்பிரம
பன்னிருக ரக்குமரவேள்
நன்னாவ லர்க்குமொரு நாவலவ னானவன்
ஞானசம் பந்தமுதல்வன்
நனிவளங் கொண்டமண் டூருறையு மறுமுகன்
நம்புமடி யார்பரனையே. 10

# 2. செங்கீரைப் பருவம்

மந்தர வரைபுரை யுந்திரு மார்பிடை
வண்டார் நின்றாட
மல்லிகை முல்லை மணங்கம ழுஞ்செழு
மந்தாரஞ் சாரத்



சுந்தர நிறைவத னம்படு குஞ்சிசு
ருண்டுசு ருண்டாடத்
தொல்லைவ ரந்தொலை யுங்கடை நாள்வந்
துற்றதெ னச்சூரன்
சிந்தைத ளர்ந்துப யந்துறு மின்னல்தெ
ரிந்துநி தம்வாடத்
திங்களை நிகர்முக மண்டில மெங்குஞ்
சிறுவியர் முத்தாரச்
செந்தமி ழோங்கவ ரந்தரு செல்வா
செங்கோ செங்கீரை
செந்நெல்வ ளம்பெறு மண்டூ ரையா
செங்கோ செங்கீரை. 11

கலகம் புரிதரு மசுரன் கொடுமையில்
கந்தா நொந்தாமே
கருணைக் கடலென வருமற் புதமுரு
காவா நீயென்றே
உலகந் துயருற வுளநைந் தமரரும்
உன்பா தஞ்சேர
உயருந் தவமுனி வரருஞ் சரணென
ஒன்றாய் நின்றார்பார்
இலகும் படியற நெறியெங் கணுமினி
இன்றே சென்றாளாய்
இவர்தம் துயர்களை வதுநின் கடமைய
தல்லா லிங்கார்சொல்
திலகஞ் சிறுநறு நுதலிற் றிகழநீ
செங்கோ செங்கீரை
சிவனுங் கலைவள பதிசேர் குழகா
செங்கோ செங்கீரை. 12

## வேறு

கருவுற்ற புயல்விண் டலத்திற் றவழ்ந்திடக்
கால்புடைத் தோங்குவரையிற்
கவசந் தரித்தன்ன உய்த்திட மழைத்தாரை
கான்றுபே ரருவியாக

மருவுற்ற தண்டலைக் கூடாக ஓடிமா
மலர்மணமெ லாமளைந்து
வளியினால் வீழ்கனிக ளோடுமகி ழூரமும்
வாரியிரு கரைமருங்கும்
பெருகுற்ற நதியினொடு மாமா வுகுத்தபால்
பெட்பொடுக லக்கவோடிப்
பெருவரைக் காடென்ன வளர்கருப் பங்கழி
பிழிந்து சாறுகலந்து
திரையுற்ற சங்கமத் தாடுமண் டூரனே
செங்கீரை யாடியருளே
திருவருள்பொ ழிந்துலகை யாளுமுரு கையனே
செங்கீரை யாடியருளே. 13

அஞ்சுதீ வினையினி லழுந்தியன வரதநல்
லாறுகா ணாதுமுன்னம்
ஐயநின் னருணெறி யறிந்துய்ந்திலேன் மெய்ம்மை
அறிவிழந்தே னளவிலாப்
பஞ்சபா வங்கள்செய் தேமகிழ்ந் தேனிதன்
பயனைஇன் றேஉணர்ந்தேன்
பையரவ டர்க்குமயில் வாகனத் தெந்தையிப்
பவ்வங் கடப்பதற்குத்
தஞ்சமாய் நின்கழ லடைதனன் றெவருமொரு
தரமுனது பதியடைந்தாற்
சஞ்சல மகன்றுசம் பத்துடன் குலவிநற்
சாயுச்ய மடைவரன்றோ
செஞ்சொலா ரும்பண்ணி சைக்குமண் டூரனே
செங்கீரை யாடியருளே
திருவருள் பொழிந்துலகை யாளுமுரு கையனே
செங்கீரை யாடியருளே. 14

மலைவளம் பெறுகண்டி மாநகர் பிடிக்கவென
வந்தயோண்ஸ் ரன்தளபதி
வலியபடை வீரரொடு வழியிலுள வுனதுபதி
வந்துபா சறையமைத்துக்
கொலைதனக் கஞ்சாது குறுகுமிரு கங்களைக்
கொன்றுமலை போற்குவித்துன்
கோயிலையு மதியா தசுத்தப் படுத்தவக்
கோயிலதி காரியுள்ளம்



நிலைதளர்ந் துனையண்டி முறையிடவு மன்றுநடு
நிசியில்குள வித்திரளெலாம்
நீள்வனமி ருந்துவந் தூறுசெய் திடவுமவர்
நெஞ்சங் கலங்கியோடிச்
செலவரந் தந்தாண்ட தில்லைமண் டூரனே
செங்கீரை யாடியருளே
திருவருள் பொழிந்துலகை யாளுமுரு கையனே
செங்கீரை யாடியருளே. 15

கல்லென விரங்குபல் லியமுழங் கத்தொண்டர்
கைகுவித் தரகரவெனக்
கட்புன லுகுத்துபூ தூளியை நனைத்திடக்
கான்முளைகை ஏந்திமடவார்
அல்லிருட் போதுதா ளொன்றிலிரு பங்கய
மலர்ந்துதேன் சிந்துவதென
அணிமாட மீதுமரு கிலுமார்ந்து செறிதர
அருக்கரொரு கோடிநின்று
எல்பரப் புவதென்ன கப்பூர தீபங்க
ளேந்திநின் னடியர்பலரும்
எங்கணுநெ ருங்களூ னத்தெதிர்கொள் மாயைபோல்
இருளகல மானமேறித்
தில்லைமண் டூர்வீதி பவனிவரு முருகனே
செங்கீரை யாடியருளே
திருவருள் பொழிந்துலகை யாளுமுரு கையனே
செங்கீரை யாடியருளே. 16

பன்னவரி தானசா கரசங்க மத்துளே
பக்தகோ டிகளிறங்கிப்
பம்பைதா ரகைசங்கு வாச்சியமு ழக்கபண்
பாடவர கரவென்னவே
அன்னநடை மங்கையர்கள் கொங்கைமுகி ழும்மவர்கள்
அம்பனைய திருவிழிகளும்
அருவியிற் படுதல்கண் டுள்ளுடைந் தரவிந்த
மப்பினுள் மூழ்ககயல்கள்
நன்னீரி னுட்புகுந் தோடகரை நின்றுபல
நறுமலர்க் கொம்பர்துவளும்
நடைபயில இடைகண்டு சைவலங் குழலோடு
நட்பாட நீராடவே

சென்னெறி படைத்துவளர் தில்லைமண் டூரனே
செங்கீரை யாடியருளே
திருவருள் பொழிந்துலகை யாளுமுரு கையனே
செங்கீரை யாடியருளே. 17

மங்கையர் தினங்குளித் தாடுதலி னாலவர்
மனங்கொண் டணிந்தசாந்தும்
மணமுறு நரந்தமும் போர்த்துமா மாயையுள்
மயங்குமுல கினையொக்கவும்
கங்குல்நீ ராடவரு வோர்க்குமொளி காட்டுநற்
கதிர்மணி விளக்கமுறவும்
கண்விழித் தாம்பல்நறை சிந்தவும் நீரினிற்
கவினசந் திரபிம்பமும்
மங்குலிடை யிடைபட விசும்புதா ரகைசூழ
மதியினொடு கீழிறங்கி
வந்துபடி தரிசித்த தொக்கவுஞ் சீர்த்திகள்
வயங்குதீர்த் தத்தாவணித்
திங்கள்நிறை மதியில்நீ ராடுமண் டூரனே
செங்கீரை யாடியருளே
திருவருள் பொழிந்துலகை யாளுமுரு கையனே
செங்கீரை யாடியருளே. 18

வித்திய பொலிந்துபன் னூறென விளைந்துமக
மேருகிரி யிற்பிறங்க
மேவுசெந் நெற்கதி ரறுத்துக் குயிற்றிநல்
வேளையிற் பகடுபூட்டிப்
பத்தியொடு களநடத் திப்பாடி நாவல்லை
பதடிநீக் கித்தெரித்துப்
பார்மகட் பரவியிற் சேமித்து மள்ளர்தம்
பசிநினை விழந்துகூடி
மத்தள மடித்துகைத் தாளங்கள் கொட்டிமகிழ்
வாகநா டகநடித்தும்
மாசிலிதி காசம் புராணங்க ளாய்ந்துமுயர்
வானமாண் பொருள்தேரவும்
சித்திநித மீந்திடுந் தில்லைமண் டூரனே
செங்கீரை யாடியருளே
திருவருள் பொழிந்துலகை யாளுமுரு கையனே
செங்கீரை யாடியருளே. 19



உன்மகிமை யறியாத கசடர்பலர் உலகினிடை
உன்மத்த ராகவாழ்ந்து
உண்டுடுத் துத்தனஞ் சேர்க்கவென் றேபிறப்
புற்றதென் றெண்ணிநிதமும்
மன்னுமற நெறிவிலகு வார்பஞ்ச பாவம்
மனங்கொண்டு செய்வர்பெரிய
மதுமயக் குற்றவ ரெனப்பொருட் குப்பையில்
மயங்கிவா ணாளிலுனது
சன்னிதி யடைந்துநெஞ் சுருகாது மந்திர
சடாட்சரத் தைப்பழித்துச்
சான்றோரை நிந்தித்து வாழ்ந்துமுடி வில்தமது
தவறுகளெ லாமுணர்ந்து
சென்னியால் நின்பதம் போற்றஅருள் செய்குகா
செங்கீரை யாடியருளே
திருவருள் பொழிந்துலகை யாளுமுரு கையனே
செங்கீரை யாடியருளே. 20

## 3. தாலப் பருவம்

### வேறு

தினகர னுதயஞ் செய்திடி லாம்பல்
தேசே சோராதோ
திகழுன தழகில் அசுரர்க ளிதயம்
தேயா தேபோமோ
மனமகிழ் வுறவம் பங்கய மெழிலாய்
மாணா பூவாதோ
மகபதி முதலா மும்பர்கள் வதனம்
மலரா தேபோமோ
வனமுறு கூகை கண்ணொளி யிலதால்
வரவே கூசாதோ
மயலுறு மசுர குலமுனை நாடி
வரவே கூசாரோ
தனமட வுறுமீன் தந்திட வந்தார்
தாலோ தாலேலோ
தமிழ்வள முறுநற் பதிவரு குமரா
தாலோ தாலேலோ. 21

கடகரி முகனுங் கந்துக மாடக்
காணா தேவாடிக்
கதிருறு வதனங் கன்றிட வருதல்
காணாய் காணாயே
படவர வணையின் பாய லொரீஇப்
பாலா மாலோனும்
பசுபதி முதலும் வந்தன ரேற்றப்
பாராய் சீராளா
இடருற அவுணர் இன்ன லிழைத்தார்
ஈசா காவாயே
எனசுர ரோல மிட்டுள நைந்தார்
ஏகா வேகாயே
தடவரை மிசைவண் டமிழ்விதை யிட்டாய்
தாலோ தாலேலோ
தமிழ்வள முறுநற் பதிவரு குமரா
தாலோ தாலேலோ. 22

அரைவட மொளிரக் கிண்கிணி யோடு
மாரச் சேறாடி
அருளொளி பரவுஞ் சுந்தர வதன
மாரச் சிறுமூரல்
பொருவறு மகரக் குழைசெவி யாடப்
போனா லேகாணும்
புவியுறு மடவார் புங்கவ மாதர்
போதார் காரோதி
வரையர மகளிர் கண்ணிணை யூறால்
வாழ்வே வாடாயோ
மரகத நிறமா மங்கைத னிதயம்
வாடா தேபோமோ
சரவண வாவி தங்கிய குமரா
தாலோ தாலேலோ
தமிழ்வள முறுநற் பதிவரு முருகா
தாலோ தாலேலோ. 23

**வேறு**

கதிர்முற் றியநெற் கழனிகளிற்
களிகொள் கருங்கைக் காராளர்



கணிசாற் றியநல் லோரையினிற்
கரும்பொற் கூர்ங்கூன் கத்திகொடு
அதிரக் கதிர்கால் தடியமுனம்
ஆங்கே யூடல் கொண்டபெடை
அஞ்சி அயல்சார் ஆன்றொண்டை
ஆரத் தழுவச் சங்கீன்ற
கதிர்கால் முத்தம் கண்டுநகை
காட்டுந் தில்லை மண்டூரா
கனக வரைமா மகள்மடியில்
கனியும் மழலை மொழிபாடிச்
சதிர்கொள் நடனம் புரியுமென
தையா தாலோ தாலேலோ
சசிமங் கல்யங் காத்தருள்சுந்
தரனே தாலோ தாலேலோ. 24

தெய்வம் முனியிற் செய்தவம்
தேயு மென்பார் சிறுபிழையும்
செய்யா திருக்கச் செவ்வதனந்
தேசு குன்றிச் சினமெழிலிவ்
வையந் தழைக்க வழியுண்டோ
வானோர் பிழைக்க வகையுண்டோ
மலர்வாய் விண்டு மகிழ்ந்தினிய
மழலை பொழியா யோகழலைத்
தைவந் திடவுந் தணியாயேற்
தமிழ்ப்பண் ணிசைத்துத் தாலாட்டில்
தணியா திருக்க வியதுண்டோ
சமயா தீதப் பழம்பொருளாஞ்
சைவங் கமழும் மண்டூரின்
தலைவா தாலோ தாலேலோ
சசிமங் கல்யங் காத்தருள்சுந்
தரனே தாலோ தாலேலோ. 25

நன்மங் கலநா ளசுரமட
நங்கை மின்னார் புனைந்தசெழும்
நவமா மணிக ளிழைத்ததிரு
நாணத் தனையு மற்றுவிழ

நின்மங் கலமா மலரடியே
நெஞ்சி லிருத்துஞ் சுரமடவார்
நீள்பொற் றாலி ஒளிகால
நெடுவேல் தொட்ட படைவீரா
சென்மங் களிலு யர்ந்தபெருந்
தேவர்க் கும்மிச் சோதனைகள்
செய்து போதப் பயனுதவுஞ்
செல்வா உந்தன் செய்கையெலாம்
வன்மந் தானோ மாணெறியோ
மலராய் தாலோ தாலேலோ
வனசங் கமழும் மண்டூரின்
வாழ்வே தாலோ தாலேலோ. 26

**வேறு**

கனதன வரைமட வரிவைய ருனதெழில்
காணா சீர்பாடிக்
கயல்நெடு விழிகுழை படவிடை நெளிவொடு
கைமே லேயாட
இனவளை கலகல வெனமணி வடமுட
னேடார் தாராட
இசையொடு பரிபுர வொலியெழ நடமிட
லீசா காணாயே
சினவயில் கரமுறு மறுவறு மறுமுக
சேலே கஞ்சாருந்
திலகந னுதலொளிர் களிறடு மரியருள்
தேனேர் மொழியார்தம்
தனகள பமழகெ முதமகிழ் சரவண
தாலோ தாலேலோ
தவர்களி யொடுவரு திருநக ரறுமுக
தாலோ தாலேலோ. 27

**வேறு**

இலகும் பரிதியி னொளியினு மொளிருறு
மேகா வலியாடும்
இபமா முகனொடு மரைஞா ணணியுட
னிறையே போனாயோ



பலரும் மறுகினி லுனதணி கலவிலை
பாரார் கூறாரோ
பதுமப் பதமிசை துகள்பட வெளிசெல
பானேர் நிலவூறும்
திலகம் பெறுமுன தழகிய வதனம்
சேயே வேராதோ
திகழுங் கனதன வறுமட மகளிர்
தேடார் வாடாரோ
சலமுந் தடைகரை வளநகர் வருகுக
தாலோ தாலேலோ
சமரம் புரிதரு படையின ததிபதி
தாலோ தாலேலோ. 28

**வேறு**

அண்டர் குனித்தன ரவலக் கடலுக்
கப்பா லானோமென்
றருமெய்ச் சுருதிக ளதிரத் துந்துமி
யார்த்தன வார்த்தனபார்
கொண்டு பணிந்தனர் குழைபொற் கடகங்
கோலம் புனைகென்று
குறுகிக் கின்னரர் மதுரப் பண்ணொடு
குழலொத் திசைபாடத்
தொண்டர் துதித்தனர் உபயக் கழலிற்
றூய மலர்தூவி
சுலவும் மசுரத் திமிரங் கெடவரு
சோதீ பாராயே
தண்டலை சுற்றிய மண்டூர் முருகா
தாலோ தாலேலோ
தழையும் புகழுறு பதியற் புதமுதல்
தாலோ தாலேலோ. 29

**வேறு**

சிந்தைநி னைந்துருகி லுந்தன லுட்கடலைச்
சேரா தாராரே
செங்கம லப்பதமே தஞ்சமெ னப்பரவித்
தேனார் பாமாரி

வந்துபொ ழிந்தனர்பார் செந்தமிழ் வாணரெலாம்
வானோர் வாழ்வேநீ
வம்பவி ழும்மலர்வாய் விண்டுமொ ழிந்தருளா
வாறே தோதேரேன்
நைந்தனையோ பசியால் தந்தைமு னிந்தனரோ
நால்வா யானோடும்
நண்ணிய மறுகினிடை நஞ்சுற நோக்கினர்தாம்
நாதா வாராரோ
சந்தவ ரைக்கயிலை எந்தைதி ருக்குமரா
தாலோ தாலேலோ
சங்குமு ழங்குபதி தங்குதி ருக்குமரா
தாலோ தாலேலோ. 30

## 4. சப்பாணிப் பருவம்

### வேறு

உரமருவு வெள்ளைவா ரணமூர் புரந்தரனு
வந்துதவு பிடியும்பலை
ஓவற வணைத்தகன கத்தறிப் புயமசைந்
துலையாது பைங்கடம்புச்
சரமுமார் பூடுநிலை குலையாது நிறைகலைச்
சந்த்ரமுக மண்டலத்தே
தமனியச் சுட்டியசை யாதுமக ரக்குழை
தழைசெவியி லசைவுறாது
சிரமசைவு றாதுவியர் முத்துமுதி ராதுநின்
செவ்வாய் சிரிப்பறாது
திகழ்கங்க ணங்களிலி ழைத்தநித் திலநிலஞ்
சிந்தாது சிகியேறியந்
தரமருவு பண்ணவர்க் கருள்செங் கரத்தினாற்
சப்பாணி கொட்டியருளே
தங்குபுகழ் மண்டூர் அமர்ந்தசர வணபவா
சப்பாணி கொட்டியருளே. 31

தித்தித்த சாறுள்ள மட்டுஞ் சுவைத்ததன்
தீஞ்சுவை நுகர்ந்தபின்னர்ச்
செங்கருப் பங்கழியை வீசுமியல் போற்றனஞ்
சேர்த்திடுங் கணிகையர்நலம்



நத்தித் தனக்குவை யழித்துமெய்ஞ் ஞானமும்
நன்னெறியை யோருமியல்பும்
நல்லோ ரிணக்கமு மிழந்துலைந் தருணகிரி
நாதனுனையே தஞ்சமாய்ப்
பத்தித் தனிச்சிந்தை யோடடைய உயர்நிலைப்
பண்பட்ட உள்ளமதிலே
பருமணி யெனத்திருப் புகழ்ஊற் றெடுத்துஇப்
பாரெலாம் பரவியோடச்
சத்தித் தடங்கருணை யீந்துரட் சித்தவா
சப்பாணி கொட்டியருளே
தங்குபுகழ் மண்டூர் அமர்ந்தசர வணபவா
சப்பாணி கொட்டியருளே. 32

விண்ணார் கரங்குவித் துனதுபெரு ஞாட்பினில்
விளைந்ததிறல் வெற்றிகண்டு
மேவுகளி கொண்டுடல் குலுங்கக் கரங்களால்
வேலையொலி யெனமுழக்கக்
கண்ணாயி ரத்தனுங் கண்பெற்ற சிதடனிற்
கரையிலா உவகைபூத்துக்
கழலடி பணிந்துநின் கருணைவெள் ளத்திற்
கலந்தமிழ உனதுபாதம்
நண்ணா ருடற்களங் கண்டுகழு காதியூண்
நசையா லிறக்கைதட்ட
நரிபேரி கைத்தொனி யெழுப்பவேல் விட்டநின்
நளினக் கரங்களாலே
தண்ணார் கடம்பார மணியுமுரு கேசனே
சப்பாணி கொட்டியருளே
தங்குபுகழ் மண்டூர் அமர்ந்தசர வணபவா
சப்பாணி கொட்டியருளே. 33

கரையிலா நின்றநின் காட்சியைக் கண்டுதான்
கண்பெற்ற பயனடையநற்
கார்த்திகைத் திங்களிற் கார்த்திகைத் திவசங்
கருத்தொக்க விரதமாற்றிப்
புரையிலாப் பூவடி யருச்சித்த முசுகுந்த
பூபதிக் கன்புகூர்ந்து
பொன்னொளிசெய் குக்குடக் கொடிநிழற் றச்சிகிப்
புள்ளேறி லக்கவீரர்

திரையுலாங் கடலொக்க வேசூழ வந்துநின்
 தெரிசனங் காட்டியன்னோன்
 திக்கெங்கு மிசைபடத் திகழ்தார காகணத்
 தேதிங்க ளெனவிளங்கத்
தரையெலா மொருகுடைக் கீழாள வைத்தவா
 சப்பாணி கொட்டியருளே
 தங்குபுகழ் மண்டூர் அமர்ந்தசர வணபவா
 சப்பாணி கொட்டியருளே. 34

அண்டகோ ளகையெலா மசையவா னோங்கியெழும்
 அட்டமா மலைகளசைய
 அரியமா மேருவரை யசையபா தலமசைய
 அசையகாசினி விசும்பிற்
கொண்டலோ டிரவிமதி யசையதா ரகையெலாங்
 குலையமா திரநடுங்கக்
 கொட்குமா நிலவுலகு தாங்குசே டன்வலிமை
 குன்றமா வடவைசிதற
மண்டுபூ தூளிவிண் படரவே மூழியும்
 வாரியலை வீசவலிய
 மஞ்ஞையுரு வாகவடல் செய்யவரு மசுரனின்
 வலிகெடுத் தவர்குடிக்கோர்
சண்டமா ருதமென்ன வந்தசர வணபவா
 சப்பாணி கொட்டியருளே
 தங்குபுகழ் மண்டூர் அமர்ந்தசர வணபவா
 சப்பாணி கொட்டியருளே. 35

சித்தர்முனி வோர்துதிசெய் தேற்றிடக் களிநடந்
 தேவரம்பை யர்களாடத்
 திருமாதி னோடுதிரு மாலவன் புடையுறீஇத்
 திகழ்பாஞ்ச சன்னியத்தைச்
சித்தமகிழ் வெல்லைதெரி விப்பதென வூதபுத்
 தேளிர்துந் துபிமுழக்கச்
 செஞ்சடா முடியசைய வந்துசங் கரியுடன்
 சிவபிரா னாசிகூறப்
பத்திமையி னாற்கரங் கூப்பிவிழி நீருகப்
 பதிகங்கள் பாடியாடிப்
 பால்மதி யெழக்கண்ட பரவையென அடியர்நின்
 பாலடைந் தார்ப்பரித்தார்



சத்திவடி வேலனே நீயுமுன் செங்கையாற்
 சப்பாணி கொட்டியருளே
 தங்குபுகழ் மண்டூர் அமர்ந்தசர வணபவா
 சப்பாணி கொட்டியருளே. 36

திங்கள்தண் ணமுதுநில வெங்கும் விரிக்கதந்
 தேவினுக் குளமகிழ்ந்து
 செங்குமுத முகைவிண்டு தேனுகுக் கச்சலந்
 தீப்பட்ட தெனவெரீஇ
அங்கலம ரும்மடப் பார்ப்பினை யிறக்கையுள்
 அணைத்துமன மாற்றியினிய
 ஆறுதல ளிக்குநா ரைகள்வாழ் தடஞ்சுனை
 அருத்தியொட டைந்துதொண்டர்
கொங்கறா மலர்பறித் துன்பதம் பரவியே
 கூய்முறையிடக் கசிந்து
 குழவிக் கிரங்குநற் றாயென்ன உள்ளங்
 குழைந்தரு ளளித்துநிதமும்
தங்குபுகழ் மண்டூர் அமர்ந்தசர வணபவா
 சப்பாணி கொட்டியருளே
 சகமாயை யடுஞான சக்திவடி வேலவா
 சப்பாணி கொட்டியருளே. 37

மணிகிளர் வரைத்தட மிசைப்பொற் பிறங்கலென
 மஞ்ஞைமே லூர்ந்துபவனி
 வருதல்கண் ணுற்றுவா ரணமியம்பப் பழன
 வாய்மடக் குருகுநரல
அணிமரமெ லாங்குயிலி சைக்கநின் னடியர்வாய்
 அரகரா வென்றரற்ற
 அரியநன் னீர்ப்பொய்கை மலர்விரிக் கப்பல்
 அளிக்குலம் றீங்கரிக்கப்
பனிமலர் சொரிந்துபூம் பொழில்நன் மணத்தினைப்
 பரிமளித் திடவால்வளை
 பம்பமங் கலமொலிக் கத்திருப் பாவிசை
 பரந்துவா னோங்கஉந்தன்
தணிவிலா அருளமுத ளிக்குமண் டூரனே
 சப்பாணி கொட்டியருளே
 சகமாயை யடுஞான சக்திவடி வேலனே
 சப்பாணி கொட்டியருளே. 38

### வேறு

விலகரு மருளொளி பரவுறு முகவர
விந்தம லர்ந்தார
விரைபொதி துவரித ழருநறை யுகவுரை
விண்டுமொ ழிந்தேயும்
பலமணி யொடுதர ளமுமொளிர் தமனிய
பைங்கட கப்பூணும்
பயிலிய வளையணி களுமொலி யிடவுயர்
பன்னிரு கையாலும்
மலைதரு மடமயி லொடுசெவி லியருள
மட்டில்க ளிப்பாக
மழவிடை யிறைமொழி மழலையில் மகிழ்வுற
வஞ்சம னச்சூரக்
குலமடு மடலரி யெனவரு குமரநீ
கொட்டுக சப்பாணி
குளிர்புனல் நதிவள முறுபதி வதிகுக
கொட்டுக சப்பாணி. 39

அரவித ழியொடிள மதியமு மணியுய
ரைந்துமு கத்தானின்
அழகுறு நுதல்விழி யெழுபொறி யழலினி
லச்சமு றத்தேவர்
திரையெறி கனைகடல் சுவறிட வடவையி
தென்றுப தைத்தாரும்
திகிலுற வெழுபுவ னமுமன லுறுமிழு
தென்னவெ ருண்டோட
வரநதி யிடையறு வனசமீ தெழிலொடு
வந்துபி றந்தாயே
மனமயர் வொடுநிலை தளர்வுறு சுரருனை
வந்துப ணிந்தாரே
குரவலர் தொடையணி சரவண பவகுக
கொட்டுக சப்பாணி
குருகின வொலிகெழு திருநக ரறுமுக
கொட்டுக சப்பாணி. 40



## 5. முத்தப் பருவம்

### வேறு

பொங்குந் தரங்கக் கடலில்வலம்
புரிமுத் திப்பி தருமுத்தம்
புழைவேய் முத்தம் பூகத்தே
பொருந்து முத்தம் மீன்முத்தம்
மங்குல் முத்தம் கரியேன
மருப்பு முத்த மராமுத்தம்
மற்றும் பலவா முத்தமெலாம்
முத்த மாமோ ஒளியென்றுந்
தங்கா முத்தந் தேய்முத்தந்
தரணி தன்னில் மெய்ப்பொருளைச்
சணமுங் கருதா ரணிமுத்தந்
தகுதி மதிக்கப் பெறுமுத்தம்
சங்கம் போற்றும் புலவநின
தருளார் முத்தந் தருகவே
சந்தப் பொழில்சூழ் மண்டூரின்
தலைவ முத்தந் தருகவே. 41

அகந்தை கொண்ட அயன்மால்முன்
அழலாய் நின்ற அத்தனது
அடியைத் தேடி நிலங்கீண்ட
அந்தக் குலத்திற் பிறந்ததனால்
இகந்து வெறுத்தேன் ஏனமருப்
பெழிலார் முத்த மீந்தாலும்
இருநீர் வாழும் வளைமீனம்
இப்பி நந்து முத்தமெலாம்
முகந்து கடலைக் குடித்தகுறு
முனிவ னெச்சில் படுமுத்தம்
முருகு மாறா நின்செவ்வாய்
முத்திற் கிவைதா நிகராமோ
சகந்த ழைக்க வந்தசடாட்
சரநீ முத்தந் தருகவே
சந்தப் பொழில்சூழ் மண்டூரின்
தலைவ முத்தந் தருகவே. 42

நெஞ்சங் கரந்த கய்வர்பெரும்
நிதியை யீந்து நீடுபுகழ்
நிலவக் கருதி லப்பொருளை
நேரு மறிஞர் உண்டேகொல்
நஞ்சங் கரந்த பைங்கணரா
நன்னீர் வாழுங் கொடியகரா
நவையில் முத்த மீந்தாலும்
நான்வேண் டேனுன் செய்யதிருக்
கஞ்சம் புரையும் வாய்முத்தங்
கருணை கனிந்த நறுமுத்தம்
கதிர்கால் முத்தம் பெற்றோர்நற்
கதிகாண் முத்தங் கழலிணையே
தஞ்சம் புகுந்தா ருய்யவரு
சாமி முத்தந் தருகவே
சந்தப் பொழில்சூழ் மண்டூரின்
தலைவ முத்தந் தருகவே. 43

செழிய னவையில் மதவாதஞ்
செய்த அமணக் கையுருளந்
திகிலே றச்செஞ் சைவநெறி
சிறந்து மிளிரத் தேவாரம்
பொழியுஞ் சமயக் குருவேமெய்ப்
பொருளே பிறவிக் கடல்தாண்டும்
புணையே யன்ப ருள்ளுறையும்
புலமே புலமைக் கொருமுதலே
விழிநீர் முத்தம் பொருணூலை
விரித்த உரைகள் பலவுள்ளும்
மேன்மை துலங்கத் தெரித்தொன்றை
விளக்கு முத்தம் இன்முத்தம்
வழியும் பவளச் செவ்வாயால்
வந்தோர் முத்தந் தருகவே
மருவார் பொழில்சூழ் மண்டூரின்
வாழ்வே முத்தந் தருகவே. 44

வானங் குறையா மழையுதவ
வளங்கொள் பழனங் கழைபுரைய
வளருஞ் சாலி முத்தீன
மக்கள் மகிழ மடியமிடி



தானம் புரிவா மென்றெவருந்
தரளக் குவையோ டிருந்தாலும்
தாழ்ந்து இரப்போர் இல்லாத
தகைசால் தில்லை மண்டூரா
மோனஞ் சிதையா யோகநெறி
முயன்று காத்த முனிவோரும்
முழுதுங் காண வரியாயுன்
முத்தம் வேண்டா ராரேகொல்
ஞானப் பாலுண் செவ்வாயால்
நாடி முத்தந் தருகவே
ஞானங் கமழுங் குழல்மடவார்
நாதா முத்தந் தருகவே. 45

**வேறு**

தழைவி ரிக்குங் கமுகுதிர்க்குந்
தரள முன்றிற் றரையெலாம்
சவிபு னற்பங் கயமிறைக்குந்
தனிம துத்தண் கயமெலாம்
பழமு திர்க்குந் தருவனத்திற்
பருவ ரைத்தண் டரளமேம்
படுவ ளத்த பழனமிக்க
பலன ளிக்க வுழவர்தங்
குழைக டக்கும் விழிமடப்பொற்
கொடிக ளின்பங் குலவிநற்
குதலை மைந்த ரொடுமுயர்த்த
குணநி றைந்து மகிழ்வுறும்
முழவொ லிக்கும் பதிபுரக்கும்
முருக முத்தந் தருகவே
முறுவ லிக்குந் துவருகுக்கும்
முருக முத்தந் தருகவே. 46

புலன டக்கு நெறிபடைத்துப்
பொருகு றும்பு ளொருவியே
புரைத பச்செங் கழல்பொருந்தப்
புரித வத்து முனிவரின்

நிலைகு லைத்து மதிமயக்கி
நிறைய ழிக்கு மதனவேள்
நெடுப டைக்கொர் தனுவளைக்க
நெகிழ்க ருப்பி லுறைதரும்
விலைக திக்குந் தரளமிக்க
வெயில்ப ரக்கு மெனினும்வெவ்
வினைகெ டுத்து மொளிசிறக்கும்
விலையில் முத்துக் கிணைகொலோ
மலைப ரித்த வரிதனக்கு
மருக முத்தந் தருகவே
வயல்செ ழிக்கும் பதிபுரக்கும்
வரத முத்தந் தருகவே. 47

**வேறு**

குரவரடி போற்றிமெய்ந் நூற்பொருளை முறையினிற்
கொள்ளா தொளித்திருந்து
கூறுமுரை செவிமடுப் பாருறுதி யாயின்னல்
கொண்டலைவ ரெனுமுண்மையைத்
தரணியிடை காட்டவென் றெண்ணியோ முன்னையுத்
தரகோச மங்கைதனிலே
சங்கரிக் கெம்பிரா னுபதேச மருளபூந்
தழைசாரு மளகமீது
முரலுமளி யுருவொடும றைந்துகேட் டரவணியு
முதல்வனிடு சாபமதனால்
முந்நீர் புகுந்துமீ னாயினா யுன்னாடல்
முழுதுமுல குய்யவன்றோ
குரவமல ராரமணி குமரநின் பவளவாய்க்
குளிர்முத்த முண்ணவருளே
கொங்கார் பொழிற்றில்லை மண்டூர நினதுவாய்க்
குளிர்முத்த முண்ணவருளே. 48

கழைமுத்து வெந்தீயி னாற்றெறுங் கறைபடுங்
கருமுகி லிடித்துமின்னல்
கான்றமுத்தம் நின்கை வேலுக் குடைந்துயர்
ககனத் தொளித்தமுத்தம்



பழனத்தில் விளைநன்னெல் முத்தங் களத்திடைப்
பகடுகால் பட்டுடைந்த
பரல்முத்த மீன முத்தம்புலால் கமழுநின்
பங்கே ருகச்செய்யவாய்
விளைமுத்த மேமுத்த மாமுத்த ருந்தினம்
விழைமுத்த முமைகளித்து
வேண்டுமுத் தம்விலைம திக்கவரி தானநன்
மேன்மைபெறு முத்தமருளாம்
மழைநித்த லும்பொழியு மாறுதிரு வதனநின்
வாய்முத்த முண்ணவருளே
மருவார் பொழிற்றில்லை மண்டூர நின்செய்ய
வாய்முத்த முண்ணவருளே. 49

உம்பர்நா ளும்விண் ணிழிந்துநின் பதசரோ
ருகமலர் பணிந்துசெலவென்
றோங்கிவளர் தெங்கின் மிசைக்கவிக் குலநெருங்
குற்றபைங்காய் பறித்துக்
கம்பமா முகனைவந் தனைசெய்வ போற்கருங்
கன்மீது வீசவாங்கண்
கான்றநீத் தம்வயற் கால்வாய் புகுந்திடக்
கன்னல்நற் சுவைகதிக்கும்
இன்பமா வளமோங்கு தில்லைமண் டூரினிலி
ருந்தருளை யீயுமுருகா
இணையிலா முத்தநின் முத்தமே யன்றியிங்
கெம்முத்த மும்முத்தமோ
வம்பவிழு மலர்கடம் பாரனே நின்செய்ய
வாய்முத்த முண்ணவருளே
வலியபகை யகலவர மருளுமொரு குமரநின்
வாய்முத்த முண்ணவருளே. 50

## 6. வாரானைப் பருவம்

**வேறு**

பரவுஞ் சைவப் பெருநெறியின்
பயனே வருக பழமறையின்
பழமே வருக பரமகுரு
பரனே வருக பலகலைக்கா

கரமே வருக கதியருள்பாற்
கரனே வருக கவுரிதிருக்
கண்ணே வருக கண்ணுதலோன்
கதிரே வருக கருணையொளி
விரவும் மணியே மெய்ஞ்ஞான
விளக்கே வருக களக்கமற
மிளிர்வெண் மதியே வருகவடி
வேலா வருக விரைசாருங்
குரவுந் தழையுந் திருமார்பிற்
குலுங்க வருக நலங்கனிந்து
குலவுந் தில்லை மண்டூர்வாழ்
குமரா வருக வருகவே. 51

என்பே ருவகைப் பெருநிதியே
ஈரேழ் புவனக் கொருமுதலே
என்றுங் குறையா வருட்கடலே
இடும்பை தீர்க்கு மின்னமுதே
அன்பே அன்ப ருள்ளுறையும்
அறிவே அறிவிற் றெளிபொருளே
அருகே வருக அடையலர்கோ
ளரியே வருக அந்தமிலா
இன்பே வருக கதிரைநகர்க்
கிறையே வருக பிறைசூடும்
ஈச னருளே வருகஎம(து)
திதயம் மகிழ வருகநிதம்
உன்பேர் சொல்லித் துதிபாடி
உள்ளங் களிக்க வருகவே
உயர்விண் படரும் பொழில்சூழ்மண்
டூரா வருக வருகவே. 52

காலைக் கதிரின் புன்னகையே
களக்க மில்லா வெண்ணிலவே
கசிந்தெ னிதயக் கல்லுனையே
கரங்கள் நீட்டி யழைத்தாலும்
கோலங் கரந்தா லிங்கெவரைக்
கூவி யழைப்பே னென்பெரிய
குறைகள் சொல்வே னினியமொழி
கொள்வே னந்தோ அதிவிரைவில்



மாலைப் போதும் வந்ததுஎன்
வாழ்வே உன்னைக் காணாது
வாடி நைந்தேன் வருகஇனி
வாரா திருக்க வழக்குண்டோ
சோலைத் தடஞ்சார் மண்டூர்வாழ்
சோதீ வருக வருகவே
துலங்கு மறுமா முகஞானச்
சுடரே வருக வருகவே. 53

சேணார் மரமே யுயர்தூணாச்
செல்லூர் வானே மேற்றிரையாச்
செறிவேய் முத்த மொளிகாலத்
திகழ்வா னிடியே பேரிகையா
வீணா கான மளிபாட
விலங்கு காணப் புல்வெளியே
மேவா டரங்காச் சிகிதோகை
விரித்து நடன மாடவெழிற்
பூணார் முலையா ராங்கேனற்
புனமா டோங்கும் புரைமீது
புள்ளுங் கடியா திருவிழியும்
பொருந்த நோக்கிப் பொலிவிழந்து
நாணா வயர்கா சார்மண்டூர்
நாதா வருக வருகவே
நம்பு மடியார் வினைபோக்கும்
ஞானா திபனே வருகவே. 54

பாடும் புலவ ருள்ளநிலாப்
பாவும் மணியே பரசுதவர்
பக்தி வலையிற் கட்டுண்ணும்
பரனே பெற்றால் நின்பரிசம்
தேடும் பொருளொன் றுண்டாமோ
தேவே தேவர் தெள்ளமுதே
திலகந் தீட்ட வருககழல்
சேர்க்க வருக சேவடிமீ
தாடுங் கனக குண்டலநீ
ளரைஞா ணணிய வருககடம்
பாரம் புனைய வருகதமி
ழரசே வருக பிரசமலர்க்

காடும் புனலுஞ் சூழ்மண்டூர்க்
கந்தா வருக வருகவே
கரிமா முகனுக் கிளையதிருக்
கடம்பா வருக வருகவே. 55

துண்டப் பிறைதோய் சடிலமகேச்
சுரனார் முனிவிற் கழுதாயோ
துங்கக் கரிமா முகமுடைய
துணைவ னுன்னை வைதானோ
தொண்டைக் கனிவாய் வள்ளிமடத்
தோகை யூடற் குலைந்தாயோ
சுருதி முனிவ னளித்தநறுஞ்
சுவைமாங் கனிக்கா யழுதாயோ
பண்டைத் தரும நெறியொருவிப்
பழிபா வங்கள் தலைப்பெய்து
படிமீ துலவுங் கொடுமக்கட்
பதடிக் கிரங்கி நைந்தாயோ
அண்டர்க் கிறையே மண்டூர்வாழ்
அரசே வருக வருகவே
அறுமா முகனே அயிலேந்தும்
அழகே வருக வருகவே. 56

ஊணும் மிசையா துடல்மெலிய
ஒளிர்பொன் மேனி துகள்படிய
உமையாள் தேட உம்பரெலாம்
ஒருங்கு வாட உயர்பயிரப்
பூணும் புனையா தெங்கேதான்
போனாய் வருக புனலாடப்
பூரித் தெழுந்த முலையமுதம்
புசிக்க வருக புலவருனைக்
காணும் படிசெங் கரங்கூப்பிக்
கலுழ்ந்தார் விரைந்து கவலையெலாங்
கடிந்தாட் கொள்ள வருகமலர்க்
கடம்பா வருக படர்ந்துபுகழ்
சேணும் பரவும் மாமண்டூர்ச்
செல்வா வருக வருகவே
சேவுந் தரனா ரீந்தவருட்
செவ்வேள் வருக வருகவே. 57



இல்லே மென்னப் பருவரலோ
டிரக்கு மேழை யுளநோவ
இல்லே மென்னச் செல்வர்பல
ரெறிந்த கொடிய சொல்லம்பும்
வல்லே மென்ன மாண்டகலை
வல்லா ரோடு வழக்காடி
வல்லே யென்னக் கசடரது
வாயூ டெழுந்த வன்மொழியும்
செல்லே யென்னப் பொருளீயுந்
திறலா ரீயச் சென்றேற்றுச்
செல்லே மவர்வா யென்றுநலஞ்
சிதைத்த கயவர் தீமொழியும்
எல்லா மேற்ற செவிகுளிர
இன்பம் பொழிய வருகவே
என்றும் புகழ்சால் மண்டூர்வாழ்
ஈசா வருக வருகவே. 58

**வேறு**

கலகல வெனுமா டகவணி கவினக்
கதிர்மணி வருக வருகவே
கலியுக வரத னெனவரு புலவ
கவிமழை பொழிய வருகவே
மலையொடு மசுரன் பொடிபட வடல்செய்
வலிகெழு மதலை வருகவே
வதனமொ ரறுமா வனசமு மலர
மழலைகள் பொழிய வருகவே
குலவரை யசைய மயிலிவர் குழக
குறுநடை பயில வருகவே
குறுமுனி வரனும் பரவுறு தமிழ்தேர்
குருபர வருக வருகவே
மலர்விரி பொழில்சார் பதிவரு குமர
மகிழ்வொடு வருக வருகவே
மகபதி யருளும் பிடிபுணர் களிறே
மலரடி வருட வருகவே. 59

திரைகடல் சுவற நெடுபடை விடுமா
திறலுறு செழிய வருகவே
சிவபர மறிய மறைபொரு ளருள்செய்
செககுரு வருக வருகவே
சரவண பவவோ மெனுமரு மொழியிற்
றளைபடு முருக வருகவே
தழைவிரி குரவ நறுமல ரசையத்
தமிழ்மொழி பகர வருகவே
விரைசெறி துவர்வா யமுதுக வினைதீர்
விமலநீ வருக வருகவே
விரியிதழ் வனச மலரவ னெழுதும்
விதிகெட வருக வருகவே
கரைபொரு மலைசேர் புனல்வள பதியாய்
கதிதர வருக வருகவே
கருமுகி லனைய மலவிரு ளகலக்
கதிரொளி வருக வருகவே. 60

## 7. அம்புலிப் பருவம்

### வேறு

விண்ணிலீ ரெண்கலையி னோடுநீ மேவலோர்
வெண்பந்து போல்மிளிர்தலால்
வேறுவே றானதா ரகைசூழ லாற்சுனையில்
வெண்கஞ்ச மலர்போறலாற்
கண்ணினீங் காப்பிரபை காட்டலா லிரசதக்
கட்டியே போலொளிர்தலாற்
கங்குலம் போதிலணை யாவிளக் கானதால்
கரமுயர்த் துனையழைத்தான்
மண்ணிலே வந்திவன் மனமகிழ உந்தனது
வடிவினைக் காட்டியுள்ள
மாசகல ஒருவரம் பெற்றுநா டோறுமே
வாழஎண் ணாததென்னே
அண்ணலா மரிமருக னானசர வணனுடன்
அம்புலீ ஆடவாவே
அண்டர்பர வும்புகழ்த் தில்லைமண் டூரனுடன்
அம்புலீ ஆடவாவே. 61



காய்கதிர் மறைந்திருள் கவிந்திடப் பொய்கையிற்
கமலங் குழைந்துவாடக்
காவிமுகை மலரவளி பாவிசைக் கக்கருங்
கடல்முழவ மார்ப்பரிக்கப்
பாயிருள் கடிந்துபாற் கதிர்விரித் தொளிபெறப்
பாரிடமெ லாம்புரக்கும்
பண்ணவனெ னப்பெரு மகந்தை கொண்டிவனையோர்
பாலன்என் றெண்ணினாய்கொல்
சேயென விகழ்ந்ததூ ருடல்கிழித்துச் செய்ய
சேவலும் மயிலுமாகச்
சினவேல் விடுத்தகும ரன்முனிந் தாலுனது
செய்கையென்னா மாகையால்
ஆயனரு திருமருக னான சரவணனுடன்
அம்புலீ ஆடவாவே
அண்டர்பர வும்புகழ்த் தில்லைமண் டூரனுடன்
அம்புலீ ஆடவாவே. 62

பானதியெ னத்தண்ணி லாவிரிப் பாயிவன்
பரிதியொரு கோடியொல்கப்
பதுமவத னத்தொளிப ரப்புமிய லானருட்
பார்வையால் நீயுயர்ந்த
வானவெளி யிற்செல்ல மஞ்ஞைமீ தூர்ந்தகில
மண்டலமு மேயுலவுவான்
மானொன்று கொண்டனை இரண்டுமா னுண்டிவன்
வளர்புய மருங்குமேவத்
தேனமுத தாரைநீ சிந்தஉல கில்மடச்
சேயிழையர் நைவரிவனால்
தேவமட மாதர்நிறை யழிவரீ தெல்லாந்
தெரிந்துநீ யங்குறாது
ஆனைமுக னுக்கிளைஞ னானவறு முகனுடன்
அம்புலீ ஆடவாவே
அண்டர்பர வும்புகழ்த் தில்லைமண் டூரனுடன்
அம்புலீ ஆடவாவே. 63

கரிமுகப் பிள்ளைகயி லாசமீ துறைதரக்
கர்வமுற்றே யவன்றன்
கரமோத கம்புழைக் கைமடற் காதுமா
காத்திரங் கண்டிகழ்ந்தாய்

எரியென முனிந்தவ னிடுங்கொடிய சாபமு
மேற்றுமண் ணவர்கண்ணுறா
திழிஞரி லுலைந்துவிண் ணவர்தொழுது செய்தமுறை
யீட்டிற் கிரங்கியருள
விரிகலை வளர்க்குநா லாந்திவச மேயிதுனை
மேயதனை யுணர்கிலாயோ
வேதப் பெரும்பொருள்வி னாயகற் கிளைஞனிவ்
வேலனென் றறிகிலாயோ
அரிதனக் கனமருக னான சரவணனுடன்
அம்புலீ ஆடவாவே
அண்டர் பரவும்புகழ்த் தில்லைமண் டூரனுடன்
அம்புலீ ஆடவாவே. 64

விடநாக முண்டுமிழ்ந் தெச்சிற் படுத்தநின்
மேனிமா சுற்றதென்றோ
மின்னுமணி கிம்புரி மருப்புத லோனுனை
வெகுண்டமொழி யால்மெலிந்தோ
தடமா முடித்தக்க னிட்டசா பத்தினாற்
றளர்வுற்ற பெற்றிகொண்டோ
தண்ணிலவு பகலவனி டத்துநீ பெற்றதித்
தரணிகண் டறியுமென்றோ
மடமாதர் தந்தலைவ ரைப்பிரிய அவர்மனம்
வாட்டியதி னாற்சினந்து
வைவரென் றெண்ணியோ விண்ணிருந் திங்குநீ
வரமனங் கூசுகின்றாய்
அடனாக வுரிதரித் தோனருளு முருகனுடன்
அம்புலீ ஆடவாவே
அண்டர்பர வும்புகழ்த் தில்லைமண் டூரனுடன்
அம்புலீ ஆடவாவே. 65

வெய்யபகு வாயரவு மிழ்ந்தமணி வனமெலாம்
வேய்முத்த மோடொளிர்தர
விளைசாலி முத்தங் களத்தொளிர மாதர்தம்
மேனியணி முத்தமொளிரத்
துய்யவறு வதனமு மலர்ந்தொளிர இருபுறந்
தோகையர்கள் நகையொளிர்தரத்
துங்கவடி வேலொடிவ னுறைதலா லாலயந்
தூநில வெறிக்கவென்றும்



மையிருள கன்றொளிர்செய் தில்லைமண் டூரனொடு
வந்துவிளை யாடுதற்குன்
மனநாணு தென்றுமதி யாதிவனை மருவிலுன்
மான்கறையு மழியுமன்றோ
ஐயமிலை யுய்குவையெ மறுவதன குழவியுடன்
அம்புலீ ஆடவாவே
அயலாரு மரமுநல் லாரங் கமழ்ந்திடும்
அம்புலீ ஆடவாவே. 66

வன்பகைஞ ருக்குடைந் தோர்புவியி லவர்செயும்
வஞ்சனைக் கஞ்சியவரின்
வலியரை யணைந்திடிற் றரியலர் கலங்கிமன
மடிவுறல் வழக்கிதன்றோ
நின்பகையு மழியமகிழ் வெய்திவிண் மீதுநீ
நிலவுவா யிங்குவந்தால்
நெடியவிட வரவினைப் பொடிபட வடர்க்கவொரு
நீலமயி லுண்டிவன்கை
மின்பயிலு மயில்ஞான சக்திமுன்னே மாயை
விறலழியு முனைமறைக்கும்
மேகப் படாமகல விரிகதிர் பரப்புமிவ்
வேலாத லால்விரைந்து
அன்பரக மகலாத அறுவதன குழவியுடன்
அம்புலீ ஆடவாவே
அரமகளிர் பாடுநீ ராருமண் டூரனுடன்
அம்புலீ ஆடவாவே. 67

கள்ளவிழு மல்லிகை விரிந்துபதி எங்குநற்
கந்தம் பரந்துவீசக்
களிகொண்டு வண்டின மிசைக்குமின் கீதநெற்
கழனியிற் பகடுபூட்டி
மள்ளரே ரோட்டுகீ தம்மடப் பாவையர்த
மகவுதா லாட்டுகீதம்
வளர்பைந் தருக்களில் மரீஇகார்ங் குயிலெலாம்
வாய்விட் டரற்றுகீதம்
உள்ளநிறை வுற்றடிய ரோது பதிகந்தினம்
ஓவற நயந்துமகிழ்வாய்
உயர்விண் டலத்துருமு ரற்ற நாளும்மெலிந்
துள்ளங் கலங்கலாமோ

அள்ளலுறு பொய்கைவளர் அறுவதன குழவியுடன்
அம்புலீ ஆடவாவே
அரமகளிர் பாடுநீ ராருமண் டூரனுடன்
அம்புலீ ஆடவாவே. 68

பங்கயன் மாலிந்தி ரன்றினம் போற்றுமிப்
பாலனுயர் திருமாமலர்ப்
பாதங்க ளேதஞ்ச மென்றுபல் லுயிரும்
பராவிநல் லருள்கிடைத்துத்
தங்கறை துடைப்பர்நீ யும்விண்ணி ழிந்திவன்
சரணடையி லுனதுகறையுந்
தங்குமோ மெய்தளர்ந் தெங்கெங் கலைந்தனை
தக்கனிடு சாபமெய்தப்
பொங்கரவ ணிந்தபர னன்றோ உனக்கருள்
புரிந்துசெஞ் சடைபரித்துப்
பொன்றுகலை காத்ததுவ ளர்ந்துதண் ணொளியினைப்
பொழியவர மீந்தததனால்
அங்கயல் குதிக்குநதி சூழுமண் டூரனுடன்
அம்புலீ ஆடவாவே
அருளமு தளித்திடும் அறுவதன குழவியுடன்
அம்புலீ ஆடவாவே. 69

பண்டுநாள் கொண்டஉற வன்றோ சிறக்குமிப்
பன்னிரு கரக்குமரனைப்
பங்கய நிறைந்தசர வணதடமிசைச் சிறிய
பைங்குழவி யாய்வரமுனஞ்
சண்டனை முனிந்தபர னாரழற் பொறியாய்நு
தற்கண் டரித்துநின்னைச்
சஞ்சல மிகுத்துநிறை கலையழிவுறக் கொடிய
தக்கன் வெகுண்டவுரையால்
மண்டுசெஞ் சடைபரித் தாரிந்த வகையினால்
வையத்தில் நீயிழிந்து
வந்துவிளை யாடவுற வுளதுன துளத்திலிதை
வைத்துத் தயங்கிடாது
அண்டர்நா ளும்பரவு தில்லைமண் டூரனுடன்
அம்புலீ ஆடவாவே
அருளமு தளித்திடும் அறுவதன குழவியுடன்
அம்புலீ ஆடவாவே. 70



# 8. சிறுபறைப் பருவம்

**வேறு**

சரவணப வக்குமர வரகரவெ னப்பகர
சதுர்முகனெ முத்தகலவே
சனனமர ணப்பிணித பனனெதிரு றப்பணிய
சலமகற லொக்கவருளும்
பிரணவம றைப்பொருளை யரனறிவு றப்புகலும்
பெருநெறிப டைத்தகுழகா
பிறைபொரும ருப்பொளிரு மொருகரமு கக்களிறு
பிளிறிமுன டுத்தசெயலால்
உரதனநி றத்துறவெ யினர்குலம டக்கொடியை
உரிமையொட ணைத்தமுதலே
உனைவழிப டத்தவறு மசுரர்குல முட்கியிதொர்
உகமுடிவெ னக்கருதவே
சிரமசைவு றத்திசைக ளதிரவுத தித்தொனியில்
சிறுபறைமு ழக்கியருளே
சிவநெறிப ரக்குமொரு பதிவருதி ருக்குமர
சிறுபறைமு ழக்கியருளே. 71

கரியுரித ரித்தரவு நதிமதிப ரித்திலகு
கதிர்சடைவி ரித்துபுடையே
கரகமல மிக்கவியை வொடுசுழல்வு றக்கழல்கள்
கலகலவெ னக்குமுறவே
அரியுமறி தற்கரிய வொருபதமு யர்த்தியொரு
அடியுமிந் நிலத்திலுறவே
அமரர்பர வத்தவரு மகமகிழ்வு றத்துதிசெய்
தரிதரிதெ னப்பகரவே
பரிபுரமொ லிக்கவுட னடமிடுப ரைக்குமிதொர்
பரவசமெ ழுப்பவருள்சேர்
பழமறைசி றக்கவரு கனகசபையிற் பெரிய
பதநடனம் ஆடும் இறையோன்
திரிபுவன முற்றுமிருள் கடிவுறவ ளித்தகுக
சிறுபறைமு ழக்கியருளே
சிவநெறிப ரக்குமொரு பதிவருதி ருக்குமர
சிறுபறைமு ழக்கியருளே. 72

மகரசல திப்புவனி யகிலமும டக்கியெழு
மறநெறிசி தைத்தொழியவே
வளர்மதிக டுக்கவற நிலமிசைத ளிர்க்கவெழில்
வனிதையர்கள் கற்புமிகவே
குகரமலை யத்தமிழி னருவிபெருகிக் குமுறிக்
குவலையம னைத்துமுறவே
கொடியரெழி லித்தொனியி லரவுபுரை யத்தமது
குழுவொடுகு லைந்தொழியவே
பகரவெவ ருக்குமிக வருசிவம தத்தினியல்
பலதிசையு மெட்டிவரவே
பழமறைநி லைக்கதவ முனிவரர்சி றக்கவிளை
பழனமும ளிக்கபலனே
சிகரமலை யக்குறவ ரரிவையை யணைத்தகுக
சிறுபறைமு ழக்கியருளே
சிவநெறிப ரக்குமொரு பதிவருதி ருக்குமர
சிறுபறைமு ழக்கியருளே. 73

### வேறு

அகமார வைப்பசிச் சுக்கிலப் பிரதமையை
யாதிநா ளாயடுத்து
அறுநாளு மேபுனல்ப டிந்துபுல னைந்தையு
மடக்கியர விந்தமனைய
முகமாறு மேயுண் ணிறுத்தியிரு டிகளென்ன
மோனத்தி ருந்துவிரதம்
முறையே யநுட்டிக்கு மடவார்ப்பு ராணம்
முயன்றுகேட் டுயராலயத்
தகமா தரத்தொடுமி ருத்தல்போன்ம் மடைமருங்
கணியணிய தாய்க்குழுமி
யகலாது வெண்கொக் கினம்மழையில் மூழ்கியு
மடக்கமே பெரியதென்றிச்
செகமீ துணர்த்துமண் டூருறையு முருகநீ
சிறுபறைமு ழக்கியருளே
சிகரவரை மகளிதய மகிழவரு குமரனே
சிறுபறைமு ழக்கியருளே. 74



மன்றுளா டுஞ்சங்க ரன்சடா மகுடமிசை
மலரவன் மகவுமுனிவால்
மனமுடைந் துடல்தளர வந்தடைக் கலமென்று
வைகமற் றாங்கணுறையும்
கன்றுகோ பக்கனல் பிறக்கும் பணாவினைக்
கண்டுபின் னும்பயந்து
கவலையுற வைங்கரன் றன்கோ டெனத்துதிக்
கையினையுயர்த்தல் நோக்கி
இன்றுவா ணாள்முடியு மென்றுமெய் நடுங்கமுன்
இற்றகோ டிதுவன்றெனா
இயலுணர்ந் தகலநிலை கொள்ளுமதி குணிலதாய்
எந்தைகைத் துடியடிக்கச்
சென்றமா தவபால தில்லைமண் டூரனே
சிறுபறைமு ழக்கியருளே
சிகரவரை மகளிதய மகிழவரு குமரனே
சிறுபறைமு ழக்கியருளே. 75

மெய்யரந் தைப்படப் பாவமுன் னாள்செய்து
விளைவையெண் ணாதுஇந்நாள்
மெய்ந்நெறியு ணர்ந்துவெள் ளிலைவேல் பதித்துதெய்
வேந்திரன் மேனியென்ன
வெய்யதீ வினைகளுக் கீடாக வேவென்
விளங்குமுள் குத்தியீர்க்க
வில்லெறி மயிற்கலா பஞ்செருகி யொப்பில்பல்
வேறுபாற் காவடிசுமந்
தையநின் சரணன்றி யின்றுவே றில்லையென
ஆலயம் வந்துபல்லோர்
அஞ்சலி புரிந்துநட மாடபண் பாடநல்
லருளமுத ளிக்குமெங்கள்
செய்யபன் னிருகரத் தில்லைமண் டூரனே
சிறுபறைமு ழக்கியருளே
சிகரவரை மகளிதய மகிழவரு குமரனே
சிறுபறைமு ழக்கியருளே. 76

என்புதோல் போர்த்தஉட லுட்குழிவி ழுந்தொளி
இழந்தவிழி என்றுமானா
எரிவடவை யொத்தபசி யோடலம ருங்கொடும்
இடாகினிப் பேய்களெல்லாம்

இன்பொ டுதிரங்குடித் தெல்லையில் நிணக்கூழை
ஏப்பமுற வாரியுண்டு
எம்பசி தணித்தகுக னார்வாழ்க வாழ்கவென்
றெங்குந் துணங்கையாட
வன்புறசு ரப்படைகள் மலைகுவிந் தாங்குகள
மருவவுதி ரக்கடலினுள்
வலியபடை தொட்டுவிண் ணவர்சிறையு மீட்டுவா
னுலகுகுடி யேற்றுவித்தாய்
தென்பொதிகை முனிவனுக் கன்றுதமி ழோதினாய்
சிறுபறைமு ழக்கியருளே
தெங்குகமு கெங்குமுயர் தில்லைமண் டூரனே
சிறுபறைமு ழக்கியருளே. 77

சந்தன நறுந்தழை யுடுத்துமெல் லிடையினிற்
சாருமே கலையதாகச்
சண்பகம் மல்லிகை குராமலர்க ளோடுபல
தளிர்களும் பெய்துகட்டிக்
கந்தமுறு சுனைமலர் அணிந்துசந் தனமுடன்
கஸ்தூரி புனுகுசாத்திக்
கழைமுத்து மணிவடம் பூண்டுவளை பாடகம்
கல்லென் றொலிக்க நின்று
சந்ததந் தொண்டக முழக்கிஅர மகளிருந்
தலைகுனிய மயில்களெல்லாம்
சாயல்பயி லக்குறிஞ் சிப்பண் ணிசைத்தெயினர்
தையலர்கள் குரவையாடச்
சிந்தையிலு வந்துமகிழ் வெய்துமுரு கேசனே
சிறுபறைமு ழக்கியருளே
தெங்குகமு கெங்குமுயர் தில்லைமண் டூரனே
சிறுபறைமு ழக்கியருளே. 78

சக்கரமெ டுத்திரவி கதிரினைம றைத்துத்த
னஞ்சயனை யாண்டமுதலோன்
தன்னறப் போர்ச்சயப் பேரிகைமு ழக்கநின்
தந்தைமுப் புரமெரித்துச்
செக்கருறு மிந்துச் சடாடவியு மாடநற்
றிண்டிமமு ழக்கவின்னல்
செய்கயமு காசுரனை வென்றுகரி மாமுகச்
செம்மல்பே ரிகைமுழக்கத்



தக்கனைமு டித்ததுணை வன்முழவ டித்திடத்
சமரில்வெஞ் சூரைவென்ற
சத்ருசங் காரவோங் காரநின் வெற்றிமுர
சார்த்திடத் தாழ்த்தலேனோ
திக்கயமு ழக்கெனவொ லிக்கமண் டூரனே
சிறுபறைமு ழக்கியருளே
திசைமாமு கன்றனை முனிந்துசிறை யிட்டகுக
சிறுபறைமு ழக்கியருளே. 79

அட்டதிக் குஞ்செவிடு படவசுரர் கிடுகிடென்
றலமரவு ணர்ச்சிவெள்ளத்
தமரர் மூழ்கிக்கரங் கூப்பிமெய் விதிர்விதிர்த்
தானந்த நடனமாடி
இட்டநித் தியபோக மெய்தினோ மின்றொடெம்
இடும்பையெல் லாமறந்தோம்
எனவார்த்தி டத்தரும தேவதை களித்துநின்
இணைமலர் துதித்துநிற்கத்
துட்டநிக் கிரகம் புரிந்தருள்செய் சிவகணஞ்
சூழநல் வஞ்சிசூடிச்
சுடரயில் விளங்கபோர்ப் பறைமுழங் கித்திறற்
சூரனெயில் சென்றுடற்றிச்
சிட்டரைக் காத்தஉயர் தில்லைமண் டூரனே
சிறுபறைமு ழக்கியருளே
திசைமா முகன்றனை முனிந்துசிறை யிட்டகுக
சிறுபறைமு ழக்கியருளே. 80

## 9. சிற்றிற் பருவம்

### வேறு

கத்தும் புணரி கதித்ததிரைக்
கையா வலைத்துக் கரையேற்றிக்
கனக மலையிற் குயிற்றியொளி
காலும் மணலைக் கைநோவ
முத்தந் தெரித்துக் கொழித்துவரி
முழக்கில் வெரீஇ முறையேநாம்
முடித்த அருமை யோராயோ
முகமுஞ் சற்றே பாராயோ

**பித்தன் குழவி யென்றுலகம்**
**பேசும் மொழிமேற் கொண்டாயோ**
**பிறவி சிதைக்கும் பெருங்கருணைப்**
**பேறே பெருமை யீதாமோ**
**சித்தந் தெளிய அருள்மண்டூர்ச்**
**செல்வா சிற்றில் சிதையேலே**
**சிவசண் முகனே கவுரிதிருச்**
**சிறுவா சிற்றில் சிதையேலே. 81**

காக்குங் கருணைக் கடலென்றே
கருத்தி லிருத்திக் கடைத்தேறக்
கடையேம் விழைந்துன் கழலிணையே
கதியென் றரற்றக் கழுமல்துடைத்
தாக்கங் கருதி ஆளாயேல்
ஆரைச் சதமென் றணுகியெம
தரிய குறைகள் சொல்லிமனம்
ஆறி மகிழ்வோ மடைவாக
வீக்கும் பரிய வேலிபயிர்
விளைவை யோரா தழிவுசெயின்
வேறு வழியு முண்டாமோ
விமலா ஈது முறையாமோ
தேக்கும் புகழ்சால் மண்டூர்வாழ்
செல்வா சிற்றில் சிதையேலே
சிவசண் முகனே கவுரிதிருச்
சிறுவா சிற்றில் சிதையேலே. 82

கொக்குத் தடிந்தாய் பகிரண்ட
கூட மழித்தாய் கூடல்நகர்
குறுகிச் சமயப் போரிலமண்
கூட்ட மொழித்தாய் குன்றமொடு
கக்கக் குருதி சூரனுடல்
கனன்று பிளந்தாய் கஞ்சமலர்க்
கடவுள் வெருவக் குட்டியருங்
காவற் சிறையி லிட்டாய்நின்
ஒக்கப் புவன முற்றுமெவ
ருள்ளா ருந்தன் திறனெல்லாம்
ஒழியா தோநா மமைத்ததிரை
உவரி மண்சிற் றிலையழிக்கிற்



திக்குப் புகழ்சால் மண்டூர்வாழ்
செல்வா சிற்றில் சிதையேலே
சிவசண் முகனே கவுரிதிருச்
சிறுவா சிற்றில் சிதையேலே. 83

கொந்தார் கடப்பந் தாரணியுங்
குமரா உந்தன் கோயில்வலங்
கொள்ளா ரனந்தங் குரைகழலிற்
கொய்மா மலர்க ளிட்டுவரம்
தந்தா ளைய வென்றுசிரந்
தாழ்ந்தா ரின்னு மனந்தநிதம்
தங்கா நிதியில் மயங்கிமனஞ்
சாம்போ துணருந் தன்மையினர்
அந்தோ அனந்த மனந்தமிவர்
அகத்தின் திமிரஞ் சிதையாதுன்
அடியேஞ் சிற்றில் சிதைப்பதுனக்
கழகோ அறமோ அருளாமோ
சிந்தா வளஞ்சால் மண்டூர்வாழ்
செல்வா சிற்றில் சிதையேலே
சிவசண் முகனே கவுரிதிருச்
சிறுவா சிற்றில் சிதையேலே. 84

பூவிற் பொலியும் புதுநறவப்
பொற்றா மரைநேர் பதமலரிற்
புழுதி படிந்த லழகோநற்
புனலு மாட்டி யணிபூட்டிச்
சேவித் துயரு நெடுமாடத்
தெருவி லிட்ட சிற்றிடையார்
செயலு மறியா யோஅவரின்
சினமுங் குறியா யோமணலைப்
பாவிப் பலகா லலுத்திடுமிப்
பாவி யேங்கட் குருகாயோ
பகலைப் புரையும் பானிலவிற்
பக்தர் சூழப் பவனிவரும்
தேவிற் சிறக்கும் மண்டூர்வாழ்
செல்வா சிற்றில் சிதையேலே
சிவசண் முகனே கவுரிதிருச்
சிறுவா சிற்றில் சிதையேலே. 85

நாயே முந்தன் தொழும்பிலொரு
நாளுங் குறையோ மறியோமுன்
நளினப் பதமே தஞ்சமென
நாடு மடியார் இன்னலுறல்
பேயே முணரா திழைத்தபெரும்
பிழைகள் பொறுத்துப் பேர்பரவை
பிரியா தமைத்த சிற்றிலைநீ
பேணா தழிக்கிற் பேறாமோ
தாயே யன்றோ மக்கள்பிழை
சகித்தூ ணூட்டித் தாலாட்டிச்
சலியா அன்போ டணைப்பதருள்
தழைக்க ஈச னீந்ததிருச்
சேயே தில்லை மண்டூர்வாழ்
செல்வா சிற்றில் சிதையேலே
சிவசண் முகனே கவுரிதிருச்
சிறுவா சிற்றில் சிதையேலே. 86

பிறவிக் கடலி லாழ்ந்துதுயர்ப்
பெருமா ருதத்தி லுலைந்துமலப்
பெருக்கில் மோதி நைந்துநெறி
பிறழ்ந்து நீந்தி அறியாமைச்
சுறவுக் கஞ்ச உன்னருளாந்
தூய திரையிக் கரையேற்றத்
தோற்றும் உடலாஞ் சிற்றிலைநீ
துணையாய் நின்று காவாயேல்
உறுமெப் பழியு முனக்கன்றி
உலகி லார்க்கு முண்டாமோ
உரைப்பா ருரைக்கும் பொருளெல்லாம்
ஓவா துணர்ந்து உயர்ந்தவறத்
திறமிக் குயரும் மண்டூர்வாழ்
செல்வா சிற்றில் சிதையேலே
சிவசண் முகனே கவுரிதிருச்
சிறுவா சிற்றில் சிதையேலே. 87

மேனாள் ஸ்ரீராமன் பாதம்
மேவச் சிலையோர் பெண்ணாகி
வெகுண்டு முனிவ னுரைத்தமொழி
விலக விலையோ வினைதீர்மெய்ஞ்



ஞானா திபனும் பரவைமனை
நயந்து பாதஞ் சிவப்பூர
நலியு மடியார் குறைதீர
நடந்த திலையோ உனதருளுக்
கானா மணலா லடியோமிங்
கமைத்த சிற்றி லழியாதெம்
அயலே நின்று காப்பதுநல்
அறமேயன்றோ அமரர்புகழ்ச்
சேனா பதியே மண்டூர்வாழ்
செல்வா சிற்றில் சிதையேலே
சிவசண் முகனே கவுரிதிருச்
சிறுவா சிற்றில் சிதையேலே. 88

கல்லா மனிதர் அறியாமைக்
கசடைச் சிதையாயோ பலநூல்
கற்றுந் தெளியார் அஞ்ஞானக்
கல்லைச் சிதையா யோஅடியார்
பொல்லா வினைகள் சிதையாயோ
புன்மை சிதையா யோபொருளைப்
பொன்றுந் துணையும் போற்றியறம்
போற்றா ரிதயஞ் சிதையாயோ
பல்லா ரிகழ முன்செய்த
பாவஞ் சிதையா யோநின்னைப்
பற்றிப் பரவா திருக்குமனப்
பான்மை சிதையா யோபடரும்
அல்லார் பொழில்சூழ் மண்டூர்வாழ்
அரசே சிற்றில் அழியேலே
அண்டங் கடந்த அருளுருவே
அடியேஞ் சிற்றில் அழியேலே. 89

தொடருங் கொடிய கன்மவினை
சூழ வாழ்விற் சுகமென்றுந்
துய்க்கா தலைந்து மெலிந்துனது
தூய பாதஞ் சரணென்று
படரும் அடியார் சன்னிதியில்
பல்லா யிரவர் அவர்துயரப்
பவ்வஞ் சிதையா தருமணலாற்
பலநாள் இழைத்த சிற்றிலையெம்

இடருங் கருதா தழிப்பதுநல்
இயலோ அயரும் பிடிக்குருகி
இலகுந் தெங்கங் குலைதிருகி
இனிதே ஊட்டுங் களிறுலவும்
அடரும் பொழில்சூழ் மண்டூர்வாழ்
அரசே சிற்றில் அழியேலே
அண்டங் கடந்த அருளுருவே
அடியேஞ் சிற்றில் அழியேலே. 90

## 10. சிறுதேர்ப் பருவம்

### வேறு

பொருசாது ரங்கமணி யணியாக நின்றுஅமர்
பொரவா தரத்துமிகவே
புவிமாத கங்குளிர மறமாய்ந்தி டத்தருமப்
பொலிவே கதித்ததெனவே
வருமாதி ரங்களசை வுறமேலெழுந் துகள்விண்
மணிதே சொழிக்கவயலே
மழையே கடுக்கவித விதமே வளைத்துசிலை
வரிநா ணிழுத்துவிடுபேர்
உருமே றெனப்பெரிய குருபூமியிற் சமர்செய்
உரவோன் றனக்குவிரைவே
உறுதீமை யுன்னியவ னுயவேர் கொடிஞ்சிரதம்
உலையா துருட்டியருளும்
திருமால்த னக்குமரு மகனா யுதித்தகுக
சிறுதே ருருட்டியருளே
திகழ்ேர் நடத்துகழ னிகள்சேர் பதிக்குழக
சிறுதே ருருட்டியருளே. 91

குருவே யெனப்பரவு குறுமா முனிக்குமொரு
குருவாயு ரைத்தகுமரா
குறமா னிடத்துமயல் குறையாது நித்தமவர்
உறைகோயில் புக்கவதனால்
பொருவேல் நிகர்த்தவிழி மடவா ரெடுத்தசுடர்
பொலிதீப மங்கையொளிரப்
புலனே மயக்கியவர் நிலையே தளர்த்துமப்
பொழுதே கருத்திலுணரா



மருவே செறித்ததிரு மலர்வாய் சிரித்துநிறை
மதியோர் முகத்தினழகார்
மதவா ரணத்திறைவி யுறுமூடலைக் கடிது
மகிழ்வா யகற்றுமழகா
செருவே தணித்தஉயர் திறனே விளக்கியொளிர்
சிறுதே ருருட்டியருளே
திகழேர் நடத்துகழ னிகள்சேர் பதிக்குமர
சிறுதே ருருட்டியருளே. 92

சலமே மிகுந்தமகி தலமே லெடுத்துபல
சதகோடி யுற்றசனனஞ்
சகலா கமத்துமிக வரிதே யெனக்கருது
சடலந் தரித்தவதனால்
மலவே ரறுத்தரிய விழிநீ ருகுத்துதவ
வயவே லியைத்தளர்வற
வலமே நிறுத்தமன வயலே செழிக்கமறு
வறுஞான நற்பயிரிலே
நலமே கதித்தஉயர் கதிவீட ருட்கனியை
நவமா யளிக்குமுதலே
நவைதீர் கதிர்ப்பரிதி எழுமா ரதப்புரவி
நடையே தடுக்குமியலாய்ச்
செலவா னகத்தணவி வளர்கா பதிக்குமர
சிறுதே ருருட்டியருளே
செருவே தணித்தஉயர் திறனே விளக்கியொளிர்
சிறுதே ருருட்டியருளே. 93

### வேறு

மாதங்க வரைமார்பில் வரிவண் டலம்புமலர்
மாலைநின் றாடவறுமா
வதனத் திலங்குவிழி கருணைப் பிரவாகம்
வழிந்தொழுக மகவானருள்
மாதங்க மாகமகிழ் வோடமர வனவேடர்
மடவரலு மருகிலார
மயில்மீதி லாரோக ணிக்குமுரு கேசநின்
வாயில்வந் தன்பரெல்லாம்

வேதங்க ளுங்கண்டி லாதஉன தளவிலா
வெற்றிக ளுரைத்துபலவாம்
வேறுவே றானவாச் சியமுழக்கிப் பவனி
வீதிவர வெண்டி நின்றார்
சீதஞ் செயுஞ்சோலை திகழுமண் டூரனே
சிறுதே ருருட்டியருளே
சிரமைந்த ருக்குமொரு குருமைந்த னேயரிய
சிறுதே ருருட்டியருளே. 94

வேதா கரத்தெழுத் தாணிகோ ணாதுதிறல்
விண்டுவின் தொழில்கெடாது
வெய்யசீற் றத்துருத் திரர்வினை கெடாதுசதுர்
வேதம் முழக்கறாது
போதார் தொடைப்புரந் தரனரசு கோடாது
புவியில்மனு முறைகெடாது
பொங்குதண் டமிழாழி தோய்ந்தறிஞர் பொழிகவிப்
பொலிவென்ன உயர்விசும்பு
மீதார் முகிற்குல முகுக்குமழை குறையாது
வெய்யவன் கதிர்தவாது
விஞ்சுமைம் பூதங்கள் பிறழா தனைத்துமருள்
வெள்ளத் தியக்குமுதலே
சேதாம்பல் விரிசுனைத் தில்லைமண் டூரனே
சிறுதே ருருட்டியருளே
சிரமைந்த ருக்குமொரு குருமைந்த னேயரிய
சிறுதே ருருட்டியருளே. 95

பொங்குமலை கடலெனவெ ழுந்துமா யச்சமர்
புரிந்தவசுரப் படையெலாம்
புவிமிசை யுருண்டுசிதை வுண்டுபிண மலைகளாய்ப்
போகவாங் கவுணனொல்லை
நங்குல மினித்தழைத் தோங்கவுந் தேவர்மெய்
நடுங்கியின் னேயழியவும்
நவஅமிர்த சீதமந் திரகூட மீண்டியென
நவமணி யிழைத்தசெம்பொற்
துங்கவிந் திரமாய ஜாலரத மெனுமவன்
றூயநற் றேரையுய்க்கச்
சொன்னெறித வாதுமீண் டதுமுன்ன ரமரினிற்
துஞ்சின ரெழுந்துபொரவே



செங்கர முயர்த்தியது மீளா துரைத்தவா
சிறுதே ருருட்டியருளே
சிரமைந்த ருக்குமொரு குருமைந்த னேயரிய
சிறுதே ருருட்டியருளே. 96

**வேறு**

அடுத்து மும்மல எயிலது தழலெழ
அமரர்கள் தினம்வாழ
எடுத்த விந்தைகொள் அரனது ரதமென
இசைமணி ஒலிஆர்ப்ப
கடுத்த வஞ்சகர் கயவர்கள் செவிபடக்
கதிகெட நின்றேங்க
உடுத்த செஞ்சுடர் உடைஒளி வீசிட
உருட்டுக சிறுதேரே
உழவில் திருநின் றோங்குமண் டூரநீ
உருட்டுக சிறுதேரே. 97

செழித்த பைம்பொழிற் கரிமுக னுறுபதி
சிறந்திடு குடவீதி
பழித்த பேர்க்குமுத் திரையெறி சக்தியின்
பதிவளர் குணவீதி
அழித்து மறமதை அருளறங் காத்திடும்
அரிவதி வடவீதி
ஒழித்து நலியிருள் உனதொளி சுடர்விட
உருட்டுக சிறுதேரே
உழவி னால்திரு ஓங்குமண் டூரநீ
உருட்டுக சிறுதேரே. 98

திரைக்கு ளங்கெழுந் தருளியு முறுபல
திசைகளு மருள்சோதி
விரிக்கு மற்புதத் துனதிணை மலர்தொழ
மிகுத்தனர் பலகோடி
விரைக்க டம்பல ரணிகுக னிததுதி
வெளிப்படு மெனஅன்பால்
உரைக்கு மன்பர்தம் உளங்கொள வந்துநீ
உருட்டுக சிறுதேரே
உழவி னால்திரு ஓங்குமண் டூரநீ
உருட்டுக சிறுதேரே. 99

பரக்க நற்றமிழ் படிமிசை யாசறப்
    பழமறை தினம்வாழச்
சுரக்க வொப்பில்பல் வளனொடு மாமழை
    கொடுத்திடும் அறமோங்கக்
கரக்க வன்பிணி மிடிஇகல் தீவினை
    கவலைகள் பொச்சாப்பு
உரக்க வார்த்திடும் புள்ளுயர் துவசநீ
    உருட்டுக சிறுதேரே
உழவி னால்திரு ஓங்குமண் டூரநீ
    உருட்டுக சிறுதேரே. 100

**மண்டூர்ப் பிள்ளைத்தமிழ் முற்றிற்று**

